வெளியீடு எண் 202.

உ

குருபாதம்

மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த

# திருவாசகம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

இருபத்தைந்தாவது மகாசந்நிதானம்

ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள்

திருவுள்ளப்பாங்கின்வண்ணம்

வித்துவான், ச. தண்டபாணி தேசிகர்

எழுதிய

நூலாராய்ச்சி, குறிப்புரைகளுடன்

வெளியிடப்பெற்றது.

1949.

# திருவாசக உள்ளுறை

# மதிப்புரை

இந்திய கவர்னர் ஜெனரல் மாட்சிமைதங்கிய

## சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரவர்கள்

திரு. டி. கே. சி. அவர்கள் திருவாசக அன்பர்களில் என்னை ஒருவனுகக் குறிப்பிட்டு எழுதியிருந்தால் அது என்பால் அவருக்குள்ள பட்சபாதமேயொழிய வேறல்ல. நான்படித்த தமிழ்ப் புத்தகங்கள் கணக்கு வெகுகுறைவு. ஆயினும் என் அதிர்ஷ்டவசத்தால் வெகுநாளைக்குமுன்பு ஒரு கோர்ட்டு விவகாரத்தில், வாதம்நடத்தப்போயிருந்த காலத்தில், எனக்கு எதிர்க்கட்சியாக வந்திருந்த ஒரு போலீஸ் சப்இன்ஸ்பெக்டர் திருவாசகத்திலிருந்து மணி மணியாகப் பாட்டுக்கள் எடுத்துப் பாடியதைக் கேட்டு, முதல் முதலாக, திருவாசகத்தில் எவ்வளவு அமுதவெள்ளம் நிறைந்து கிடக்கிறது என்பதை அறிந்தேன். பிறகு, வெகுநாள் கழிந்தபின் சிறைச்சாலையில் ஓய்வுபெற்றிருந்த பொழுது திருவாசகப் புத்தகமும் வேறுசில நூல்களோடு வைத்துக்கொண்டிருந்தேன். மாணிக்கவாசகப் பெருமானுடைய பாட்டுக்கள் அக்காலத்தில் எனக்கு மிகுந்த ஆறுதல்தந்தன. ஆயினும் சிற்சில இடங்களில் பொருள் விளங்கவில்லை. திரு. வி. கல்யாணசுந்தரமுதலியாரவர்களைப்

பிறகு ஒருநாள் கேட்டபோது, திருவாசகத்திற்கு உரை யாரும் எழுதவில்லை என்று சொன்னார்கள். அதற்கு ஏதோ காரணமும் சொன்னதாக ஞாபகம். இப்போது தருமபுர ஆதீன வெளியீட்டைக் கண்டதும் மிகத் திருப்தியடைந் தேன். முகவுரை எழுதும் அளவுக்குத் தகுந்த படிப்பு, ஞானம், பக்தி ஏதும் எனக்கு இல்லை. ஆதீனத்து மகா சந்நிதானத்திலிருந்து இந்நூல் எனக்கு அனுப்பப் பட்டதே ஒரு பெரும்பாக்கியம்.

# பாராட்டுரை

திருக்குற்றாலம்

## ரசிகமணி, டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள்

தென்னிந்தியாவில் ஒரு முக்கியமானகாட்சி தரும புரத்து மடாலயங்கள் என்று அடிக்கடி நான் சொல்லுவ துண்டு. ஆகவே ஆவணிமூலத்திருநாளன்று அங்குவந்து ஸ்தலத்தை, ஆலயத்தை, திருக்கூட்டத்தை, மாணவர்களை, ஸ்ரீ சொக்கநாதருக்கான தெய்வீக வழிபாட்டை எல்லாம் கண்ணாரக்கண்டு களித்தேன்.

மகாசந்நிதானம் பிரசாதமாய்க் கொடுத்தருளிய திரு வாசகப் பிரதியையே இப்போது உபயோகித்துவருகிறேன். சென்றவிடமெல்லாம் உடன்செல்லுகிறது. விரித்துப் புரட்டிப்படித்தால் காகிதம் உதிர்ந்துபோகுமே என்ற பயம் இல்லை. கடிதமும் உயர்ந்தது. எழுத்துக்கள் தெளிவு. மிக்க திருப்தி.

அடிக்குறிப்புகள் மிக்க பிரயோசனம். சந்தேகம் வந்தவுடன் கீழே பார்த்துக்கொள்ளலாம். அத்தகைய குறிப்புகளைப் புத்தகத்தின் அனுபந்தமாகக் கடைசியில் போடுவதில் அவ்வளவு பிரயோசனம் என்று சொல்ல முடியாது. சந்தேகம் இருந்துவிட்டுப் போகட்டுமே என்று ஒத்திப்போட்டு சந்தேகம் நித்திய சந்தேகமாகவே இருந்து விடும். அடிக்குறிப்பாகப்போட்டதே நல்லமுறை.

பாடல்களின் கவிஉருவம் துலங்கும்படியாகச் சீர்பிரித் தும் போட்டிருக்கிறது. பொருள்காணுவதில் கஷ்டம் ஏற் படாதபடி, சந்திபிரித்தும் போட்டிருக்கிறது. பழைய முறைப்படியும் நன்னூல் தொல்காப்பியத்தின்படியும்,

"வெதுவெமைப் பணிகொளு மா றது கேட்போ
மெம்பெரு மான்பள்ளி யெழுந்தருளாயே"

இவ்வா று சந்திசேர்த்து அச்சிட்டுவிட்டால் வாசிக்கின்ற வர்களைத் திணறஅடித்துவிடுகிறோம் என்ற எக்களிப்பு ஏற்படலாம். ஆனால் அறிவுப்புலனுக்கு எளிதாய் இராது. அந்தக்கஷ்டத்தினாலேயே கண்ணுக்கும் அழகாயிராது.

"எதுஎமைப் பணிகொளும் ஆறது கேட்போம்
எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே."

இது கண்ணுக்கே உவந்ததாய் இருக்கிறது. நம்முடைய பதிப்புத்தான் அழகு. மிக்க சந்தோஷம்.

கூடியவரை சீர்கள் நிற்கும் நிலைகளைக்காட்டியும், சந்திகளை ஒதுக்கக்கூடிய இடங்களில் ஒதுக்கியும், பாடல் களின் உருவத்தைத் தெளிவுபடுத்திக் காட்டியிருக்கிறது. பொருள்உணர்ச்சியோடு பாடுவதற்கு இந்த அமைப்பெல் லாம் இன்றியமையாத காரியமே.

திருவாசகத்தை ராஜாஜி அவர்கள் ரொம்பவும் உள் ளுணர்ந்து அனுபவிக்கிறார்கள். எத்தனையோ வேலைகள். 56 தேசங்கள் அல்ல, 556 தேசங்கள்வந்து அவர்களுடைய யோசனைகளை நாடுகின்றன. நேரத்தை விநாடிக்கணக்கில் விநியோகம் செய்யவேண்டியிருக்கிறது. இந்தநெருக்கடியில் திருவாசகப் பிரதியைப்பார்த்துப் படித்து அனுபவிக்க முடிகிறது. ஏதோ சம்பிரதாயத்துக்கு என்று இல்லை. உண்மை உணர்ச்சியோடு ஒட்டி மாணிக்கவாசகரது இதயப் பாங்கை அனுபவிக்கிறார்கள்.



திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்
25-வது மகாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக ஞானசம்பந்த பரமாசாரியசுவாமிகள்

# முகவுரை

தென்னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்
றை என்பதை உறுதியாக வுணர்த்தும் ந
நவாசகம் ஒன்றே. இதனை இயற்றியவர்
ணிவாசகராகிய ஞானானுபவப்பெருந்தகை.
ார் திருவாதவூரில் இறைவன் திருக்கோலத்
ண்டார்கள். சிவானந்தப் பெருவெள்ளம் சிந்த
ல் நிறைந்தது. அதனை உலகிற்கும் அளி
ண்டும்; உலகமுழுவதுமே அன்பு வெள்
ய்ந்து அருட்பயிர் தழைத்துச் சிவானந்தபோ
ருகல்வேண்டும் என்ற திருவுள்ளக்கிடக்
வனருளால் இவர்கட்கு உண்டாக இந்த
ழந்தது.

இத்தகைய இறைபணி நிற்றற்கு எத்தனை
றவிகளிற் செய்த புண்ணியம்காரணம்; ஆதல
வர்கள் உள்ளம் பள்ளம் புகு புனல்போல் இள
ாட்டே இறைவனிடம் இணைப்புண்டிருந்
றைவன் குருந்தடியில் மருந்தாகக் குருத்
ணி தாங்கி ஆட்கொண்டபின் பிணைப்புண்ட
ரா இன்பப் பெருவெளியில் உண்ட
ராவின்ப அமுதவாரிதியில் அமிழ்ந்திருந்

செய்தார்.* அடிகளார் அதனையும் இன்பமாகக் கொண்டார். இன்ப அநுபவத்தில் எழுந்த கனிவே இந்தக்கவிதைகள். ஜீ யூ போப் போன்ற மேனாட்டறிஞர்கள் வருத்தத்தால் விளைந்த கனிவு என்பர். சைவ வரம்பறிபுலவர்கள் அங்ஙனம் கூறார். இது போன்ற நிலையொன்றைச் சேக்கிழார் "தொண்டரை விளக்கங் காண்பான்... செய்தார்" என்பர். இங்ஙனம் விளக்கங்காணப் பெற்ற அடிகளாரின் மணிவாக்கே இந்நூல்.

பலர் போற்றச் செய்யப்பெற்றது அன்று இந்நூல்; பலர் வாழச் செய்யப் பெற்றது. ஆதலால் அமிழ்தினும் இனிய தமிழிலே இந்நூலை ஆக்கினர். இனிமைத் தமிழிலன்றி எதில் கனிவைக் காண முடியும்?

இந்நூலுக்கு ஒரு அழகான திருத்தமானபதிப்பு வேண்டுமென்று தருமையாதீனத்து இருபத்தைந்தாவது குருமூர்த்திகள் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் திருவுள்ளம் பற்றினார்கள். சந்தனப் பொதியத் தடவரை அருவியைப்போலத் தண்ணென்ற ஒழுக்கோடு இழுமென இழிதரும் செந்தமிழ்ச் சுவையை உண்டு தேக்கெறியும் ரசிகமணி, டி. கே. சி. அவர்களும் திருவாசகப் பதிப்பின்

---

*'மூலையிற் கிடந்தாரை முற்றத்தே விட்டவர் சாலப்பெரியர் என்று உந்தீபற, தவத்திற்றலைவரென்று உந்தீபற' என்பது திருவுந்தியார்.

இன்றியமையாமையையும், அழகாக - வேண்டிய குறிப்புக்களோடு சீர்பிரித்துப் படிக்க எளிமையாக அச்சிடவேண்டும் என்பதையும் கடிதமூலம் மகா சந்நிதானமவர்களுக்கு விண்ணப்பித்துக் கொண்டார்கள். அவ்வாறே இப்பதிப்பு, செந்தமிழ்ச் சொக்கர் திருவாசகத்தேனை அருந்தப் பிரம்படி பட்ட திருநாளாகிய ஆவணி மூலத் திருநாளில் (1—9—49) அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் Dr. S. G. மணவாளராமாநுஜம் அவர்கள் M. A., Ph. D. D. I. C. தலைமையில், திருவாசக வெளியீட்டுவிழாவை ரசிகமணி டி. கே. சி. அவர்கள் தொடங்கிவைக்க, அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிவாளர் (ரிஜிஸ்தரார்) S. சச்சிதாநந்தம்பிள்ளையவர்கள் B. A. L. T. விளக்கச் சொற்பொழிவு செய்ய வெளிவந்தது.

இப்பதிப்பில் நூலின்முன்னர் நூலாராய்ச்சி ஒன்று மிகச்சுருக்கமான முறையில் எழுதிச் சேர்க்கப்பெற்றுள்ளது. இது பலவேறு ஆசிரியர் கருத்துக்களையும் ஆராய்ச்சியையும் துணைகொண்டு எழுதப்பெற்றது. ஜீ. யூ. போப் போன்ற பிறமத ஆசிரியர்கள் தம்மதக் கண்ணைக்கொண்டு அடிகளாரையும் அவர்கள் நூலையும் கண்டுகூறிய கருத்துக்களில் நமது மரபுக்குப் பொருந்துவனவே எடுத்துக்காட்டப்பெற்றன.

ஒவ்வொரு பாடலின் அடியிலும் தேவையான குறிப்புக்களும், கொண்டு கூட்டும், வரலாறுகளும்

கொடுக்கப்பெற்றுள்ளன. இறுதியில் ஆராய்ச்சியாளருக்குத் துணையாக அரும்பத முதலியவற்றின் அகராதி கொடுக்கப்பெற்றுள்ளது.

முதன்முதலில், மாட்சிமைதங்கிய நமது இந்திய முதல் கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்கள் திருவாசகத்தில் தோய்ந்த வரலாறும் ரசித்த பண்பாடும் அமைந்த மதிப்புரை இந்நூலை அணிசெய்கின்றது.

அடுத்து, நமது ரசிகமணி அவர்களுடைய ஆழ்ந்த அநுபவக் கருத்துநிறைந்த பாராட்டுரை அழகு செய்கிறது.

இப்பதிப்பு வெளிவருங்காலத்து ஆதீனத்தைச் சார்ந்த வேளூர் தேவஸ்தானத்தில் நமது திருவாசகமணி அவர்கள் திருவாசகத்தைப்பற்றிப் பேசிய போது பெரடிரிக்ஹெய்லர் என்னும் ஜெர்மனிய அறிஞர் இந்நூலைப் பாராட்டியதாகக் குறிப்பிட்டார்கள். அந்தப்பகுதியைக் குறித்துக் கொடுக்கும்படி வேண்டிக்கொண்டேன். அவர்கள் யான் விடுத்த போப்புக்கருத்துக்களையும், ஹெய்லர் கருத்துக்களையும் திரட்டி ஆங்கிலத்தில் ஒரு தொடர்புரையையே வழங்கிவிட்டார்கள். அதுவும் இம்முகவுரையின் இறுதியிற் சேர்க்கப்பெற்றுள்ளது.

இவ்வாறு இந்தப்பணி இனிது நிறைவேறப் பாராட்டி மதிப்புரை வழங்கிய உலகப் பேரறிஞர்களுக்கு என் நன்றி உரியதாகுக.

வழக்கம்போல இந்தப்பணி செவ்வனே முற்றுப்பெறத் துணைபுரிந்த வித்துவான் பு. சி. புன்னைவனநாத முதலியார், ஆறுமுக தேசிகர் முதலிய அன்பர்களுக்கும் என்மனமார்ந்த நன்றி.

இந்தப்பணியில், அடியேனை ஈடுபடுத்தி அடிக்கடி ஊக்கியும் உணர்த்தியும் வந்த ஸ்ரீ-ல-ஸ்ரீ மகா சந்நிதானமவர்களின் பெருங்கருணைத் திறத்திற்கு அடியேன் என்ன கைம்மாறு செய்யவல்லேன். நம்மையும் ஓர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த அம்மை எனக்கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே என்று பராசத்தி வடிவான பெருங்கருணையை அகங்குழைய வியப்பதன்றி வேறு என்ன செய்ய இயலும்.

இவ்வெளியீட்டைக் காணும் சைவப்பேருலகம் தம்கருத்துக்களை அறிவிப்பின் அடியேன் திருந்தவும் அடுத்த பதிப்பில் திருத்தவும் இயலும் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேன துள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேது மில்லாதென் செய்பணிகள் கொண்டருளுந்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

தருமபுர ஆதீனம்,
தருமபுரம்.

ச. தண்டபாணி,
ஆதீனக்கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர்.

# The Tiruvachagam

## Tributes Paid By Western Savants

By

(Tiruvachagamani, K. M. Balasubramaniam, B.A.,B.L.,)

The celebrated Dr. G. U. Pope was one of the tallest and most remarkable Christian Missionaries who have made history in India during the past three centuries. He was one of those, perhaps the chief among them, western missionaries of Christianity who had arrived in India to scorn but who had to remain here to pray, not only at the altar of the charming goddess of Tamil but also in the shrine of the sublime Saiva lore.! The mighty Moralist Thiruvalluvar and the magnificent Saint Manikkavachagar of this marvellous Land of the Tamils had taken the soul of Dr. Pope by storm to such an extent that he did not stop short of immortalising them and incidentally himself by translating their respective works into the undying English language. To the end of his life, Dr. Pope was proud of calling himself a Student of Tamil; nay, his last fervant wish was that "Here lies a Student of Tamil' should be the epitaph over his grave.

In the course of the Introduction to his immortal life-work-the Translation of Thiruvachagam Dr. Pope

has made some pregnant observations about the Saint of Vathavur and his sacred utterances and I would fain quote the most important among them.

"In the whole legendary history of this sage.......... there stands out a real historical character, which seems to be a mixture of that of St. Paul and of St. Francis of Assisi. Under other circumstances what an apostle of the East might he have become! His poetry lives in all Tamil hearts, and in the main and true essence of it, deserves so to live."

"These poems, of which the Translation is here printed, are daily sung throughout the whole Tamil country with tears of rapture and committed to memory in every Saiva Temple by the people amongst whom it is a traditional saying that 'he whose heart is not melted by the Thiruvachagam must have a stone for a heart'...........It is impossible to read the poems without feeling that the Sage of Thiruvathavur was a sincere seeker after God, whom, in ways that he then knew not of, he has since been permitted to know and worship."

"The success of Manikkavachagar in reviving Saivism which seems to have been then almost extinct, was immediate and we must say, permanent... In considering the causes of his success, I feel inclined to set aside all stories of persecution carried at his instigation (?) His own personal devotion and fervor of

spirit made him an altogether irresistible apostle of his faith. I see no evidence of anything like it in the after times. He went about testifying that he had seen Sivam in Perundurai and had then and there passed from darkness to light. He thus declared to all what he fully believed himself to have seen and handled. He was an enthusiast but absolutely sincere. He taught the people that there was one supreme personal God no mere metaphysical abstraction but the Lord of gods and men. He also taught that it was the gracious will of Sivan to assure humanity, to come to the earth as a Guru and to make disciples of those who sought him with adequate preparation. He announced that this way of salvation was open to all classes of the community. He also taught very emphatically the immortality of the released soul—its conscious immortality—as he said that the virtual death of the soul which Buddhism teaches is not its release. It will be seen how very near in not some unimportant respects, the Saiva system approximates to Christianity..."

"Again, the Saivites led the way in the propagation of their system by means of popular songs. Anyone who compares the fervid piety of our Sage's very beautiful and generally very simple lyrics will feel with what force they must have struck the chord that vibrated then, as it vibrates still in millions of hearts! 'One touch of nature makes the whole world kin' and no one can read the Sage's verses without profound

emotion. Scarcely ever has the longing of the human soul for purity and peace and divine fellowship found worthier expression."

"In considering the poetry of Thiru Manikka-Vachagar, the Tamil Student must feel its superiority, to all the vast collections of the Devaram, although the authors of some of these enjoy perhaps a wider popularity among the Tamil people... It is quite certain that the influence of these poems (of Thiruvachagam) in South India is like that of the Psalms among Christians and that they have touched for generations the hearts of the vast majority of the Tamil speaking people."

Here let me mention in passing that Dr. Pope, though throughout very sympathetic, has a tendency now and then to lapse into a habit of criticising as 'absurd' and 'unintelligible' certain customs of the Saivites and some acts and passages of the Saint of Thiruvathavur. A close consideration of these points of his criticism and a convincing answer to them are certainly called for; but that arduous though pleasant task is reserved to a later occasion, when, God willing it is proposed to do fuller justice to our priceless work than that which Pope himself has done.

Finally, the learned Doctor concludes by solemnly declaring as follows: "The effect, therefore of these songs — full of a living faith and devotion — was great and instantaneous. South India needed a personal

God, an assurance of immortality and a call to prayer. These it found in Manikkavachagar's compositions."

The mere fact that our Manikkavachagar has found such an ardent desciple as Dr. G. U. Pope from the most unexpected quarter is a sufficiently significant one. For, it was responsible for breaking down the linguistic barrier that had preserved the Thiruvachagam as the monopoly of the Tamils and kept away the approach and appreciative study of a wider and wiser world. The advent of Dr. Pope's English Translation definitely conquered for our Saint a far wider circle of fervent admirers than had been the case prior to that. In fact, I cannot help feeling that this unique Translation which bespoke and advertised the beatific splendour of Thiruvachagam went a long way in blowing into a blaze the dying embers of interest which the Saivites themselves had in their sacred heritage of spiritualism. As in almost every case where a foreigner's appreciation has fostered the local interest, in the case of Thiruvachagam also, the genuine and gigantic efforts of Dr. Pope in uttering the 'Open Sesame' to throw open the doors of the Treasure-cave of Thiruvachagam to the cultured Savants of the West, stung the Tamils of his days into a shame of their callousness and startled them into an awakening and appreciation of their past. That was not all. The English language is essentially a universal language, in spite of all its critics and in spite of all their vendetta. It is spoken by millions in

the hemispheres; it is understood everywhere in the world. The Diplomatic world no less than the Deacons and Church Dignitaries speak that tongue and understand it. Hence, any piece of literary or religious work written or translated in that language is sure to reach the entire civilised world. The Germans and the French, the Swiss and the Danish would avidly devour its contents by at once translating that work into their respective national language. That is the unique advantage which many a philosophical work of India have enjoyed for a long time by dint of their translation into English. Pope's English 'Thiruvachagam' has done a similar service to Manikhavachagar and the Tamil language. It has introduced our Saint to a far wider circle of students and a greater variety of nationals than any other effort by anyone else could have possibly ever done.

It was one of the proudest moments of my humble life when once, perchance, I had the good fortune of going through an excellant book in English entitled 'Prayer'. The book is an English translation of a work of that name in the German language. The author of that original German work is one Friedrich Heiler. It took my breath away to see that the magic name of my Manikhavachagar was mentioned in the book in five or six places. The book was originally written during the First World War and was published before the end of the War, though its English Translation saw

the light of day only in 1932. And what was it that had introduced our eminent Saint to that German Savant to the edification of both of them? It was undoubtedly the English Translation of Dr. Pope that made available to that German author such a priceless asset as Thiruvachagam to the eternal benefit of every one concerned. And how could the Saivite world of Tamil Nad ever express its gratitude to that self-less and sincere Missionary who, more than any other individual was responsible for the such a rare piece of service in the cause of Saivism and Tamil! May his memory ever be green in the mind of every Tamilian!

Let us now see where all and how the honoured Saint of Thiruvathavur is referred to or mentioned by that celebrated German author. In three places he is referred to and in three other places his statements are quoted with approval. First of all, while speaking of the various classes of the mystic saints, Friedrich Heiler refers to our Saint as belonging to a particular class. On page 172, says the author: "There is a simple and fanciful mysticism (Sufis, Manikkavachagar, Bernard, Francis of Assisi, Suse, Symen, the New Theologian) ........"

Again, on page 121, writes the author: "Mohamed, the Islamic Mystics Bayazid, Ferid-ed-din-Attar, and Jalal-ed-din Rumi, the Indian Mystics Manikkavachagar, Yamuna Muni, Tulsi Das, and Nanak are Non-Christian personalities worthy to be placed beside the men of

genius in Israel and Christendom as great men of prayer."

Thirdly, the author refers to the cultual prayer of some saints and as an excellent example of the geniune inspiration that the sacred images in the temples breathe in the souls of the saints who worship in their holy presence, he cites the instance of the Saint of Thiruvathavur on page 205. Since this author has given a graphic and sympathetic picture of the form and rationale of idol worship unlike many an unimaginative alien who scruple not to dub it as vulgar idolatry, I make no apology to quote that entire paragraph.

"In Bhakti mysticism the motive of worship is an important factor; tender mystical piety and the popular cult of the gods merge into each other. The mystical adoration of the divine Lord (Iswara) and Saviour, of Vishnu or Siva, is inspired by the god's image, the 'arca'. In the statue that has been consecrated by a special ceremony (avahanam) the god is really and personally present; his image is an "avatara", i. e., a personification and incarnation of the god beyond time and space. When the devotee sees the statue of his god, illumined by the dim gleam of flickering lamps and veiled in clouds of incence, he sinks down in rapturous amazement and adores in profound devotion the greatness, beauty and love of his god who is so present to him. The fervent and

impassioned psalms of the great Tamil Mystic, Manikkavachagar which were all written or conceived in the Temples of Siva were produced by the contemplation of the god's sacred image. In the temple they are to this day recited daily by the faithful in the presence of the statue."

Now we come to the three instances wherein Manikkavachagar is quoted by the German author. Firstly, the theme of the author is that the Mystic contemplates God as the only highest and infinite Good, as the source of all values intellectual, ethical and aesthetic, as the cause of bliss and blessedness, as the single highest goal of all human striving. To illustrate this sublime theme the author quotes such a variety of Saints as Augustine, Anselm, Francis of Assisi, Gertrude of Helfta, and Thomas A Kempis and then concludes with a gem-like piece from Thiruvachagam. Says the author: "In a hymn of Manikkavachagar we read: 'O unstained brightness, gleam of a flower in full blossom, O, teacher, honey-sweet food of the gods, thou highly honoured guardian, loosener of chains, great stream of boundless tenderness?"

On the same page 186, the writer again quotes our Saint. The contemplation of the opposites included in the being of god may at times rise to the pantheistic thought of the "One and All". This is the statement to substantiate which Heiler quotes a passage from the Maitrayana Upanishad. Then says the author:

"Manikkavachagar exclaims: 'Thou art the Heaven, Thou art the earth. Thou art the wind, Thou art the light, Thou art the body and the soul, being and not-being."

Lastly, the theme the author wishes to illustrate is that the passionate yearning which is poured forth in prayer does not spring in man's narrow heart but god's eternal love to allure and to draw man upwards towards itself. He cites passages from various saints such as Pascal, Savonarola and A. Stolz and concludes thus. '·In the deepest sense, therefore, the prayer of the devout soul is god's own prayer; it is the great god praying through the small heart and weak mouth of man. 'The tongue itself' says Manikkavachagar, 'which cries to Thee, nay all the powers of my being which cry to Thee—all are Thine."—(Page 110)

It is not possible to exhaust the entire catalogue of the eminent admirers of Manikhavachagar within the short compass of this, brochure. Nor is it possible for me to dive deep just now into the oceanic depth and expanse of this wonderful work of Thiruvachagam and bring out and exhibit its priceless pearls to the perfect delight of the wondering world. It is also quite necessary to determine the high place which our glorious Saint occupies in the gallery of God's Prophets of all the religions of the world. But once again, let me repeat that all these edifying researches are reserved to a future date.

In the meanwhile, let me rest content with the consolation that thanks to the boundless grace of Sivam and the generous gesture of the present Holiness of the Dharmapuram Mutt, I have been blessed for the present with the unique and enviable privilege of indicating to some extent how our renowned Sage of Thiruvathavur has achieved a universal fame and established a world - wide empire. Dr. Pope and Friedrich Heiler have become his worthy votaries and their signal service in popularising our Saint should be applauded by the entire Saivite world.

Our present Governor-General, the Hon. Mr. C. Rajagopalachari has also honoured himself by honouring Manikkavachagar. He has handsomely acknowledged the greatness of the Saint by nobly confessing that Thiruvachagam had kept him company along with a few other select works during the days of his political incarceration and that he had derived no little peace and consolation from a study thereof. Saint Manikkavachagar is the Apostle Paul of Saivism. His gemlike Thiruvachagam is the high water mark of our spiritualism. May we drink deep from this eternal spring of Manna sweet is my humble appeal to my sisters and brothers of all countries! May we all enjoy its bliss in this world and beatitude in the next is my humble prayer to Lord Siva !

Long live Thiruvachagam !
Glory to Manikkavachagar !!
Long live our Saivism !!

# நூலாராய்ச்சி

## துணை வேண்டும்:

உலகவாழ்க்கை ஒரு பெருங்காடு. காட்டில் இன்பக்கனிகள் கனிகின்ற இளந் தேமாமரங்கள் உண்டு. துன்பக் காய்களைத் தோற்றுவிக்கின்ற எட்டிமரங்களும் இல்லாமலில்லை. ஒருபால் வீழ்ச்சியைப் பயக்கும் பள்ளத்தாக்குகள். ஒருபக்கம் எழுச்சியைத்தரும் இனிய மலைத்தோற்றங்கள். ஒருசார் இருள்சூழ்ந்த இடம். அதன்முடிவிலே ஒளிமிகுந்த இடங்கள். வாழப்பிறந்த மனிதன் இன்பக்கனியை விரும்புகிறான். ஒளியை அவாவுகிறான். அதற்காக வீழ்ச்சியையும் இருளையும் தாண்டுகின்றான். அவனுடைய இன்பவிழைவுதான் அதற்குமாறான எவற்றையும் வெல்லச்செய்கிறது. ஆனாலும் மனிதன் மனிதன்தானே! சிற்றறிவு உடையவன்தானே! இருளையும் துன்பத்தையும் தாண்டும்போது அவன் மனம் உறுதிதளர்கிறது. மயங்கித் தனதுகுறிப்புக்களை விட்டு வேறுவழியிலும் செல்லத் தொடங்குகிறான். இருள்சூழ்ந்த அறிவுடையவர்கள் சிலர், துணைவந்து கைகொடுத்து வேறுவழியிலழைத்துச்

செல்லுகின்றார்கள். இப்படியாக வாழ்க்கைக் காட்டில் இன்பவெளியைநாடிப் பயணம்போகின்ற மனிதனுக்கு உள்ளத் தளர்ச்சியும், போலித் துணை வரும் பெரிய இடையூறுகின்றனர். அந்த இடத்தில் உற்றதுணை ஒன்று வேண்டுமல்லவா?

துணை யார் ?

குருடன் குருடனுக்கு வழிகாட்ட முடியுமா? இருள் ஒளிக்கு வழிகாட்டுமா? தளர்ந்தவன் பிறருடைய தளர்ச்சியைப்போக்க முடியுமா? தடுமாறுகிறவன் தெளிவுக்குத் துணைசெய்வானா? முடியாது. தெளிந்தவனே-உறுதியுடையவனே உறுதுணையாக முடியும். அத்தகைய தெளிந்த ஞானிகளே நமது சமயாசாரியப் பெருந்தகையார்கள். அவர்களே ஒளிப்பேற்றுக்கும் இன்பவாழ்க்கைக்கும் ஏற்ற துணையாவார்கள்.

எப்படி ?

சமயாசாரியர்கள் பல நூற்றாண்டுகளுக்கு முன்னே இருந்தவர்களாயிற்றே. அவர்கள் துணையாவதுஎப்படி எனலாம். அவர்கள் திருமேனிதாங்கியிருந்த அந்தக்காலத்துக் குருவாக எழுந்தருளி உலகத்தைச் சிவநெறியில் நடக்கச்செய்தார்கள். அழியாத அருளுருத் தாங்கியிருக்கின்ற இந்தக் காலத்துத் தாங்கள் அருளிச்செய்த அருள்வாக்குக்களைத் துணையாக வைத்திருக்கிறார்கள்.

## நூல்கள் எங்ஙனம் துணையாகக்கூடும்?

மனிதன் வாழ்க்கையில் விளையும் போட்டியால், பொறாமையால், தன்முனைப்பால், தலைக்கிறுக்கால், பதவிச்செருக்கால், பணத்திமிரால், அறிவு மயங்கித் தவறானவழியிற் செல்லும்போது, ஒளிவிளக்காகிய அருணூல்கள் கருணைக்கனியாகக் கையிற்புகுந்து, தெளிதேனைகத் தித்தித்து, அளிவளர் உள்ளத்துக்கு அருந்துணையாகி, வம்பும் துன்பும் போரும் பொய்யும் ஆகிய முள்வழி வஞ்சக வழிகளிலிருந்து விலக்கி அன்புநெறியில் அழைத்துச் செல்லுகிறது. சிவ மணம் கமழும் திருவருள் தென்றல் வீசும் திருவடியாகிய பேரின்பவெளியை அடைவிக்கிறது.

## அத்தகைய நூல்கள் யாவை?

சமயாசாரியர்களும், இறைவன் அருள்வழி வந்த ஏனைத் தெய்வப்புலவர்களும் அருளித்தந்தன திருமுறைகள், திருமுறைகள் அன்புநெறியாகிய ஒரு முறையே மக்கள் மேற்கொள்ளத்தக்க பெரு முறை என்பதை விளக்குகின்றன. அவை பன்னிரண்டாகப் பகுக்கப்பெற்றுள்ளன. அவற்றுள், திருவாசகமாகிய இந்நூல் எட்டாந்திருமுறையாகும்.

சிவஞானபோதத்தில் எட்டாஞ்சூத்திரம் ஐம் புலவேடர்களோடுபழகி அறிவுதிரிந்து தம் உண்மை நிலையையும் கடமையையும் அறியாது அலையும் அரசகுமாரனுகிய ஆன்மாவுக்கு இறைவனே

குருமூர்த்தமாக எழுந்தருளி உண்மையுணர்த்தி ஆட்கொள்வர் என்பதையும், ஆட்கொள்ளப்பெற்ற ஆன்மாக்கள் ஆனந்தாநுபவநிலையில் அரன்கழல் செல்லும் என்பதையும் அறிவிக்கின்றது.

எட்டாந்திருமுறையாகிய இது, ஐம்புல இன்பமும் ஆரத்துய்க்கும் அரசவாழ்வில், அமைச்சர் பதவியிற்சிக்கி, பிறந்ததன் பயனைச் சிறிது மறந்திருந்த ஆன்மாவாகிய வாதவூரடிகட்கு இறைவன் குருவாக எழுந்தருளி, உண்மை ஞானத்தை யுணர்த்த, அதன் விளைவாக எழுந்த அநுபவஞானத் திருநூல்.

சுருங்கக்கூறின் எட்டாஞ்சூத்திரம், இறைவன் குருவாக எழுந்தருளி ஆன்மாக்களை ஆட்கொள்வதை உணர்த்துவது. எட்டாந்திருமுறை, அருள் பெற்ற அடியார் குருவாகவந்து, அன்புநெறியை அனைவருக்கும் ஆக்கிச் சீவனைச் சிவமாக்கிய பெருமையையுடையது. இது திருவாசகம் திருக்கோவையார் என இரண்டாகும். அவற்றுள் திருவாசகமே ஈண்டு ஆய எடுத்துக்கொண்டது.

பெயர்க்காரணம்:

திரு - அழகு. வாசகம் - வார்த்தை; சொல். திருவாசகம் - அழகியசொல் என்பது அதனை யுடையதாகிய நூலை உணர்த்திற்று. திரு என்பதற்குக் கண்டாரால் விரும்பப்படுந் தன்மை நோக்கம்

என உரைகாண்பர் பேராசிரியர். இதனைக்கண்டார் வேறு எதனையும் விரும்பார் ஆகலின் புண்ணியங் கூட்டக்கண்ட பக்குவான்மாக்களால் விரும்பப் பெறுந் தன்மையையுடைய வாசகம் என்றும் பொருள்கொள்ளலாம்.

சங்கரநமச்சிவாயப்புலவர் நன்னூல் விருத்தி யுரையில் "அடையடுத்த வாசகம் முதற்கருவியின் பெயர் அதன் காரியமாகிய யாப்பிற்கு ஆயிற்று" என்பர்.

சிவஞானசுவாமிகள் இலக்கணவிளக்கச் சூறு வளியில், "திருவாசகம் என, சொல்லையே யுணர்த்தி நிற்கும் வாசகம் என்னுஞ்சொல் அதனால் ஆக்கப் பெற்ற காரியமாகிய செய்யுட்களை உணர்த்துதலால் காரணவாகுபெயர் எனப்படும். உண்மையான் நோக்கின், அன்மொழித் தொகையேயாம்" என்று கூறுவர்.

சபாபதிநாவலர் அவர்கள் திராவிடப்பிரகா சிகையில் "திருவாசகமென்பது திருமயமானவாச கம் எனப் பொருள்படும். ஈண்டுத்திரு - அருட்டிரு. எனவே அருள்நாதவடிவான வாசகம் என்றவாறு யிற்று. திருவாசகம் என்பது அழகியவாசகத்தை யுடையது என அன்மொழித்தொகையாய் நூலுக் குக் காரணப்பெயராயிற்று" என்பர்.

ச. பூபாலபிள்ளை அவர்கள் தாம் எழுதிய தமிழ்வரலாற்றில் 'திருமயமான அல்லது அருள்நாத

வடிவமான அல்லது அழகியவாசகம்' எனப் பொருளுரைப்பர்.

பண்டிதமணி, மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் "திருவாசகம் என்பது அழகிய தெய்வத் தன்மை வாய்ந்த சொற்களாலாகிய செய்யுள் நூல் என்னும் பொருளை உடையதாகும். இது, திருவென்னும் அடையடுத்த, வாசகம் என்னும் முதற்கருவியின் பெயர், அதன்காரியமாகிய செய்யுட்கு ஆயினமையின், கருவியாகுபெயராம் என்ப. வாசகம் - சொல். இத்திருவாசகத் திருப்பாட்டுக்கள், தெய்வ நலங் கனிந்த சொற்களாலும் சொற்றொடர்களாலும் அமைந்தவை; இனிமை எளிமை ஆழமுடைமை என்னுங் குணங்கள் தம்பால் அமையப்பெற்றவை; மெய்யன்புடன் ஓதுவார் கேட்பார் உணர்வார் எல்லோரையும் மிக்க பேரின்பத்தில் திளைப்பித்துப் பரவசப்படுத்தும் இயல்பின; அநுபவ உண்மைகளைத் தெளிவுண்டாம்படி விளக்குவன" என்று திருவாசகம் திருச்சதகக்கதிர்மணிவிளக்கப் பேருரையில் முன்னர்க் கூறியிருக்கின்றார்கள்.

எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை அவர்கள் தமிழ் இலக்கிய வரலாற்றில் 'தெய்வத்தன்மை பொருந்திய வாசகம்' எனப் பொருள்காண்பர்.

இன்னும் சிலர், 'சிறந்த இனிய அழகிய பல சொற்களைத் தன்னகத்தேகொண்டுள்ள நூல்' என்றும், 'கடவுளைப்பற்றிய வாசகமாயிருத்தலின் திருவாசகம் எனப்பட்டது' என்றும் கூறுவர்.

இத்துணையும் வைத்துக்கொண்டு திருவாசக நூலுள்நுழைவோம். ஆசிரியர் அடிகளார் 'வாக்கு உன்மணிவார்த்தைக்காக்கி' என்றும், 'பேச்சிறந்த மாசில்மணியின் மணிவார்த்தை' என்றும் இறைவனைப்பற்றிப்பாடும் தமது மொழியை வார்த்தை என்றழைக்கிறார். வார்த்தை வாசகம் என்பன ஒரு பொருட்கிளவி. அல்லாமலும் இறைவன் தம்மை ஆட்கொண்ட அருள் விசேடத்தை உலகத்தவர்க்கு உரைப்பதுபோலவும், பிரிந்ததனல் உண்டான வருத்தத்தைப்பற்றிப் பெருமானேடு உரையாடுதல் போலவும் இந்நூல் முழுவதும் அமைந்திருத்தலின் பேச்சுமுறையான் அமைந்த இந்நூல் வாசகம் என அழைக்கப்பட்டிருக்கலாம் என்பதும் சிந்தித்தற்குரியது.

மறுபெயர்கள் :

இந்நூலை எடுத்துப்பாராட்டிய புலவர்கள் சில மறுபெயர்களை வழங்கியிருக்கிறார்கள். அவை திருவாசகம், மணிவாசகம், மதுரவாசகம், வாசகமாலை, வாசகத்தேன் முதலிய பலவாம். அவற்றுள் திருவாசகம் மணிவாசகம் என்ற பெயர்க்காரணங்கள் முன்னரேவிளக்கப்பெற்றன. மதுரவாசகம் என்று அழைத்தவர் சிவப்பிரகாசசுவாமிகள். இது மனம் குழைந்து படிப்பவர்களுக்கு நெஞ்சத்து அமுதூறி நிற்கச்செய்வதுஒன்ருகலின் இப்பெயரிட்டு அழைத்தனர் போலும். வாசகமாலை என்பதும் அவர்தந்த பேரே. பெயர்க்காரணத்தையும் 'மாசறுமணிபோல்

பன்னுள் வாசகமாலைசாத்தி' என்றபகுதியால் குறிப் பிடுகிறார். நன்மணிகள் பலகோத்த மாலைபோலச் சொன்மணிகள்கோத்து ஆக்கியமாலை என்பது அவர்கருத்து.

வாசகத்தேன் என்பது நூற்சிறப்பினைப்பாடிய பெரியார் ஒருவரும், சிவப்பிரகாச சுவாமிகளும் வழங்கியபெயர். இதுவும் திருவாசகத்தின் தன்மை யாற் போந்த பெயர். மூத்திநிச்சயப்பேருரை யாசிரியர் வெள்ளியம்பலவாணர் 'கோவை திரு வாசகம்' என்றும், 'திருவாசகம் திருக்கோவை' என்றும் சேர்த்தே நூற்பெயர் வழங்குவர். இதனால் திருவாசகம் திருக்கோவையார் இரண்டுமே ஒரு நூலுக்கு இணைந்தபெயராக இருக்கலாம் என்று எண்ண இடமுண்டு.

நூற்பெருமை :

படிப்பவர் மனத்தையும் பரவசப்படுத்துவது இந்நூல். இந்நூலை ஒருமுறை ஓதினாலும் உயிர் தன் தன்மை கெட்டுச் சிவத்தன்மையாதல் தெளிவு. அலைகின்ற மனத்திற்கு ஓய்வளிக்கும் ஒருமருந்து. கடவுள் அருளை வாரிவழங்கும் கற்பகம். சிவானந்தப் பெருங்கடலைச் சிந்தையில் நிறைவித்துத் திருமேனி முழுவதும் பரவச்செய்து புளகாங்கிதமுறுத்தும் புண்ணியநூல். எளியசொல்லால் - விழுமிய பொரு ளால்-இழுமென் ஓசையால் எல்லாரையும் தன்வயப் படுத்தும் தனிப்பெருந் தகுதியுடையது. உரைமனங்

கடந்துநிற்கும் ஒண்மையது என்று சுருங்க உரைக் கலாம். இந்நூலைப்பற்றிய பல அறிஞர்கள் திரு வாக்குக்களை ஒருங்கு எண்ணுதல் இன்பந்தருவதில் ஒன்றாம்.

தாயுமானவடிகள் பராபரக்கண்ணியில் திரு வாசகம் முழுவதும் கற்கண்டாற்செய்த பாவை போல இருத்தலின் முழுதும் சுவைத்தவர்கள், 'நினைப்பறநினைந்தேன்' 'சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாம்' 'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி' என்றபகுதிகளை மட்டும் சுவைத்து இன்புறுகின்றார்கள்.

ஒரு பெரியவர் திருவாசகத்தை முழுதும் அநுபவித்து அதன் சுவையூற்றுக்கள்தோறும் தோய்ந்துதோய்ந்து அதற்கு ஒப்புமைதேடியலைந்து தேனை ஒப்பாகக்கண்டார். இனியபொருள் பலவற் றுள்ளும் தேனைக்கண்டதில் ஒரு தனிச்சிறப்பு உண்டு. தேன் நெஞ்சுக்கு வலிவூட்டும்; குரல் இனிமை மிகுவிக்கும்; மிகுதியாக உண்டார்க்கு மலங்கழிக்கும்; பித்தந்தணிக்கும்; நோய்தீர்க்கும். அதுபோலத் திருவாசகத்தேன் உயிருக்குச் சிவ ஞான உணர்வாகிய வலியையூட்டும். சேயின் குரல் போல இனிமையாகிச் சிவத்தாய்க்குக் கருணையை மிகுவிப்பதோடு உயிர்கள் எல்லாவற்றிற்கும் இனி யன் ஆக்கும். மிகுதியும் தோய்ந்தால் தொல்லை இரும்பிறவிச் சூழுந்தளையாகிய மூலமலத்தைக் கழிக் கும். மாயேயமாகிற பித்தத்தைத் தணிக்கும்.

பிறவிநோய் தீர்க்கும். ஆதலால், திருவாசகமென்னும் தேன் அல்லல் அறுத்து ஆனந்தமாக்கியது என்று சிறப்பித்தார். அவர் பெயர் அறியக்கூடவில்லை. அபியுக்தர் என்று அச்சிட்ட திருவாசகங்கள் குறிப்பிடுகின்றன.

கண்கட்டி மறைஞானசம்பந்த சுவாமிகள் பரமோபதேசத்தில் 'தாயே எனவுன் சரண் அடைந்தேன் என்றனர்தம், வாயான் மணிவாசகர்' என்று தாயே உன்சரண் அடைந்தேன் என்ற பாடற்பகுதியைப் பாராட்டுகிறார்.

சிவப்பிரகாச சுவாமிகள் வேதத்திற்கும் திருவாசகத்திற்கும் வேற்றுமை கற்பிக்கிறார்கள். வேதம் ஓதினால் ஒருவராவது நெஞ்சம் குழைந்து நிற்கின்றார்கள் இல்லை. திருவாசகம் ஓதினால் கருங்கல் மனமும் கரைகின்றது; கண்கள் ஆனந்த பாஷ்பம் பொழிகின்றன; உடம்பு சிலிர்க்கிறது; அனைவரும் அன்புவெள்ளத்தில் ஆழ்கின்றார்கள் என்று அறிவிக்கின்றார்கள். மற்றொரு பகுதியிலே மாணிக்கவாசகன் என்னும் மேகம் பொழிந்தது; திருவாசகத்தண்ணீர் ஓடிற்று; படிப்பவர் மனக்குளம் நிரம்பிற்று; நாக்கெனும் மதகின்வழியாக வெளிப்பட்டுக் கேட்பவருடைய செவிமடைவழியாக மன வயலில் பரவிற்று; அன்பாகிய வித்திலிருந்து சிவமுளையைத் தோற்றுவித்தது; அதிலிருந்து கருணைமலர்ந்து முத்திப்போகம் விளைந்தது என்று உருவகித்து மகிழ்கின்றார்கள். அவர்களே திரு

வாசகம் பொற்கலத்தை ஒப்பதென்றும், வேதம் மட்கலத்தை ஒப்பதென்றும், திருவாசகம் ஓதினால் முத்தி கிடைக்குமென்றும் பேசுகின்றார்கள். பூவெனப்படுவது பொங்குதாமரையாதல் போலப் பாவென்றால் திருவாசகந்தான் என்பதும் சுவாமிகள் கூறும் சுவைப்பகுதிகளுள் ஒன்று.

இராமலிங்க சுவாமிகள் திருவாசகத்தையே தமது உபாசனாமூர்த்தமாகக்கொண்டு தமது மண இன்பக்காலத்தும் அதனையே படித்து அதனாலேயே மனம் கனிந்தவர் என்பது அவர்களுடைய வாழ்க்கை வரலாறு குறிப்பிக்கும். அதனாலேயே அவருடைய பாடல் பண்பாடு முழுவதும் திருவாசகம் போல மனங்கரைக்கும் மாண்புடையதாயிற்று. அவர் மணிவாசகப்பெருமானை அழைத்துத் திருவாசக அநுபவத்தைத் தெரிவிக்க வேண்டுகிறார். மற்றும் வாதவூரடிகள் அன்புருவம்பெற்று அருளுருவமடைந்து இன்புருவமான பெருநிலையை வியக்கின்றார். பொதுவகையில் இவ்வாறு பாராட்டிய இராமலிங்கர் 'என்னையும் இருப்பதாக்கினன்' என்ற அகவலின் எண்ணம் என்ன? என்கின்றார். திருவாசகத்தை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் காமம்மிக்க காதலனுடைய கலவியை விரும்புகின்ற கற்புடை மங்கையானவள் அடையும் இன்பத்தைக் காட்டிலும் இன்பம் மிகுகின்றது என்கின்றார். சிறப்பாக நான் திருவாசகத்தைக் கலந்து பாடும் பொழுது தேன் பால் சர்க்கரை பழச்சாறு எல்லாம் கலந்து உண்டாற்போல இனித்து உயிரோடுகலந்து

தெவிட்டாமல் இனிக்கின்றது; திருவாசகத்தைக் கேட்டால் கீழ்ப்பறவைச் சாதிகளும் பொல்லா விலங்குகளும்கூடச் சிவஞானத்தை விரும்புமே; அப்படியிருக்க, அடியேன் அடைந்தது ஒருவியப்பா! என்று ஆளுடைய அடிகளாரது அருள்வாசகக் கடலில் அமிழ்கின்றார்.

மயூரகிரிப் புராணமுடையார் கருப்பஞ்சாற்றிலிருந்து வடித்தெடுத்துக் காய்ச்சிய பாகிலிருந்து மூரித்துஎடுக்கப்பட்ட கற்கண்டுபோல, ஆரியமொழியைக்காட்டிலும் தென்மொழி இனிப்பானது; அதனால் பாடுக என்று இறைவன் உத்தரவுதரத் திருவாசகம் பாடப்பெற்றது என்று அறிவிக்கின்றார். இதனால் திருவாசகம் கற்கண்டு ஆரியவேதம் கருப்பஞ்சாறெனை அறியக்கிடக்கின்றது.

பேராசிரியர், சுந்தரம்பிள்ளை M.A., அவர்கள் மனோன்மணீயத்தில் சர்வசங்காரகாலத்து உண்டாகும் தனிமையைக் கழிப்பதற்காகவே திருவாசகத்தின் ஒருபிரதியைப் பெருமான் எழுதிக்கொண்டார் என்று திருவாசகத்தின் பெருமையைப் பேசுகிறார்.

ஜீ. யூ. போப்பவர்கள் புறச்சமயத் தலைவராய் இருந்தும் உலகத்திலுள்ள மதங்களில் உயர்ந்த உண்மையானமதம் சைவமே என்றும், சிறப்பாகத் தென்னிந்தியாவிலும் இலங்கையில் வடபாகத்திலும் பரவியிருப்பது என்றும், அப்படியே தத்துவ சாஸ்திரங்களிலும் சைவசித்தாந்தமே ஏனையவற்றைக்காட்டிலும் பொதுநோக்குடையதென்றும்,

சைவசித்தாந்தத்தின் தெளிதேனாகிய திருவாசகம் ஐம்பத்தொருபதிகங்களால் ஆக்கப்பெற்றது அது தென்னிந்தியாவிலுள்ள திருக்கோயில் ஒவ்வொன்றிலும், ஒவ்வொரு தமிழனுடைய உதட்டிலும் உலாவிவரும் உள்ளம் உருக்கும் ஒருதனிச் செந்நூல் என்றும் கூறுகிறார்.$

சர். எஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள் "திருவாசகம் என்னும் நூல், ஆண்மா, அறியாமை ஆசை ஆகிய பந்தங்களிலிருந்து நீங்கி, உண்மையொளியும் அன்புமாகிய சுதந்தர அரண்மனையுள் புகுவதையும், அவ்வாண்மாவின் அறிவுக்கண் திறப்பதையும், அதனால் விளையும் ஆனந்தத்தையும், பெருமிதத்தையும், மனத்தின் அலைவு, உலைவு போராட்டம் முதலியவைகளைப் போக்கி இறைவனோடு கலக்கும் இன்பத்தையும் அமைதியையும் அழகான பாடல்களில் சித்திரிக்கிறது." என்று குறித்துள்ளார்.*

---

$ Caivism is the real religion of the South of India, and of North Ceylon; and the Caiva Siddhanta philosophy has and *deserves to have,* far more influence than any other. The fifty-one poems which are here edited, translated, and annotated, are recited daily in all the great Caiva temples of South India, are on every one's lips.

* "Thiruvasagam depicts in beautiful hymns, the progress of the soul from the bondage of ignorance and passion into tye liberty of light and love, its first awakening its joy and exaltation, waywardness and despondency, atruggle and unrest, the peace and joy of union."

மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இறைவனிடத்து என்றும் அன்பில்லாதவர்கள்கூட இதனைப்பாட இறையவன் அருள்சுரக்கின்றார்; அம்மட்டோ? அவர்களுக்கும் முறையான அன்பு முறுகி வளர்கின்றது என்கின்றார்.

சிவத்திரு. மறைமலையடிகள் தமதுதிருவாசக விரிவுரையின்கண், 'திருவாசகம் என்பது பிறிதொன்றற்கில்லாத அழகினை உடைய வாசகம் என்னும் பொருட்டாம். திருவாசகம் என்பதில் அடைமொழியாய் நின்ற திருவென்னுஞ் சொல் கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கமாகிய அழகினை உணர்த்தவே, பேரின்பப்பேற்றைக் காதலிப்பா ரெல்லாராலும் விரும்பப்படும் அழகினை உடைத்து இவ்வாசகம் என்பது பெற்றாம். எல்லாரும் ஒன்றை விரும்புதல் அது பிறிதொன்றற்கில்லாத அழகினை உடைமையினாலேயாம். தன்னைக் கற்பார் உள்ளத்தை உருகச்செய்து அவரைப் பேரின்பப் பெருக்கின்கண் ஆழ்த்துதற்கட் பிறிது எந்நூலுக்கும் இல்லாத அழகினை இத் திருவாசக நூல் உடைமையால், இதனினும் மேலான அழகினைப்பெற்ற வேறொருநூல் இல்லையென்பதுதேற்றமாம். அன்புபொதிந்த இதன் செய்யுட்களை ஓதுந்தோறும் நினைக்குந்தோறும் நெஞ்சம் நெக்குருகக் கண்ணீர் பெருக நாவுரை குழற மெய்ம்மயிர் சிலிர்ப்பப் பேரின்பவெள்ளங் கிளர்ந்து எழுதல் யாவர் மாட்டுங் காணப்படுதலாலும், தொடர்புபட்டு நிகழும் இத்தகைய பேரின்பநிகழ்ச்சி மற்றையநூல்களை

ஓதுவார் நினைப்பாரிடத்துக் காணப்படாமையா னும் இத் திருவாசகம் ஒன்றே ஏனைநூல்களுக்கு இல்லாத அழகினை உடைத்தென்பது தெளியப் படும்' என்று குறித்துள்ளார்கள்.

## திருவாசகத்தைப்பற்றிய பழமொழிகள் :

ஒருகொள்கை அல்லது ஒருநூல் பொதுமக்கள் எல்லாருடைய உள்ளத்திலும் புகுந்து பிணித்திருக் கிறது என்பதனை அறியப் பழமொழிகளே தக்க சான்றுவன. பழமொழிகள் கற்றாரும் மற்றாருமாகிய எல்லார்வாயிலும் ஒப்பப்பழகிவருவன. ஆதலால் திருவாசகத்தைப்பற்றிய பழமொழிகள் யாவை என்பதைப்பற்றி ஈண்டு ஆராய்தல் அவசியமாகும்.

1. **திருவாசகத்துக்கு உருகாதார் ஒருவா சகத்திற்கும் உருகார்.** மக்களின் மன உறுதியை அளந்தறியும் அளவு நூலாகத் திருவாசகத்தைக் கருதியிருந்தார்கள். ஆதலால் மனதையுருக்கும் தனிச்சிறப்புடையது திருவாசகம்; அதற்கு உருகா தார் மனம் இரும்பினும்வலிதே; ஒன்றற்கும் உரு காது என்று உணர்ந்தார்கள் போலும். அதனால் இப்பழமொழியை வழங்கினார்கள்.

2. **சிதம்பரத்தில் பிறந்த பிள்ளைக்குத் திரு வெம்பாவை கற்றுக்கொடுக்கவேண்டுமா?.** திரு வெம்பாவை திருவண்ணாமலையில் அருளிச்செய்யப் பெற்றது. ஆயினும் மார்கழித் திருவாதிரைத் திரு

நாளில் சிதம்பரத்தில் ஓதப்பெறுகிறது. அதனால் சிறுவர்முதல் அனைவரும் கற்றிருப்பார்கள். ஓதாமலேவந்த வித்தையாக அதுபழகியிருக்கும். அதனாற் போலும் இப்பழமொழி வழங்கியிருக்கவேண்டும்.

3. தில்லை பாதி திருவாசகத்தில். மணிவாசக சுவாமிகள் பாண்டியநாட்டில் அவதரித்து மதுரையில் மந்திரியாக இருந்தும் பாதிக்குமேல் தில்லையைப் பற்றியதாக இருத்தலின், இப்பழமொழி வழங்குகிறது போலும்.

வாதவூரடிகள் வரலாறு:

பழம்பதியாகிய பாண்டியநாட்டில் புனல்யாறு அன்று இதுபூம்புனல்யாறெனப்புலவர்களால்போற்றப்படுகின்ற வையையாற்றங்கரையில் திருவாதவூர் என்னும் தலம் உள்ளது. அதில் சிவநெறிபிறழாச் சிந்தையாளராகிய அந்தணர் ஒருவருக்கு அரும் பெறல் மகவாய் வந்தவதரித்தவர் வாதவூரர். கலை ஏற வயதும் ஏறி எல்லாம் பதினாறுயின. நிறைமதியர் ஆனார். நல்லொழுக்கின் தலைநின்றார். உற்றது கொண்டு மேல்வந்து உறுபொருளுணருந் தன்மையரானார். இவரது அறிவுத்திறமும் நிர்வாக ஆற்றலும் அரிமர்த்தனபாண்டியன் செவியிற் சென்றடைந்தன. மன்னன் மந்திரியாக்கினன்; தென்னவன் பிரமராயன் என்ற பட்டத்தையும் சேர்ப்பித்தான்; முதன்மையும் அளித்தான்; அரசியல், அமைச்சியலால் அல்லல் இன்றி நடந்துவந்தது. அமைச்சர்க்கு

ஆட்சிமுறைபற்றிய அல்லல் இல்லையாயினும், உலக வாழ்வும், வாழ்விற்கண்ட பெரும்போகமும் நிலை யற்றன என்பதை அறிந்தமையின், உவர்ப்புத் தோன்றிற்று. கூத்தினர் தன்மைவேறு கோலம் வேறு ஆகுமாறுபோல் இவர் மேற்கொண்டுள்ள அமைச்சுரிமைக்கும் அன்புகனிந்த அகத்துரிமைக் கும் சிறிதும் தொடர்பின்றியிருந்தது. அதனல் குருவைத்தேடும் வேட்கை நாளுக்குநாள் மிகுந்து கொண்டேவந்தது. பிறந்ததன் பயனை அடைந் தோமா? அதற்குரியவழி என்ன? என்பதிலேயே இவருடைய கருத்து ஓடிக்கொண்டிருந்தது.

ஒருநாள் குதிரைகாவலர் அரசவைக்குவந்து, "மன்ன! குதிரைப்படைகள் குறைந்துவிட்டனவே; அரசர்க்குரிய அங்கங்கள் ஆறனுள் படைக்கே வள்ளுவர் முதன்மை வழங்கியிருக்கிறுர் என்பதை அரசர் உள்ளம் அறியுமே; நாங்கள் தெரிவித்துக் கொள்ளுவது மிகையல்லவா; ஆனாலும் குதிரை கொள்ளுதற்கு ஏற்றதானசமயம் இது என்பதை மாத்திரம் நாங்கள் அறிவித்துக்கொள்ளுகிறோம்" என்றூர்கள். அரிமர்த்தனன், முதல் அமைச்சரை நோக்கி, இப்பொழுதேசென்று குதிரைவாங்கிவருக என்று ஆணையிட்டான்.

அமைச்சரும் அவ்வண்ணமேசென்று பொற் பண்டாரத்தைத் திறந்து பெரும்பொருளை வாரிக் கொண்டு குதிரைகொள்ளப்புறப்பட்டார். வழியில் திருப்பெருந்துறையையடைந்தார். அரகர முழக்கம்

இவர் செவிவழியாகப் புகுந்து சிந்தையை உருக்கிற்று. ஒலிவழியே விரைந்துசென்ருர். குருந்த மரத்தடியில் குருமூர்த்தியையும் சீடர்களேயும் கண்டார். காந்தங்கண்ட இரும்புபோல் மனம் அவர் வசம் ஆயிற்று. விரைந்து அணுகி அடிபணிந்தார். ஆட்கொண்டருளுக என வேண்டிக்கொண்டார். இறைவன் கருணைக்கண்ணேக்கஞ்செய்து கரத்தால் தீண்டித் திருவடிசூட்டிச் சிவஞானேபதேசஞ் செய்தார். அதனுல் ஆவியும் உடைமையும் அவர் வசமாயின. குருநாதன் திருவுள்ளக்குறிப்பின்படி, கொண்டுவந்த பொருள்களெல்லாவற்றையும் சிவாலயப்பணிக்கு ஆக்கினுர். நாட்கள் பல சென்றன. அமைச்சர் அருளாரமுதத்தை உண்டுகொண்டே தெருளார் சிவானந்தபோகத்துத் திளைத்திருக்கின்ருர்.

அமைச்சர் அருள்வாழ்க்கையை அரசன் மருளாட்சி அறியுமா? குதிரை வாங்கச்சென்ற மந்திரியைக்காணேமேயென்று ஆள்விட்டான். ஏவலாளர்கள் மதியமைச்சர் நிலைமையை மன்னர்க்கு அறிவித்தார்கள். மன்னன் சினந்து, திரும்பிவர ஓலையனுப்பினன். வாதவூரர், பெருமானிடம்சென்று முறையிட்டார். இறைவன் விலைமதிக்க முடியாத ஒரு மாணிக்கத்தைக் கையுறையாகத்தந்து அரசரிடம் சென்று இதனை அறிவித்துவருக என்று ஆணை தந்தார். அமைச்சரும் அவ் ஆணையின்வண்ணமே ஆவணிமூலநாளில் குதிரை அனைத்தும் வரும் என்று அறிவித்தார். அரசன் எதிர்நோக்கி யிருந்தான்.

ஒற்றர்கள் மூலமாகப் பொய்யென்றுணர்ந்தான். சிறையிலிருத்தி நிறைய ஒறுத்தான். கருணைக் கடவுள் நரிகளைப் பரிகளாக்கிப் பாண்டிய மன்னனிடம் ஒப்புவித்து மீண்டார். அன்றிரவே பரிகள் நரிகளாயின.

அவதி ஆற்றாத அரசன் அடிகளாரைச் சுடு மணலில் கல்லேற்றி நிறுத்தி ஒறுத்தான். அடிகளார் பொறுத்தார். ஆண்டவன் வெறுத்தான் ஆற்றுவெள்ளம் பெருகியது. மதுரை அழியுமோ என்றவருத்தம் அனைவரையும் வாட்டியது. அரசன் அவரவர் கரையை அவரவர் அடைத்துக்கொள்ளும் படி ஆணையிட்டான். வந்தி பங்கு அடைபடாமல் இருந்தது. இறைவன் வந்தி தந்த பிட்டமுதையுண்டு வையை அடைப்பார்போல, உண்ட களைப்பால் உறங்கினர். நூற்றைக்கெடுத்தது குறுணி என்றதுபோல ஒருத்தி பங்கு ஊரார் பங்கையும் கரைத்தது. சினந்த அரசன் கைப்பிரம்புகொண்டு அறிவுருக்கொள்ளும் ஆளை அடித்தான். அவ்வடி சராசரப்பொருள்கள் அனைத்தின் மேலும் பட்டது. மன்னன் வாதவூரர் பெருமையை அறிந்தான். மன்னிப்பு வேண்டினன். அமைச்சியலைத் துறந்த வாதவூரடிகள் திருப்பெருந்துறை, திருவுத்தரகோசமங்கை, திருவாரூர், திருவிடைமருதூர் முதலியதலங்களைவணங்கிப் பதிகங்கள்பாடிக்கொண்டு தில்லையை அடைந்து, பிச்சதேறி, நிச்சலும் வழிபாடுசெய்து கொண்டு எழுந்தருளியிருந்தார். தில்லைவாழந்தணர்

களோடு வாதுக்கு வந்த புத்தர்களை இறைவன் ஆணையின் வண்ணம் வென்றார்.

ஒருநாள் இறைவன் அந்தணவடிவங்கொண்டு திருவாசகம் திருக்கோவையார் இரண்டையும் தாம் எழுதிக் கைச்சாத்திட்டுக் கனகசபையில் வைத்து மறைந்தார். திருவனந்தலில் திருவேட்டைக்கண்ட தில்லைவாழந்தணர்கள் மிகமிக வியந்து, அதனை எடுத்து அவிழ்த்துப் பார்த்தனர். அதில் அம்பல வாணன் கையெழுத்திருப்பதை யறிந்து அடிக ளாரை அணுகி நிகழ்ச்சியின் உண்மையை அறிந் தனர். அடிகளாரைப் பொருள்விரிக்க வேண்டினர். அடிகளார் அனைத்திற்கும் பொருள் அம்பலவாணர் அடியிணையே என்று சொல்லி அவற்றோடு இரண் டறக்கலந்தார்.

இவ்வரலாறு திருவாதவூரர் புராணத்தை அடி யொற்றியது.

அடிகள் வரலாற்றை அறிவிக்கும் தமிழ்நூல்கள் திருவுத்தரகோசமங்கைப் புராணம், திருவாதவூரர் புராணம், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், பரஞ்சோதி முனிவர் இயற்றிய திருவிளை யாடற் புராணம் முதலியனவாம். இவ்வைந்தும் அடிகள் வரலாற்றை ஒரேவண்ணமாக அறிவிக்க வில்லை என்பதைத் தமிழுலகம் நன்கறியும்.

நம்பி திருவிளையாடல் காலத்தால் தொன்மை யானது என்பது வெளிப்படை. அது மதுரையை ஆண்ட மன்னன் இன்னான் எனக் குறிக்கவில்லை.

'சந்திர குலத்தினிடோர் தானைவேல் வாகைமாறன் அந்தமில் முன்னோர்போல அவனியை அடைவிற் காத்து' என்றுமட்டும் குறிப்பிட்டுச் செல்கிறது. மணிவாசகர், மான மங்கலத்தார் எனப்படும். மரபில்வந்த ஆமாமாத்தியர் என்றும், கணநாதரின் அவதாரமென்றும் குறிப்பிடுகிறது. இதில் பிள்ளைத் திருநாமம் குறிக்கப்பெற்றிலாமை கவனித்தற்கு உரியது. ஆனாலும், பதினேழாம் பாட்டில் 'கற்ற வாதவூர் முனிவரை அழைத்து' என்று குறிப்பிடு கிறது. இக் குறிப்பும் இவர் இயற்பெயரை விளக் காது வாதவூரில் பிறந்த அந்தணர் குலத்தவர் என்பதையே அறிவிக்கும் போலும்.

குதிரை வாங்கப்புறப்பட்ட அமைச்சர், வழியில் திருக்கானப்பேர், காளையார்கோயில் முதலிய பல இடங்களை வழிபட்டுத் திருப்பெருந்துறையினை யடைந்தார். பின் உடன்வந்த தானை சேனைகளை அனுப்பிவிட்டார். ஆடிமாதத்தில் குதிரைவராது ஆவணியில்தான்வரும் வாங்கிக்கொண்டு வருவோம் என்று சொல்லி யனுப்பினர். பின்னர் இறை வழிபாட்டிற்காக நீருடித் திருக்கோயிலடைந்தார். குருந்தமரத்தடியில் குருநாதரைக் கண்டார். குரு ஐந்தெழுத்தை உபதேசித்தார். அதன் பிறகு வாதவூரர் திருவாசகத்தில் அதிசயப்பத்துமுதலாகப் பாடினர் என்கின்றது.

திருப்பெருந்துறைப் புராணம் அடிகளார் வரலாற்றை ஆறு படலங்களால் அறிவிக்கிறது.

அதில் இவர்தந்தையார் சம்புபாதாசிருதர் என்றும், தாய் சிவஞானவதி என்றும், இவர்கள் பரசமயக் குறும்பொழிக்கும் ஒருமதலை வேண்டுமென்றே வழிபாடு ஆற்றினர் என்றும், அதன்பயனாக இவர் நந்தியின் அவதாரமாக அவதரித்தார் என்றும், திருவாதவூரர் என்னும் பிள்ளைத் திருநாமம் வைக்கப் பட்டதென்றும் அறிவிக்கிறது. அரிமர்த்தனன் மந்திரிக்குப் பிரமராயன் என்றபட்டம் வழங்கினான்; வரிசைகள் பல செய்தான்; இதனை யறிந்த இருமுது குரவர்கள் புறச்சமயங்களை வெல்வதற்கு இதுவும் தக்க கருவியாக இருக்கும் என்று கூறினார்கள் என்றும், அரசனது நாளோலக்கப் பேரவையில் ஒரு நாள் சேரனும் சோழனும் வந்திருந்தபொழுது குதிரைகாப்பாளர் வந்து குதிரைப் படையின் குறைவைப்பற்றி அறிவித்தமையினால் குதிரை வாங்கச் சென்றார் என்றும், குருவாக எழுந்தருளிய இறைவன் சிவஞானபோதம் என்னும் நூலைக் கையிலே கொடுத்து அதன் உட்பொருளனைத்தை யும் உபதேசித்தார் என்றும் கூறுகிறது.

பரஞ்சோதி திருவிளையாடல் 'அமாத்தியப் பிராமண குலத்தில் வேதாகமங்களிரண்டும் விளங்க அவதரித்தார்; இவருக்கு அரசன் முதலமைச்சர் பதவி தந்து சிறப்புச் செய்தான்;* சிவஞான போதத்தைத் திருக்கரத்தில் ஏந்திக் குருநாதன்

* இங்கு, தென்னவன் பிரமராயன் என்ற பட்டம் அளித்தான் என்ற செய்தி வெளிப்படையாகக் கூறாதிருப்பது அறிதற்குரியது.

குருந்தமரத்தின் கீழ் இருந்தார்' என்பது முதலிய செய்திகள் காணப்படுகின்றன.

இவ்வாறு புராணங்கள் தோறும் சிறு சிறு மாற்றத்தோடு கூடிய வாதவூரடிகளின் வரலாறு திருவாசகத்துள் எவ்வாறு பேசப்பட்டுள்ளதென் பதனை அகச்சான்றுகொண்டு ஆராய்வாம்.

திருவாசகத்தில் திருவாதவூரர் :

அடிகளாருடைய இளமை வரலாறு ஒன்றும் இந்நூலால் அறியப்படவில்லையாயினும் 'வாதவூ ரினில் வந்தினிதருளி, பாதச்சிலம்பொலி காட்டிய பண்பும்' என்பது அடிகள் அவதரித்த ஊரைக் குறிப்பிடுகின்றது. இதில் இறைவன் இவருக்குப் பரநாதச் சிலம்பொலி கேட்பித்தார்; அதனாலேயே திருவார் பெருந்துறைச் செல்வனிடத்துச் சிந்தை சேர்ந்தது என்ற குறிப்புத்தோன்ற அடிகள் அமைந்துள்ளன.

இவருக்காக இறைவன் நரிகளைக் குதிரை களாக்கிக் கொண்டுவந்த வரலாறு "நரிகளெல்லாம் பெருங் குதிரை ஆக்கியவாறு அன்றே உன் பேரருளே" "நரியைக் குதிரைப் பரியாக்கி ஞால மெல்லாம் நிகழ்வித்து" என்ற பகுதிகளாற் பல இடங்களில் பேசப்படுகிறது. அவற்றுள் 'குதிரை யைக்கொண்டு குடநாடதன்மிசைச், சதுர்படச்சாத் தாய்த் தானெழுந்தருளியும்' 'நரியைக் குதிரை யாக்கியநன்மையும்' 'ஆண்டுகொண்டருள அழகுறு

திருவடி, பாண்டியன் தனக்குப் பரிமாவிற்று, ஈண்டு கனகமிசையப்பெறு து' என்றபகுதிகள், மிகச்சிறந்த வரலாற்று நுணுக்கங்களை உணர்த்துவனவாம்.

தமிழாராய்ச்சி என்றதொரு நூலை எழுதிய M. சீநிவாசய்யங்காரவர்கள் M. A. நரியைக் குதிரை யாக்கிய வரலாறு தமிழ் நாட்டில் தொன்று தொட்டு வழங்குகிறதென்றும், அதற்கும் மணிவாசகருக்கும் தொடர்பு சிறிதுமில்லை என்றும் கூறுகிறார்.*

மேற்காட்டிய பகுதிகளில் 'பரிமாவிற்று ஈண்டு கனகம் இசையப் பெறு து ஆண்டான் எங்கோன்' என மாணிக்கவாசகர் கூறுவதால் நரிபரியாக்கிய விளையாடல் மாணிக்கவாசகர்பொருட்டே இறைவன் இயற்றினன் என்பதைத் துணியலாமல்லவா? 'ஞால மிகப் பரிமேற்கொண்டு நமையாண்டான்' 'பாய்பரி மேற்கொண்டும் என் உள்ளம் கவர்வரால் அன்னே என்னும்' என்பன போன்ற பகுதிகளும் கருதத் தக்கன.

பரிகள் நரிகளான வரலாறு நேரேவிளக்கப் பெறுவிட்டாலும், 'மண்சுமந்து கூலிகொண்டு அக் கோவால் மொத்துண்டு', 'அடியவட்காகப் பாங்காய் மண்சுமந்து அருளிய பரிசும்' என்ற பகுதிகள்

* The Jackal miracle should be taken as one of the many floating myths current during the hymnal period of Tamil literature (A. D. 600—950), as he has not mentioned Manikka Vschakar in that connection.

குதிரைகள் நரிகளானமையால் அரசனுக்குண்டான சினமும், அடியவரை வருத்தியதும், வையைப் பெருக்கும், இறைவன் கூலியாளாகவந்து மண் சுமந்ததுமாகிய இத்தனைக் குறிப்புக்களை உள்ளடக்கி நிற்கின்றன. தில்லைவாழந்தணர்கள் அடிகளாரைப் பிச்சனென்று இழித்த பெற்றிமையை 'எவரும் தத்த மனத்தன பேச' என்றும், 'நாடவர் நம்தம்மை யார்ப்ப' என்றும் குறிக்கின்றார்கள். புத்தரை வாதில்வென்றதைத் திருச்சாழல் அறிவிக்கும்.

இன்னும் இறைவன் திருப்பெருந்துறையில் தம்மையாட்கொண்ட அருமைப்பாட்டினைக் 'கோகழி யாண்ட குருமணி', 'ஈர்த்து என்னை யாட்கொண்ட எந்தை பெருமான்', 'குருந்தின் கீழ் அன்றிருந்த கொள்கையும்' என்ற பகுதிகளால் நன்கு விளக்குகிறார். ஆட்கொண்ட பிறகு இறைவனை விட்டுப் பிரிந்ததைத் 'தூண்டுசோதி தோற்றியதன்மையும், அந்தணனாகி ஆண்டுகொண்டருளி, இந்திரஞாலங் காட்டிய இயல்பும்', 'பெருந்துறைச் செல்வனாகிக் கருவார் சோதியிற்கரந்தகள்ளமும்' என்ற பகுதிகள் நன்கு விளக்குகின்றன.

## திருவாதவூரர் மரபு:

இவருடைய பிறந்த குலத்தைப்பற்றிப் பெரும்பற்றப்புலியூர்நம்பி பேசாவிட்டாலும் ஆமாத்தியர், என்று ஒருவரும், அமாத்தியர் என்று ஒருவரும் கூறுவதைக் கண்டோம்.

பண்டிதமணி கதிரேசச் செட்டியாரவர்கள் ஆதிசைவ அந்தணர் மரபில் அவதரித்தவர் என்று கூறுவர்.* ஆலாசியமான்மியம் என்னும் வட மொழிப் புராணம், குலத்தைப்பற்றி ஒன்றுமே குறிக்காது விட்டுவிட்டது. இங்ஙனமாக அமாத்தியப் பிராமணரா? ஆமாத்தியப்பிராமணரா? சரியான வழக்காற்றுச்சொல் எது? என்பதனை ஆய்ந்தபோது அமாத்தியப் பிராமணர் என்பதே வழக்கிலிருக்கிற தென்று வடமொழி இலக்கண அறிஞர்கள் கூறு கிறார்கள். பிராமணராயிருந்து, மந்திரி பதவியை வகித்தமையால் இவரும் இவர் குலமும் அமாத்தியப் பிராமணர் என்று அழைக்கப்பெற்றனர்போலும்.

நேபாளத்துக்குப் பக்கத்தில் அமாத்திய தேசம் என்ற ஒன்று உண்டு. காஷ்மீரப் பிராமணன், குஜராத்திப் பிராமணன், சோழியப் பிராமணன் என்பன போல அமாத்தியதேசத்துப் பிராமணன் அமாத்தியப் பிராமணனாக இருக்கலாம் என்று சிலர் கூறுகிறார்கள். விஜயநகரத்துக்குப் பக்கத் திலேயுள்ள ஒரு ஊரில் அமாத்தியப் பிராமணர் என்ற ஒருபிராமணப்பகுப்பில் நான்கு குடும்பங்கள் துங்கபத்திரா நதிக்கரையில் ஆஹிரிபல்லியில் குடி யேறியிருக்கிறார்கள் என்றும் வரலாற்று ஆசிரியர் சிலர் கூறுகின்றார்கள். மாத்தியர் மாமாத்தியர் என்றசொற்கள் அந்தமண்டலத்தின் மத்தியிலுள்ள வர்களைக் குறிப்பதாகலாம். ஆதலால் பாண்டி

* திருச்சதகம் கதிர்மணிவிளக்கம் முன்னுரை பக்கம் 1.

மண்டலத்தின் மத்தியில் வசித்த இவர் மாத்தியர் மாமாத்தியர் என்று வழங்கப்பட்டாரோ என நினைக்க இடமுண்டு.

அமாத்தியர் என்னும் வகுப்பு தெலுங்கு நாட்டில் பிராமணர்களின் இருவகைப் பகுதிகளாகிய வைதீகி, நியோகி என்ற பிரிவுகளில் நியோகி வகுப்புக்கே மற்றொருபெயர். நியோகி என்றால், அரசரிடம் உத்தியோகம் பெற்றவன் என்று பொருள். அவர்களைச் சற்றுமட்டமான ஜாதியாகக் கருதுவர். அவர்களுக்கு அமாத்தியர், மந்திரி என்ற பட்டப்பெயர்கள் உண்டு.

திருத்தொண்டர் புராணத்தில் சிறுத்தொண்ட நாயனாரது வரலாற்றினைக் கூறவந்த சேக்கிழார் பெருமான், "மலர்புகழ்மா மாத்திரர்தங் குலம் பெருகவந்துள்ளார்" என்று குறிப்பிடுகிறார். சிறுத்தொண்டரும், அந்தண குலத்தவராய் அரசாங்க உத்தியோகம்பெற்றவர்; வாதாவிப்போரிலே வாகை சூடியவர்; ஆதியில் இவர் குலமும் வாதவூரடிகள் குலமும் ஒன்றாயிருக்கலாமோ என்றும் சிலர் ஐயுறுகின்றனர். 'மாமாத்திரர்' என்பது அமைச்சர், பிரதானி, காவலாளி இவர்கட்குப் பெயர். இவர் பிரதானியாதலின் மாமாத்திரர் எனப்பட்டார். அந்தணரில் வேள்வி செய்வாரும், அது செய்யாதவரும் என இருவகையார் உளர். வேள்விசெய்யாத பார்ப்பார் வேளாப்பார்ப்பார் என அழைக்கப் பெறுவர். இவர்களே அரசாங்க உத்தியோகத்தில்

இருப்பவர்களாவர். அவர்களில் இவரும் ஒருவர் போலும். ஆனல் எல்லா ஆதாரங்களும் அந்தணர் என்பதை வலியுறுத்துகின்றன. உட்பகுப்பில் மட்டும் வேறுபடுகின்றன.

இவருடைய 'விரதமே பரமாக வேதியரும் சரதமாகவே சாத்திரங் காட்டினர்' என்பன போன்றபகுதிகள் இவர் வேதியரல்லர் என்பதற்குத் துணை செய்யலாம். கொள்கையில் இவர் சுத்தாத் வைத சைவசித்தாந்தி ஆதல் துணிபு. ஆதலாலேயே பண்டிதமணியவர்கள் ஆதிசைவர் என்று துணிந்து கூறினர்களோ என்று எண்ண இடமுண்டாகிறது.

பதிகக்கருத்துக்கள் :

பதிகக்கருத்துக்கள், அச்சிட்ட திருவாசகங் களில் மிகச் சுருக்கமாக ஒவ்வொரு பதிகத்துத் தலைப்பிலும் எழுதப்பெற்றுள்ளன. ஆனல் அவை யாரால் எப்போது எழுதப் பெற்றன என்பது இது காறும் விளங்கவில்லை. ஆயினும் பின்னர் உரை எழுதப்புகுந்த ஆசிரியரனைவரும் அக்கருத்திற்கு விளக்கவுரை கூறிப்போந்தனர். அவற்றையெல் லாம் ஒருசேர நோக்கினலேயே பதிகத்தின் உண்மைக்கருத்துக்கள் விளங்கும்.

1. **சிவபுராணம்:** சிவனது அநாதிமுறைமை யான பழமை. புராணம் என்ற சொல்லுக்குப் பழமை என்பது பொருள். சிவபுராணம் சிவனது

பழமை. பழமையில், காலத்தொடுபட்ட பழமையும் காலங்கடந்த பழமையும் என இருவகை யுண்டு. இறைவனது பழமை காலங்கடந்ததாகலின், அநாதி முறைமையான பழமை எனப்பட்டது. பின்னர்க் குறிப்பு எழுதிய பெரியார் ஒருவர், சிவனது அநாதி முறைமையான பழமையாவது சிவனது அருவநிலை கூறுவதென்றார். இறைவன் கருணையால் உருவு கொள்ளுமிடத்துக் காலத்தொடுபட்ட பழமையே சித்திக்குமாகலின் காலங்கடந்த பழமையாகிய அருவநிலையை நாதன், குருமணி, ஏகன், ஈசன், தேசன் முதலான இறைவனுடைய உண்மை இலக்கணத்தால் உணர்த்துகிறார். இதனை, "ஈசர்தமக் கியல்பான திருநாமம் முதலெவையும், மாசு அறவே வாழ்கவென வாழ்த்துகின்ற அருட்குறிப்பாம்" என்று பழைய திருப்பெருந்துறைப் புராணம் கூறுகிறது.*

2. *கீர்த்தித்திருவகவல்:* இறைவன் ஆன்மாக்கள்மீதுகொண்ட அளவில்லாப் பெருங்கருணையால் பல தலங்களிலும் எழுந்தருளிப் பலருக்கு அருள் வழங்கியிருக்கின்ற புகழ்கள் எல்லாவற்றையும் தொகுத்துணர்த்தும். இதனைச் சிவனது திருவருட் புகழ்ச்சிமுறைமை என்று குறித்தார் முன்னோர். "புகழ்பெருகும் செய்கையெலாம் புகல் அகவல்" என்றார் பழைய புராண ஆசிரியர்.

* இனிப் பழையபுராணம் என வருவது இப்புராணத்தையே உணர்த்தும்.

3. *திருவண்டப்பகுதி:* இதற்குச்சிவனது தூல சூக்குமத்தை வியந்தது என்பது பழைய குறிப்பு. ஆனால் பதிகக்கருத்தும் பதிகப்பெயரும் முன்னைய போல ஒருநோக்குடையனவல்ல. இவ்வகவல் முதற் குறிப்பால் பெயர்பெற்றது. இதன்கண், இறைவன் சிறியவாகப் பெரியோனாகியும், சூக்குமமொடு தூல மாகியும், கருதாக்கருத்துடைக்கடவுளாகியும், உலக முழுதாய்விரிந்தும், அணுத்தருதன்மையின் அமைந் தும், பிரமன்மாலறியாப் பெற்றியனாக, எல்லாமாய் அல்லதுமாயிருக்கிற தன்மை விளக்கப்பெறுகிறது. இறைவனது ஐந்தொழிலாற்றும் வன்மையைப் பொதுவாக - விரிவாகக் கூறிய பகுதியாகும் இவ்வக வல் என்று விளக்கங்கூறும் மூற்கூறிய புராணம்.

4. *போற்றித்திருவகவல்:* இதற்கு, சகத்தி னுற்பத்தி என்றும் அதாவது பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கும் முறைமை என்றும் பழையகுறிப்பு கூறும். ஆன்மாக்கள், அல்லல்பெறும் பிறவி களாகிற யானைமுதல் எறும்பீறாகிய பல பிறவி களில் தப்பி மானிடப்பிறவியைச் சாரவும், மாதா உதரத்துப் பத்துமாதங்கள் இருந்து தப்பிப் பிழைக்கவும், ஆண்டு ஏறஏற உண்டாகும் அல்லல் களில் தப்பவும், வாழ்க்கைப்போராட்டத்தில் வினை யும் செல்வம், நல்குரவு, கல்வி, கல்லாமை முதலிய வற்றில் தப்பவும், பலவேறு சமயச் சழக்கர்களிட மிருந்து தப்பவும், பெருங்கருணைபுரிந்த பெருமா னின் உபகாரத்தையுணர்ந்தாலல்லது இறைவனைப்

போற்றுதல் நிகழாதாகலின், முதற்கண் எண்பத்தொன்பது அடிகளாற் பிரபஞ்சத் தோற்றமும், குருபரனாகவந்து ஆட்கொள்ளுமுறைமையும் கூறிப் பின், போற்றி தெரிவிக்கிறது. அதனால் இது போற்றித்திருவகவல் ஆயிற்று. உயிர்கள் உண்மையுணர்ந்து அருள்வழி நின்று போற்றுதலே முத்தி பெறும் நெறியாதலின் புராணவாசிரியர் 'முத்தி பெறு நெறியறியும் மொழிபோற்றித் திருவகவல்' என்றார்.

5. திருச்சதகம்: சதகம் என்பது நூறுபாட்டுக்களைக்கொண்ட ஒருபகுதி. இது அந்தாதித்தொடையால் இறுதியும் முதலும் மண்டலித்து முடிந்துள்ளது. இது, பத்திவைராக்கிய விசித்திரத்தை உணர்த்துவது என்று பழையகுறிப்புக் கூறுகின்றது. பின்னர்வந்த குறிப்புரைகாரர் ஒருவர், ஞானசாரியர் பத்துவகையாக இரட்சித்த முறைமையை உரைப்பது என்றுவிரித்துரைத்தார். பத்திவைராக்கிய விசித்திரம் என்பது அன்பால் விளைந்த பற்றறுதியால் உண்டான வியக்கத்தக்க பலவேறு நிலைகளையுணர்த்துவது எனப்பொருள்படும். பத்தி ஆண்டவன்மீது அடியார்கள் கொண்ட அன்பு. வைராக்கியம் அவ்வன்புக்கு இடையூறாகிய உலகப் பற்றை வெறுத்தல். விசித்திரம் பற்றற்றான்பற்றிற்காக ஒருபற்றை விடுதலாகிய வியக்கத்தக்கதன்மை. ஆகவே, இறை அன்பின் உவப்பும் உலக அன்பின் உவர்ப்பும் அடிகளநுபவமாகவிளைந்ததை விளக்கும்

பகுதி பத்திவைராக்கிய விசித்திரமாகிய திருச் சதகம் என்பது போதரும். இது பத்துவகையாக இருப்பதை முன்னர்க்குறித்தோம். பத்துவகையா வன மெய்யுணர்தல், அறிவுறுத்தல், சுட்டறுத்தல், ஆத்துமசுத்தி, கைம்மாறுகொடுத்தல், அநுபோக சுத்தி, காருணியத்திரங்கல், ஆனந்தத்து அழுந்தல், ஆனந்தபரவசம், ஆனந்தாதீதம் என்பன.

க. மெய்யுணர்தல் என்பது, உண்டானவை யாய்க் கன்மநுகர்ச்சிக்கு ஏதுவாய் இருக்கின்ற தநு கரண புவன போகங்களைக்கண்டு அவற்றின் நிலை யாமையை உணர்ந்து, நிலையுதலையுடைய கடவுளை அநுபவவாயிலாக அறிதல். பரிமேலழகர் 'பிறப்பு வீடுகளையும், அவற்றின் காரணங்களையும், விபரீத ஐயங்களானன்றி உண்மையான் உணர்தல்' என்று பொருள்கண்டார். இதனால் மெய்யான் உணர்தல் மெய்யுணர்தல் என மூன்றும்வேற்றுமைத்தொகைப் பொருளாகக் கொண்டார் என்பது தெளிவு. ஆத லால், அவர்கண்ட தத்துவஞானமாகிய மெய்யுணர் தல், தத்துவங்களை யறிதலாகிய பாசஞான மாகுமே யன்றிச் சிவஞானமாகாது; அடிகளார் கூறும் மெய்யுணர்வு 'உன்னை நெகிழவிடேன்' 'உன்னையல்லாது உள்ளேன்' என இறைவனை உணர்ந்தும், 'இறுமாந்து என்னபாவம் திரித வரே' எனஉணராதார் நிலைக்கு இரங்கியும், 'அவன் எம்பிரான் என்ன நான் அடியேன் என்ன' என் றும், 'எம்மைக் காப்பவன்' என்றும், 'மெய்தான்

அரும்பி' 'போற்றி போற்றி' என்றும் தன் அநுபவம் கூறியும், செம்பொருளாகிய சிவத்தைஉணர்ந்தமையை - நுகர்ந்தமையை அறிவிக்கின்றார். ஆதலால், மணிவாசகர்கண்ட மெய்யுணர்தலும் பரிமேலழகர் வரைவிலக்கணம் உணர்த்தும் மெய்யுணர்தலும் வேறுதல் தெளிவு. வள்ளுவரும், 'மெய்ப்பொருள் காண்பதறிவு', 'மெய்ப்பொருள்கண்டார்', 'செம்பொருள் காண்பது அறிவு,' எனத் தத்துவாதீதப் பழம்பொருளைக் காணுதலே மெய்யுணர்தல் என்று கூறியிருப்பது நுனித்தறிந்து இன்புறுதற்குரியது.

௨. அறிவுறுத்தலாவது, மெய்ப்பொருளினை யுணர்ந்து அதன் அருளை எதிர்நோக்கி யிருக்கின்ற வாதவூரடிகள் அதற்குத் துணையாக இருக்க வேண்டியமனம் மாறுபிருத்தலைக்கண்டு இன்சொற் கூறியும், இடித்துரைத்தும் அறிவுறுத்துகின்றார். ஆதலால் இப்பத்தும்அறிவுறுத்தல் என்றுகுறிக்கப் பெற்றுள்ளது.

சிவ. அருணகிரி முதலியார் அவர்கள் 'பொறியோடே கூட்டுதல், அருள் தெரிசனம், குரு தெரிசனம்' என்று குறிப்புரைத்துள்ளார்கள்.

பண்டிதமணி யவர்கள் 'உடல் முதலிய மாயேயங்களின் நிலையாமையையும், மெய்ப்பொருளின் நிலையுதலையும் உணர்ந்து, ஆண்டவன் திருவருளை வேண்டி அதற்குத் துணைபுரியவேண்டிய மனம்

வெறுத்துச்சேர்தலைக் கண்டு, அந்நெஞ்சிற்கு அறிவுறுத்தியது' என்று விளக்கம் காண்பார்கள்.

கா. சுப்பிரமணியபிள்ளையவர்கள் 'இப்பதிகத்தின் இறுதி இரண்டு செய்யுட்கள் நெஞ்சிற்கு அறிவுறுத்தலாக முடிதலின் இத்தலைப்பு அமைத்தனர் போலும்' என்கின்றார்கள்.

௩. சுட்டறுத்தல். அஃதாவது தன்செயல் அறுத்தல் என்பது பழைய குறிப்பு. பண்டிதமணியவர்கள், 'துணை செய்யாமனத்தை இடித்துரைத்து அறிவுறுத்தியபின் அது தியானவாயிலாகவும் பொறிவாயிலாகவும் அறியும் சுட்டறிவினால் இறைவனைக்காண முயற்சிக்க, அடிகளார், அம்முயற்சி ஓரளவு சாதனமாகுமேயன்றிமுற்றும் பயன் தராது; ஆதலால் இத்துணையன், இவ்வண்ணத்தன், இவன் இறைவன் என்று சுட்டி அறியப்படும் ஆன்ம போதத்தை அறுக்கின்றார் ஆதலின் சுட்டறுத்தலாயிற்று' என்பார்கள்.

கா. சு. அவர்கள் 'இப் பதிகத்திலும் இறுதிச் செய்யுள் அகண்ட வழிபாட்டைக் குறிப்பதால் இத் தலைப்புப் பெற்றது' என்பார்கள்.

அடிகளார், முதற்பாட்டிலேயே விண்ணோர் பெருமான் என்று கேட்டவுடன் அன்புமீதூறித் தன்வசமழிந்து உடம்பெல்லாம் நெஞ்சாய் உருகவில்லை; உடம்பெல்லாம் கண்ணாய் நீர் பெருக்கவில்லை

யென்று நுகர்வானும் நுகர் பொருளும் வேறே இருந்துணரும் சுட்டறிவு இருத்தற்கு வருந்திக்கூறு கின்றூர். இங்ஙனமே ஏனைய பாடல்களும்.

௪. ஆத்துமசுத்தி. அதாவது அநுபவத்தில் அழுந்தல் என்பது பழைய குறிப்பு. சுட்டறுத்தலில் கூறியாங்கு உண்மையுணர்ந்த ஆன்மா தூயதாய் அநுபவத்து அழுந்துகின்றதனை அறிவிப்பதால் இது ஆத்துமசுத்தியாயிற்று.

பண்டிதமணியவர்கள், 'சுட்டறுத்து இறைநிலை யுணர்தற்குச் சிறந்த கருவியாகிய மெய்யுணர்வு விளக்க முறுதற்கு வினைமாசு நீங்கிய தூய்மைநிலை உயிர்க்கு இன்றியமையாதது; அது இறைபணி நிற்றலால்எய்தப்பெறும்' என்று விளக்குகிறூர்கள். கா. சு. அவர்கள் 'நெஞ்சறி வுறுத்தலினாலே உயி ரைத் தூயதாக்குதல்' என்பர்.

௫. கைம்மாறு கொடுத்தல் என்பதற்குத் 'தன்னைச் சிவனிடத்திலே கொடுத்தல்' என்பது அருணகிரி முதலியார் குறிப்பு. பண்டித மணி அவர்கள் 'அடிகளார், அருளமுது ஊட்டிய ஆசாரி யனுக்குத் தாம்செய்யும் கைம்மாறு யாதென ஆராய் வாராக, தமதென்று ஒன்றுமில்லாமையை யுணர்ந் தும், ஒரொருகால் எழுந்த உயிர்முனைப்பால், எழுந்த எண்ணம்' என்பார்கள். கா. சு. அவர்கள் 'இப்பதிகம் பதில் உபகாரம் அளிக்க இயலாமை யைக் குறிப்பது' என்பர்.

அடிகளார் இறைவன் தமக்குச் செய்த உபகாரத்தை 'வருகஎன்று பணித்தனை' 'தொண்டனேற்கு உள்ளவா வந்து தோன்றினாய்' 'ஆட்கொண்ட கூத்தனே,' 'எனை அன்பரில் கூய்ப் பணிகொள்ளுங்கில்' 'யாவரும் காணவே மண்டபம் ஏற்றினை' முதலிய பகுதிகளால் சொல்லிச்சொல்லி இன்புற்று அதற்குக் கைம்மாறு தேடுவாராக, 'கிற்றிலேன்' எனவும் 'அறிவனே அல்லனே' எனவும் கூறித் தமது முடியாமையையும், செய்ந்நன்றியறிதலைக் கூட மேற்கொள்ள முடியாமையையும் விளக்கி அருள்கின்றார். அல்லாமலும் அவர் செய்த உபகாரத்துக்கு மாறாகக் 'கண்டும் கண்டிலேன்' 'புலன் போற்றிப் பூணுமாறு அறியேன்' 'கழல் கண்டும் பிரிந்தனன்' எனத் தம்தவறுகளை உணர்த்தியதோடு 'ஏற்றுவந்து எதிர் தாமரைத்தாளுறும் கூற்றமன்னதோர் கொள்கை என் கொள்கை' என்று அபகாரம் செய்ததையும் அறிவிக்கின்றார். இவை யனைத்தையும் ஒத்துநோக்குகிறபொழுது பேருபகாரஞ் செய்த பெருமானுக்குத் தாம் ஒன்றுஞ் செய்ய முடியாமையாகிய எளிமையையே கைம்மாறாகக் கொடுத்தார் என்று எண்ணக்கிடக்கின்றது.

சு. அநுபோக சுத்தி என்பது சுகமேலீடு என்பர் சிவ அருணகிரி முதலியார். பண்டிதமணி அவர்கள் 'வலிந்து ஆட்கொண்டபெருமானை அநுபவிக்க உடல் தடையாயிருப்பதற்கு இரங்கி, உடற்

பற்று லுண்டாகும் அழுக்கை ஒழித்து, உயிரைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுதல்' என்பார்கள். இதனுற் போந்த பொருள் அநுபோகத்திற்காக ஆன்மாவைச் சுத்திசெய்தல் என்பதாம். கா. சு. அவர்கள் 'சிவாநுபவத்தின் பொருட்டு ஆன்மசுத்தி செய்தலைக் குறிக்கின்றது' என்பர்.

எ. காருணியத்து இரங்கல் என்பது 'இறைவனுடைய வெற்றிப்பாட்டுக்கு இரங்குதல்' என்பர் அருணகிரி முதலியார். பண்டிதமணியவர்கள் 'ஆண்டவன் கருணையைக் குறித்து இரங்குதல். அதாவது, சிவப்பேற்றிற்கு முன்னரும் பாசநீக்கத்தின் பின்னரும் வேண்டற்பாலது திருவருட் பதிவாதலின் அவ்வருள் காருணியம் என்று குறிக்கப்பட்டுள்ளது' என்பார்கள். கா. சு. அவர்கள் 'கருணையினுலே இரங்கும்படி இறைவனை வேண்டிக்கொள்வது' என்பார்கள். இவ்விரு குறிப்புக்களில் ஒன்று கருணையைக் குறித்து அடிகள் இரங்குவதாக உள்ளது. பதிகப்போக்கு போற்றி என்றுமுடிவதாலும், 'உம்பர் தந்தருளு' 'தருகநின்பாதம்' என வேண்டிக்கொள்வதாலும் காருண்யத்திற்காக அடிகள் இரங்கினர் என்பதை அறியலாம்.

அ. ஆனந்தத்து அழுந்தல். என்பதுசிவானந்தத்து அழுந்தி நிற்றலாம். அழுந்தி நிற்றலாவது, அநுபவமும் அநுபவிப்பவனும் ஒற்றித்து நிற்றல். பண்டிதமணியவர்கள் 'பேரின்பத்தில் அழுந்தி

நிற்றல்; அதாவது இறைவன் கருணையின் பயனாக வுள்ள சிவானந்த விளைவில் திளைத்தல்' என்பார்கள்.

வெள்ளியம்பலவாண சுவாமிகள், சிவானந்தா நுபவம் என்பது சிவ ரசத்தை அறிதல். அதாவது தேனும் இன்னமுதமாய்ச்சிவபெருமான் தித்தித்தலை அறிதலாம் என்பார்கள். அதனால் சிவானந்தம் வெள்ளம். வெள்ளம் என்பது ஒருகாலும் குறைவு நிறைவின்றி ஒரு தன்மைத்தாய் நிற்கும் பெருந் தன்மை என்று முத்திநிச்சயப்பேருரையில் குறித் துள்ளார்கள். மூல நூலாசிரியராகிய குருஞான சம்பந்த சுவாமிகள் 'சிவானந்த வெள்ளம் திளைத்து' என்று அருளுவார்கள்.

௯. ஆனந்தபரவசம். அங்ஙனம் ஆனந்த வெள்ளத்து அழுந்தியிருக்கின்ற போது ஆனந் தத்தை நுகர்கின்றோம் என்ற அறிவும் அற்றுப் போகப் பரவசமடைதல். பண்டிதமணியவர்கள் 'ஆனந்தாநுபவத்தில் தலைப்படக் கிடைத்ததும் அதன்கண் மேன்மேலும் ஈடுபட்டுத் தன்வசமழிதல் ஆனந்த பரவசமாகும்' என்பர்.

௧0. ஆனந்தா தீதம் என்பது அங்ஙனம் தன்வசம் அழிந்த ஆன்மா சிவானந்தாநுபவத்தில் கடந்த நிலையை அடைந்து, சிவவிளக்கம் முற்றப் பெற்றிருத்தலாம். இதற்குக் குருஞானசம்பந்த சுவாமிகள் 'ஓங்கு சிவானந்த வெள்ளந் திளைத்து அதுவாய் மேவுதல்' என்று வரைவு இலக்கணங் கூறுவார்கள்.

6. **நீத்தல் விண்ணப்பம்:** இதன் கருத்து, பிரபஞ்சவைராக்கியம் என்று பழையகுறிப்புரை கூறுகிறது. பிரபஞ்சத்தை அசத்தெனக்காட்டி அருளிய முறைமை என்று விளக்கங் காண்பர் பின்னோர். கா. சுப்பிரமணியபிள்ளை அவர்கள் உலகப்பற்று விடுதற்கு இறைவனை வேண்டுதல் எனவும், என்னை நீக்கிவிடாதே என்று இறைவனை வேண்டிக்கொள்ளுதல் எனவும் பொருள் கொள்ள லாம் என்பர். இது ஐம்பது செய்யுட்களையுடையது. அந்தாதித் தொடையாக இறுதியும் முதலும் மண் டலித்து முடிந்திருக்கிறது. முழுவதும் 'விட்டிடுதி கண்டாய்' 'தளர்ந்தேன் என்னைத் தாங்கிக்கொள்' 'என்னைவிடின் உத்தரகோசமங்கைக்கரசின் சீர் அடியார் அடியான் என்று சிரிப்பிப்பன்' என்று கூறுவதால் இறைவன் தன்னைப் பிரிந்தமைக்காக விண்ணப்பித்துக்கொண்டதாம். இறைவன் தன் னைப் பிரியநேர்ந்தது, பிரபஞ்சப்பற்றே காரண மென்பது திருவுள்ளத் தெழப் பிரபஞ்சத்தின் நிலையாமையைக் காட்டி இறைவனைக் காத்தருள வேண்டுமென்கின்றது இப்பகுதி.

ஒன்று சிறப்பாக நினைவுறத்தக்கது. முற்கூ றிய சதகமென்னும் பகுதியும் நூறு பாடல்களால் அந்தாதியாக முடிந்தது. சதகமென்பது தொண் ணூற்ரூறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்ருகத் தனி நூலின்பெயராகப் பாட்டியல்கள் கூறுகின்றன. இங்கே சதகம் ஒருநூலுக்கு உறுப்பாயிருக்கிறது.

அங்ஙனமே ஐம்பது பாட்டுக்கொண்ட அது தனி நூலாக எங்கும் குறிக்கப்பெறுமையின், அந்தாதித் தொடையான் ஐம்பது பாட்டான் முடிந்திருந்தும் எண்ணடியாகப்பிறந்த பெயரை ஏற்கவில்லை. அங்ஙனமே கோயில் மூத்ததிருப்பதிகம், கோயில் திருப்பதிகம் என்பனவும் பத்துப்பாடல்கொண்ட அந்தாதித் தொடையால் முடிந்துள்ளன. ஆதலால் திருச்சதகம் என ஒருநூற்பெயர் ஒருபகுதிக்கு ஆகியிருத்தல் ஆராயத்தக்கது.

7. **திருவெம்பாவை:** இது சத்தியை வியந்தது என்று கூறும் பழைய குறிப்பு. பிரபஞ்சத்திற்கு அநுக்கிரகிக்க, சதாசிவமூர்த்தி திருவருளால் மகேசுவரதத்துவத்திலே மனோன்மனி சர்வபூத தமனியைப் பிரேரிப்பர். அவர் பலப்பிரமதனியைப் பிரேரிப்பர். அவர் பலவிகர்ணியைப் பிரேரிப்பர். அவர் கலவிகர்ணியையும், அவர் காளியையும், அவர் ரௌத்திரியையும், அவர் சேஷ்டையையும், அவர் வாமையையும் முறையே பிரேரிப்பர். இங்ஙனம் நவசத்திகள் பிரேரிக்க அநந்ததேவராலே அசுத்தமாயை காரியப்பட்டு மண்ணீறுன பிரபஞ்சங்கள் உண்டாம். இங்ஙனம், ஒருசத்தி ஒருசத்தியை எழுப்புதலே திருவெம்பாவையின் தத்துவக்கருத்து. திருவெம்பாவை மார்கழிமாதத்திலே விடியற்காலத்தில் மாதர்கள் ஒருங்குசேர்ந்து குளத்திற்குச்சென்று நீராடும் பொழுது ஒருவரைநோக்கி மற்றொருவர் குறிப்பிடுவதாக அமைந்திருப்பது. இதனைப்பற்றிப்

பழைய திருப்பெருந்துறைப் புராணமுடையார் 'மலவிருள் உற்று உறங்காமல் மன்னுபரி பாகர் அருள், செலமுழுக வருக எனச் செப்பல் திருவெம் பாவை' என விரிப்பர். இந்தப்பாட்டுக்கள் ஒவ் வொன்றும் 'எம்பாவாய்' என முடிதலால் திரு எம் பாவை என அழைக்கப்பெற்றது.

வைணவ நூலாகிய நாலாயிரப்பிரபந்தத்தில் திருப்பாவை என்ற ஒரு பகுதி காணப்படுகிறது. அது தைநீராடி மாதர்கள் நெய்யுண்ணுமலும், பால் உண்ணுமலும், பூசுவ பூசாமலும், புனைவபுனையாம லும், செய்யத்தகாதன செய்யாமலும் நோற்கின்ற ஒருவகை நோன்பு என்று கூறப்பெற்றுள்ளது. இது அங்ஙனமன்றி நவசத்திகள் தம்முள் எழுப்பிக் கொள்வதாக - பிரபஞ்ச சிருஷ்டி அறிவிப்பதாக அமைந்திருத்தல் இதன் தனிச்சிறப்பை விளக்கு வதாம்.

8. திருவம்மானை: இதற்கு ஆனந்தக்களிப்பு என்று பழையகுறிப்புக் கூறுகின்றது. அம்மானை என்று பிரபந்தவகைகளுள் ஒன்று உண்டு. மூன்று மகளிர் ஒருங்கு இருந்து அம்மானை ஆடுங்காலத்துப் பாட்டுடைத்தலைவன் புகழை ஒருத்தி வினவாகப்பாட ஒருத்தி விடையளிக்கும் முறையில்பாட மற்றொருத்தி அதற்குக் காரணங் கூறுமுறையில் பாடுவதாக அமைந்திருக்கும். இது ஒருத்தியேபாடுவதாக அமைந்திருக்கிறது. கடைசிப்

பாட்டில் 'பேரானந்தம் பாடுதுங்கா ணம்மானாய்' எனமுடிவதால் ஆனந்தக்களிப்பாயிற்று. அம்மனை ஆய் என்பது அம்மானாய் என விகாரப்பட்டதென்று கொண்டு அம்மானையாடும் பெண்கள் பலர் இருந்து ஆளுக்கு ஒன்றாகப்பாடி ஆடியது என்பர் சிலர். இதன் உண்மையைக் கூறுகின்ற புராண ஆசிரியர் திருமாலும் காணரிய சேவடியோடு குருமூர்த்தியாய் எழுந்தருளி ஆட்கொண்ட கருணையை நினைத்துப் பாடியது என்பர்.

9. திருப்பொற்சுண்ணம்: இது பொன்னிறமான வாசனைப்பொடி இடிக்குங்கால் மகளிர் தம் தலைவன் புகழைப் பாடிக்கொண்டு இடிப்பது. இசை தொழிலின் துயர்தோன்றாதவாறு தடுப்பதோடு பொருளால் இன்பத்தையும்விளைவிக்கும். ஆதலால் சுண்ணமிடிக்கும் மகளிர் பாடுவதாக அடிகளால் அருளிச்செய்யப்பெற்றது. இதன்கருத்து 'ஆனந்த மனோலயம்' என்று பழையகுறிப்பு அறிவிக்கும். அதற்குக் குறிப்புஎழுதப்புகுந்த அருணகிரிமுதலியார் 'தானன்றி நிற்றல்' என்பர். சிவானந்தத்தால் தான்கெட்டு மனோலயமானபிறகு தோன்றுவது ஒன்று மின்மையின் தானன்றி நிற்றல் என்பது ஆனந்த மனோலயத்திற்கு ஏற்ற உரையாயிற்று. இதற்கு, முற்கூறிய நவசத்திகள் தநுகரணபுவன போகங்களாகிய கூட்டுப்பொருள்களை இட்டு இறைவனுக்குச் சுண்ணமிடிக்கக்கூவுதல் என்று பழைய புராணம் கூறும்.

10. திருக்கோத்தும்பி: தும்பிஎன்பது வண்டு, தும்பி, தேன், ஞிமிறு என்ற நால்வகைத் தேனீக் களில் ஒன்று. நறு நாற்றத்திலேயே செல்வது.? கோத்தும்பி என்பது அரசவண்டு. பிரிவாற்றாத தலைவி தலைவனிடம்சென்று அவன் திருவடிக்கமலங் களில் ஊதுக என வேண்டிக்கொள்வதாகப் பாடப் பெற்றது. இதன் உட்கிடை 'சிவஞானைக்கியம்' என்று தெரிவிக்கிறது பழைய குறிப்பு. மனமாகிற அரசவண்டைப்பார்த்துச் சிவபெருமானுடைய திரு வடித்தாமரைகளில் ஊது என்று வேண்டிக்கொள் வதால் சிவனோடு ஐக்கியமாயிற்று. இதற்குச் 'சிவ னுடன் இடையறாதுநிற்றல்' என உரைகாண்பார் அருணகிரிமுதலியார். 'சிவபோதத்திற்குப் பிரிவு உண்டாக அதற்கு மனத்தையே தூதாக அனுப் புதல் கோத்தும்பி' என்பர் பழையபுராணகாரர்.

11. திருத்தெள்ளேணம்: இது மகளிர் விளை யாட்டில் ஒன்று என்று எல்லாக்குறிப்புரைகளும் கூறுகின்றன. 'பாடிநாம் கொட்டாமோ' என்று அடிகளார் குறிப்பிடுவதால் பாட்டுக்கேற்பக் கை கொட்டியோ பறைகொட்டியோ இயற்றப்பெறும் விளையாட்டாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. இதன் கருத்து 'சிவனோடு அடைவு' என்றும், அதா வது 'சிவனோடுசென்று கூடுதல்' என்றும் குறிப்புக் கள் கூறுகின்றன. இக்கருத்தைச் 'சிவமான வாபாடி' 'தேவானவாபாடி' 'கழல்மறவாவண்ணம் நல்கிய திறம்பாடி' என்பன போன்ற பகுதிகள் நன்கு விளக்குகின்றன. சிவபோத இன்பம் மிகுந்து

தென்ன தென்ன என்று தெள்ளேணங் கொட்டு வது என்று பழையபுராணம் கூறுகிறது.

12. திருச்சாழல்: இதுவும் மகளிர் விளையாட்டினுள் ஒன்று. எத்தகைய விளையாட்டென்பது அறியக்கூடவில்லை. இதன் கருத்து, சிவனுடைய காருண்ணியம் எனவும், சிவனுடைய அருட்சத்தி விளையாட்டெனவும் குறிக்கப்பட்டுள்ளது. சிவன் ஆன்மாக்கள் மீது வைத்த காருண்ணியத்தினலேயே வெண்ணீறு பூசுதல், அராப்பூணுதல், கோவணம் உடுத்தல் முதலிய அருட் செயலைச் செய்கின்ருர் என்று அறிவிக்கிறது. ஊமைப் பெண்ணைக்கொண்டு சிவத்தினது முழுமுதற் றன்மையை மொழிந்தது திருச்சாழல் என்று புராணம் கூறும்.

பதிகத்தின் அமைப்புமுறையினை நோக்கும் பொழுது சாழல் என்பது வினுதலும் விடையிறுத்தலுமாகிய விளையாட்டு என்றுகருதக்கிடக்கின்றது. இப்போதும் சில பெண்குழந்தைகள் கூடியிருந்து பூவல்லாப் பூ என்ன பூ? உப்பு. எங்கே போகிருய் ஊருக்குப்போகிறேன். என்ன ஊர் பாலூர் என்று வினுவும்விடையுமாக விளையாடுவதைப்பார்க்கிருேம். அது போன்றது ஒன்ருக இருக்கலாமோ இது என்று ஆராயத்தக்கது.

13. திருப்பூவல்லி: பூவோடு கூடிய கொடி என்பது இதன் பொருளாம். பூ அல்லி எனப்பிரித்து

அல்லிப் பூ என்று சிலர் பொருள் காண்பர். இதுவும் மகளிர் விளையாட்டினுள் ஒன்று. மகளிர் பலர் கூடிப் பூப்பறித்தலும், நீர்ப்பூக்களைப் பறித்தலும், அவற்றைத்தம் தலையிலும் குழமகன் தலையிலும் சூட்டி மகிழ்தலும் மரபு. அங்ஙனம் அவர் பறிக்கின்றபோது இறைவன் புகழைப் பாடுவதாக அமைந்துள்ளது.

இதன் கருத்து மாய விசயம் நீக்குதல் என்பர். அதாவது மாயையின் பலத்தை மறுத்தல் என்பது பழையகுறிப்பு. மணமும் நிறமும் மென்மையும் அழகும் பெற்று உயிர்களை மயக்குகின்ற மாயா காரியமான பூக்களைக் கொய்தலும், இறைவன் புகழைப் பாடுதலும் மாயையின் வெற்றியை இழிக்குஞ் செயலாதலின் இங்ஙனம் கூறப்பட்டது போலும். இதற்கு அரி அயன் தக்கன் முதலாயினோரும் பாண்டியனும் மயங்கியிருந்த நிலையை இறைவன் போக்கினரென்ற புராணவரலாறுகளும் பெருந்துணைசெய்யும். சிவபெருமான் வலியவந்து ஆட்கொண்ட திறத்தை ஆவலோடும் சொல்லிக் கொண்டு அடியாரோடுகூடப் பூக்கொய்தல் பூவல்லியாம் என்பர் புராண ஆசிரியர்.

M. S. பூரணலிங்கம்பிள்ளை திருப்பூஅல்லி என்பது தெய்வீக அல்லிமலர் என்றும், அதன் குறிப்புப்பொருள் மாயா விசயம் நீங்குதல் என்றும், பூ - பூமி, அல் - இருள், இ - நீக்கல், ஆகவே உலகின் இருளை நீக்கல் எனப்பொருள்படும் என்றும் கூறுவர்.

ஒவ்வொரு பாடலிறுதியிலும் 'பூவல்லிகொய்யாமோ' என முடிவதால் உலகின் இருளை நீக்குதலைக் கொய்வோம் எனப்பொருள்பட்டு நேர்மாறான பொருள் தந்து மரபைக்கெடுக்கும். ஆதலின் அவர்கள் கருத்து ஆராயத்தக்கது.

14. **திருவுந்தியார்:** இது 'உந்தீபற' என்று முடிவதால் பறந்து விளையாடுகின்ற ஒருமகளிர் விளையாட்டாகலாம் என்று தோன்றுகிறது. தட்டாமாலை சுற்றி விளையாடுதல்போல் இருக்கலாமோ என்றஐயம். அங்ஙனம் விளையாடும்பொழுது பறந்து சென்று தொடுகின்றவள் இறைவன் புகழைப்பாட, தொட இருக்கின்றவள் அதன் விளைவைக் கூறுதலாக ஒவ்வொருபாட்டும் முடிந்துள்ளது. உம் தீபற எனப்பிரித்து உம்முடைய கெடுவினைகள் பறப்பதாக என்று உரைப்பாரு முளர். சின்னஞ்சிறிய மகளிர் நிலையிலிருந்து சிவன் புகழைக்கூறிக் களிக்கும் அடிகளார் இத்தகைய கருத்தைத் திருவுள்ளத்துக்கொள்ளார் என்பது வெளிப்படை.

இதன்கருத்து 'ஞானவெற்றி' அதாவது 'அருட்சத்தியின் சாமர்த்தியம்' என்றது பழையகுறிப்பு. மும்மல காரியமாகிய முப்புரங்களும் இறைவனது அருட்சத்தியினால் கெட்டமையையும், ஆணவமலவடிவான தக்கன் அழிந்தமையையும், அதனோடு தொடர்புடைய சூரியன் முதலான பலவேறு ஆன்மாக்களின் முனைப்பு அடங்கினமையையும்

அறிவிப்பதால் ஞான வெற்றி ஆயிற்றுப்போலும் இறைவன் புகழைத் தீவினையால் வந்தகேடு நீங்கப் பாடுவது என்பது பழையபுராணம்.

பெரியாழ்வார் திருமொழியில் (3—9) உந்தி பறத்தலாவது, தனது தலைவன் வெற்றியை வாயாற் புகழ்ந்துகொண்டு உயர எழுந்து குதித்தல் என்பர். இது இரண்டுமாதர்கள் இறைவன் தம்மை ஆட்கொண்ட முறைமையைச் சொல்லிக்கொண்டு துள்ளிக்குதித்தலாம்; இதனால் உந்திபறத்தலின் உண்மையான உரை அறியப்படும்.

15. திருத்தோணோக்கம்: தோள் நோக்க மென்பது தோளைப்பார்த்தோ அல்லது தோளைத் தீண்டியோ விளையாடும் மகளிர்விளையாட்டு. 'தோள் நோக்கம் ஆடாமோ' என வருவதால் தோளோடு தோள் பிணையநின்று ஆடுதலாகவும் இருக்கலாம். இதன் கருத்து, பிரபஞ்சசுத்தி என்றும் அதாவது ஆன்மாக்களைச் சுத்தி கரித்தல் என்றும் பழைய குறிப்புக் கூறும். உலகவாழ்வைச் சதமென்றெண் ணிக் கானல்நீரைக் கைநிறைய அள்ளிக் குடிக்கும் அறிவிலிபோலாகாமல், என்றும் பிறந்திறந்து மயங்காமல் சித்தஞ் சிவமாக்கிச் செய்தன எல்லா வற்றையும் தவமாக்குகின்ற அத்தன் கருணையினல் நாம் தோள் நோக்கம் ஆடுவோம் என்பனபோன்ற பகுதிகள் ஆன்மாக்களின் மலத்தை அகற்றிச் சிவ ஞானத்தைச் சேர்ப்பிக்கின்ற மறைமொழிகளாய் இருத்தலின் பிரபஞ்சசுத்தி ஆயிற்றுப்போலும்,

பழையபுராணகாரர் "சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே புண்ணியமாய், அத்தன் செயுங்கருணைக்கு ஆராமை யுண்மிகுந்து, பொத்தியகை கொட்டிப் புகழ்தல் தோணோக்கம்" எனக் கூறுவர். இதனால் கைகொட்டி ஆடுதலே தோணோக்கம் என்று இவர் கருதுகிறார் ஆயிற்று.

16. திருப்பொன்னூசல்: மகளிர் பொன்னாற் செய்த ஊஞ்சலில் இருந்து, இறைவன் புகழைப் பாடிக்கொண்டு ஒருவரை ஒருவர் 'பொன்னூசல் ஆடாமோ' என்று வினவுவதாக அமைந்தது. இது அருட்சுத்தி அதாவது அருளொடுகலத்தல் என்பது பழைய குறிப்பு.

வைணவசம்பிரதாய நூல்களில், திருமாலையும் பெரியபிராட்டியாரையும் ஊஞ்சலில் எழுந்தருளுவித்து அவர்கள் புகழைப்பாடித் தோழியர்கள் ஆட்டுவதாக வருகிறது. சைவநூல்களில், இறைவன் புகழைப்பாடி மகளிர் ஆடுவதாக வருகிறது. அருட்சுத்தி என்பது, அருளொடுகலத்தலால் ஆன்மா அடையும் சுத்தியை அறிவிப்பது.

பழையபுராண ஆசிரியர், அருட்சத்தி இருந்து ஆடத் தாலாட்டுதல் பொன்னூசல் என்று குறிப்பிடுகிறார். இதனால் ஊஞ்சலில் இருந்து ஆடுவது அருட்சத்தியும், ஆட்டுவது ஏனையோருமாக என்பது பெறப்படுகின்றது.

17. அன்னைப்பத்து: பிரிவால்வருந்திய தலைவி உடல்மெலிந்து, உள்ளந்திரிந்து, செய்கை ஓய்ந்து, ஆயத்தொடு விளையாடாது, உணவும் வெறுத்து, ஓரிடத்துத்தனித்திருத்தலைக்கண்ட தாய்,தோழியை நோக்கி, இம்மாறுபாடு இவட்கு எதனால் ஆயது என்ன, தோழி அறத்தொடு நிற்பாளாகத் 'தலைவி வாய்சோர்ந்தும் இங்ஙனம் கூறுகின்றாள்' என்று தாய்க்கு அறிவித்தது. இதனை ஒரு பெண் தன் தாய்க்குச் சொன்னதாகக் கூறுவாருமுளர். அறத்தொடு நிற்குமுறையில் தலைவி தாய்க்கு அறத்தொடுநிற்றல் இலக்கண வரம்புடையதன்று ஆதலால் அக்கூற்று ஆராய்தற் குரியது.

இதற்கு ஆத்துமபூரணம் என்றும், அதாவது ஆன்மா சிவனோடு நிறைதல் என்றும் பழைய குறிப்பு பொருள் காண்கின்றது. ஆன்மா சிவத்தோடு ஒன்றித் தன்தன்மை கெட்டு, எல்லாம் சிவமயமான உன்மத்தமே இன்று எனக்கு ஆயிற்று என்பதை இப்பத்தும் அறிவித்தலின், ஆத்மபூரணம் ஆயிற்றுப்போலும். பழையபுராணகாரர் காதல் கைம்மிகுந்து தன்நிலைகுலையத் தலைவனோடு கூடுதலைத் தாய்க்கு அறிவிப்பது அன்னைப்பத்து என்பர்.

18. குயிற்பத்து: பிரிவாற் கலங்கிய தலைவி, தலைவன் வாராது நீட்டிப்ப ஆற்றாளாய், குயிலைத் தூதனுப்பக் கருதி, அதற்குத் தலைவன் இருக்கும்

இடம் இயல்பு அழைக்குந்திறம் இவற்றை அறிவித்துத் தூது அனுப்புதலே அறிவிப்பது.

இதற்குக் கருத்து ஆத்தும விரக்கம் அல்லது சிவனைக்கண்டு இரங்குதலெனப் பழைய குறிப்புக் கூறுகிறது. ஆன்ம நாயகனைக் கண்டு ஆன்மாவாகிய தலைவி தலைக்கூடப் பெருமையால் உண்டான நோயின் மிகுதியை இப்பத்துப் பாடல்களிலும் அறிவிக்கின்றாராதலின் இரங்குதலாயிற்று.

வைஷ்ணவ சம்பிரதாய வியாக்கியானத்தில் நாச்சியார் திருமொழி முதலாயிரம் ஐந்தாம் திருமொழியில் 'முன்பு தானும் அவனுமாயிருந்தபோது வார்த்தை கேட்டால் பிரதிவசனம் பண்ணிப் போந்த வாசனையாலும், சைதன்யத்தில் உறைப்பாலுமாகக் குயில் பொருந்தவிடவற்று என்றுபார்த்து, என்னையும் அவனையும் நீ சேரவிடவல்லையோ? என்று குயிலின் காலிலே விழுகிறாள்; சொன்ன வார்த்தைக்குப் பிரதிவசனம் பண்ணும் என்னும் இதுவே ஆய்த்து அதன்பக்கல் பற்றாசாக நினைக்கிறது' என்று எழுதுகிறார். இதில் குயிற்பத்தின் குறிக்கோள் நன்றாக விளக்கப்பெற்றுள்ளது.

பழைய புராணகாரர் 'குயிலைப்பார்த்துச் சோதிப் பெருமான் என்னைக் கூட உன்வாயினால் கூவுக' என்று வாழ்த்துவது என்கின்றார்.

19. **திருத்தசாங்கம்:** அரசனது பெயர், ஊர், நாடு, ஆறு, மலை, குதிரை, படை, பறை, மலை, கொடி

என்ற பத்து உறுப்புகளைப் பற்றி நேரிசை வெண்பாவால் அறிவிப்பது. இது பிரபந்த வகையில் ஒன்றாகவும் வழங்குகிறது. அடிமைகொண்ட முறைமையை அறிவிப்பது என்றும், பத்து அடையாளங்களான் ஆட்கொண்டமை என்றும் பழைய குறிப்பு,பொருள் உணர்த்துகின்றது. தலைவன் பிறர் எவருக்குமில்லாத அடையாளங்களை உடையனாதலின் அவன் ஆட்கொண்ட திறத்தை இப்பத்து வெண்பாக்களும் அறிவிப்பதால் அடிமைகொண்ட முறைமை என்று குறிக்கப்படுகிறது போலும். இறைவனுக்குரிய பத்து அங்கங்களையும் உணர்த்துதலின் இது தசாங்கம் என்று பெயராயிற்று என்று பழையபுராணங்கூறும்.

20. *திருப்பள்ளியெழுச்சி:* இது இறைவனைப் பள்ளி எழுந்தருள வேண்டிக்கொள்ளுதல். 'எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே' என்ற ஈற்றடிகளே இக்கருத்தை நன்கு விளக்கும். திரோதான சுத்தி என்றும், அதாவது ஏகமாகிய திரோதாயி மறைப்பான் மலத்தை நீக்குதல் என்றும் பழைய குறிப்புக் கூறும். M. S. பூரணலிங்கம் பிள்ளை அவர்கள் இரவாகிய மறைப்பு அகல, இரவுமுழுதும் ஓய்வெடுத்துக்கொண்ட உடலும் உயிர் வன்மையும், விடிந்ததும் வாழ்க்கைப் போராட்டத்துக்குச் சிவபெருமானுடைய திருவருள் துணைக்கொண்டு தயாராகுதல் என்பர். ஆனால் பாடற்போக்கு இறைவனைத் துயிலெழுப்புவதாகவமைந்துள்ளது. பழைய புராணம் ஆர்வத்தோடு ஆட்கொண்ட சிவபெருமா

னுக்குப் பணிவிடைகேட்டு அன்புசெய்வது என்று கூறும்.

'அநாதிமாயாஸுப்தரான இவரைப் பெருமாள் உணர்த்தினர். அதில்; இவர்தம் பக்கல் வியாமோஹத்தாலே ஸுப்தரான அவரைத்திருப்பள்ளியுணர்த்துகிருர்'* என்பர் பெரியவாச்சான் பிள்ளை. இதனுல் மாணிக்கவாசகர் மாயையினுல் தூங்கினர்; அவரைத்தட்டி எழுப்பிய இறைவன் இவர் பக்கல் உண்டான கருணையால் தூங்க, இவர் அவரைத் திருப்பள்ளி உணர்த்துகிருர் என்ற கருத்தும் கொள்ளலாம் போலும்.

21. **கோயில்மூத்ததிருப்பதிகம்:** இது தில்லையைப்பற்றிய பழமையான பொருள்கள் பலவற்றை அறிவிப்பதாக அமைந்துள்ளது. பழமைக்கெல்லாம் பழமையான இறைவனின் வசப்பட்டு அருட்சத்தி இருக்குந்தன்மையும், பொதுவிலக்கணத்தில் அருட்சத்தியின்வசப்பட்டு இறைவன் நிற்குந்தன்மையும், அடியார்வசப்பட்டு இருவரும் இருக்குந் தன்மையும் ஆகிய அநாதியாகிய சற்காரியத்தை உரைப்பதால் இது மூத்ததிருப்பதிகம்என்று அழைக்கப்பெற்றது. இவ்வாறே பதினெராந் திருமுறையில் திருவாலங்காட்டு மூத்ததிருப்பதிகமும் சர்வசங்காரகாலத்தில் இறைவன் இருக்கும் இயல்பை அறிவிக்கின்றது. போப் அவர்கள் தமது மொழிபெயர்ப்பில் 'பழமை

---

*பெரியவாச்சான்பிள்ளை திருப்பள்ளியெழுச்சிப் பிரவேசம்.

யான கோயில்திருப்பதிகம்' எனமொழிபெயர்ப்பர். பழைய குறிப்பு 'அநாதியாகிய சத்காரியம்' என்று கூறுகிறது. பழையபுராணம் 'கோயில்மூத்ததிருப் பதிகம் சிதம்பரத்தில் அருள் அடையும் குறிப்பதா கும்' என்கின்றது.

22. கோயில்திருப்பதிகம்: இது தில்லையில் இருந்து திருப்பெருந்துறைப்பெருமானை அடையுங் குறிப்பாக அருளிச்செய்யப்பெற்றது. இதன்கருத்து அநுபோக இலக்கணம்; அதாவது சிவாநுபூதிக்கு அடையாளம் என்று பழையகுறிப்பு கூறுகிறது. சிவாநுபூதி அடைந்தவர்கள் சிவனை இன்பமாக, அன்பாக, குறைவிலாநிறைவாக, கனியாக, ஆனந்த மாக்கடலாகக் காண்பர். 'யாது நீ பெற்றதொன்று என்பால்' என்று இறுமாப்பர்; 'யான் இதற்குக் கைம்மாறு இலன்' என்று இரங்குவர் என அநு பூதிக்கடையாளம் கூறப்படுகின்றது. கோயில் திருப்பதிகம் பெருந்துறைத் தேசிகர் மோகம் இயம் பலாகும் எனப் பழையபுராணம் கூறும்.

23. செத்திலாப்பத்து: இது ஆன்மாஅடைந்த சிவாநந்தத்தை அளவு அறுக்கமுடியாதவண்ணம் சீவபோதம் இடைக்கிடையே குறுக்கிட்டுத் தடை செய்தலின் அதுவும் சாகவேண்டிச், செத்திலேன் என இரங்குவதாகக் கூறப்பெறுவது. இதற்குச் சிவானந்தம் அளவறுக்கொணாமை என்றும், அதா வது சிவானந்தம் அணுகிச் செயிக்கப்படாமை என்றும் பழையகுறிப்புக் கூறுகிறது. பசுபோதம்

முற்றும் கெடவேண்டுதலே செத்திலாப்பத்தாகும் எனப் பழையபுராணம் கூறுகிறது. சாதல் என்றது இங்கே ஆன்மபோதம் அழிதலே.

24. அடைக்கலப்பத்து: மற்றை அடியார்களைப்போல ஆண்டானுடன்சேரவிடாது தன்னைத் தடுத்து நின்றது வாசனுமலம் ஆதலின், அதற்கு அஞ்சி, இறைவனிடம் அடைக்கலம் புகுவதை அறிவிப்பது. இதன் கருத்தாவது பக்குவநிர்ணயம் அதாவது வித்தும் அங்குரமும் போல என்று பழையகுறிப்புக்கூறும். வித்தின் தன்மை அங்குரத்திற்காணப்படுமாறுபோல, விதையொன்றுபோடச் சுரை ஒன்று முளையாதவாறுபோல வாசனுமலம் கெடாத ஆன்மா திருவடிகளுக்கு இலக்கு ஆகாது என்பது நிர்ணயிக்க அழுக்குமனத்தடியேன் உன் அடைக்கலம் என்றும், வல்வினையேன் உன் அடைக்கலமென்றும், கெடுவேன் உன் அடைக்கலமென்றும் கூறுவதால், தடையும் அதனை நீக்கும் உபாயமும் வருவித்து வேண்டிக்கொள்ளுகின்றார். பழைய புராணத்தில் வல்வாதனைகள் வந்து அணுகாமல் அடைக்கலப்பத்து உரைத்ததாம் என்று கூறப்பெற்றுள்ளது.

இதுபற்றி, தேசிகப்பிரபந்த வியாக்கியானத்தில் வைஷ்ணவ சம்பிரதாயப்படிக்கு விளக்கும் வியாக்கியாதாவால் கொடுக்கப்பெற்றுள்ள குறிப்பு வருமாறு:—

'தைத்திரீயோபநிஷச் சரமச்லோகாதிகளாலே, சோதிதையாய், மந்த்ரரத்ந ச்வேதாச்வதரமந்த்ராதிகளாலே ப்ரகாசிதையாய்,லக்ஷ்மீ தந்த்ராஹிர்புத்ந்ய தந்த்ராதி பகவச்சாஸ்த்ர ஸம்ஹிதைகளாலே யுபப்ரும்ஹிதையாய், தம்மாலே ஸ்ரீ ரஹஸ்யத்ரயஸார நிக்ஷேபரக்ஷாதி பஹுப்ரபந்தங்களிலே ஸகல க்ஷோபங்களுந் தீரும்படி ப்ரமாணோபபத்தி ஸம்ப்ரதாயோபந்யாஸ பூர்வகமாக ஸம்யக் வ்யவஸ்தாபிதாதிகாரேதி கர்தவ்யதா ஸ்வரூபோத்தரக்ருத்யையான சரணாகதிவித்யையை தாத்ருசப்ரபந்தபரிஸ்ரீமாஸஹரான வேழைபேதைகளுங்கூட ஸுகமாக வநுஷ்டித்து உஜ்ஜீவிக்கும்படி, ததநுஷ்டான ப்ரகாரத்தை விசதமாக ப்ரதர்சிப்பிக்கைக்காக அடைக்கலபத்துஎன்று பேர்பெற்றிருக்கிறஸர்வாதிகர்த்தவ்ய த்ரமிடகாதாத்மக ப்ரபந்தத்தைச் செய்தருளுகிறார்' என்பது.

இதனால் அடைக்கலம்புகுதல் என்பது வேதோபநிஷத்துக்களால் மிகமேன்மையாகக் கொண்டாடப்பெற்றது; அந்த வித்தையை எல்லாரும் அறிந்து கடைத்தேறுவதற்காக அடைக்கலப்பத்தாகிய இதனை அருளிச்செய்கிறார் என்றகருத்து வ்யாக்கியானத்தாற் கிடைக்கிறது. அதுபோல மணிவாசகப் பெருமான் நம்மீதுவைத்த கருணையால், தன்முனைப் படங்கித் தலைவனடியில் அடைக்கலஞ்சேர்தலை யறிவிப்பதாகிய இப்பத்தினையும் அறிவித்தார் என்பதும் பொருந்துவதுபோலும்.

25. ***ஆசைப்பத்து:*** வினைவாய்ப்பாற்கிடைத்த மெய்யைத் தாங்கியிருக்கமுடியாமல் அருளைப்பெற ஆசைப்பட்டமையை அறிவிப்பது. ஆத்தும விலக்கணம் அதாவது, ஆன்மரூபத்தை அறிதல் என்று குறிப்பு அறிவிக்கிறது. கண்ணொளி விளக்கொளி யோடுகலந்து அதனோடு ஓர்உருவைக்கலந்தாலல்லது அவ்வுருவம் காணப்படாதவாறுபோல, உணர்த்த உணருந்தன்மையுடைய ஆன்மாக்கள் அருளோடு கலந்து அதனோடு சிவத்தைப் பொருந்தியிருந்தா லல்லாது சிவானந்தாநுபவம் சேராது என்பதனை அறிவிப்பதால் இது ஆன்ம இலக்கணம் ஆயிற்றுப் போலும். கருவிகரணங்களோடுகூடிய ஊனுடலைச் சாராது திருவருளைச்சேருவதற்காகச் சிவபெருமான் திருவடியைப் புகழ்ந்துபாடுதல் ஆசைப்பத்தாகும் என்று கூறுகிறது பழையபுராணம்.

26. ***அதிசயப்பத்து:*** இதற்குமுத்தியிலக்கணம் ; மோக்ஷத்தின் அடையாளம் என்று பழையகுறிப் புக் கூறும். இது மூலமலத்துக்குப் பயந்த மன ஏக்கம் பொருந்திய அடியோர்களோடு கூட்டிய சிவபெருமானுடைய திருவருட்பேற்றிற்கு வியந்து கூறியதாகும். "வெருவி மலத்தினைச் சீலத்தொன் றுகுமடியார் குழாத்துடனே கூட்டும், பரமருட் பெருமை மிகுதியைப் புகழ்ந்துபாடல் அதிசயப்பத் தாமே" என்பது பழையபுராணம்.

27. ***புணர்ச்சிப்பத்து:*** அத்துவித இலக்கண மென்றும், பதியும் பசுவும் ஒன்று இரண்டு அல்ல

என்ற நிலையில் ஒன்றுவது என்றும் குறிப்புக்கள் கூறும். அத்துவிதமான நிலையில் புணர்ந்து 'புடை பட்டிருப்பது என்றுகொலோ' என்று சொல்லு தலால் இது அத்துவிதத்தினிலக்கணம் ஆயிற்றுப் போலும். பழையபுராணம் ஆட்கொண்டபெருமானை என்றும் பிரியாது பணிபுரிந்து அன்போடு இன்பம் பூண்டு கிடக்கப்பெறுவது என்றுகொலோ என்ற விருப்பத்தை அறிவிப்பது புணர்ச்சிப்பத்தாம் என்னும்.

28. **வாழாப்பத்து**: இது முத்தியுபாயத்தை அறிவிப்பதென்றும், பிரபஞ்சமயல்நீங்கிப் பரபோ கத்தைக் கூடுகிற உபாயத்தை உரைப்பதென்றும் குறிப்புக்கள் கூறும். வாழ்க்கை என்பது, இன்று கிடைத்த களாக்காயைக்காட்டிலும் நாளைக்குப் பலாப்பழங் கிடைக்கும் என்ற பற்றால்விளைவது. அந்தப் பற்று அற்றவிடத்து வாழாமையே வேண் டப்படுவது ஆதலால் நான்பற்றும் அற்றிலேன் என்று ஏதுகூறி வாழாமை வேண்டப்படுகிறது. பற்றறுதல் முத்திக்குபாயமாகலின் இது முத்தி யுபாயம் ஆயிற்றுப்போலும். "நீண்டவுலகத்தில் பற்று ஒன்றிலேன்; இவ்வுடற்கண் நின்றுவாழேன்; நின்பத நிழற்கீழ் வருக அருள்புரி" என்று சொல் வது வாழாப்பத்து என்று கூறுகிறது பழைய புராணம்.

29. **அருட்பத்து**: மகாமாயாசுத்தி; அதாவது மாயையினின்றும்விலகுதல்என்பதுபழையகுறிப்பு

உலகத்தைவெறுத்து இறைவனுடைய திருவடியை விரும்புதலே மாயையினின்றும் விலகுவது ஆதலின் இது மாயாசுத்தி ஆயிற்றுப்போலும். இப்பிறப்பை விட்டு உன்திருவடிசேர்தற்கு அன்புகொண்டமைத்தால் அது என்ன என்று கேட்டு ஆதரித்துக்கொள் என வேண்டிக்கொள்வது அருட்பத்து என்கிறது பழையபுராணம்.

30. **திருக்கழுக்குன்றப்பதிகம்**: குருதரிசனம். பசுத்துவங்கெட்ட இடம் என்பது பழையகுறிப்பு. ஆன்ம இயல்புகெட்டு இருவினையொப்புமலபரிபாகத்துக்கு ஏற்ற குருதரிசனம் பக்குவம்வந்த பிறகே கிட்டுமென்பதாம். ஏனைப்பதிகங்கள்போலப் பொருளாலும் தன்மையாலும் பெயர்பெறாது பாடியதலத்தாற் பேர்பெற்றது. திருப்பெருந்துறையில் குருவடிவாய் நின்ற கோலத்தைக் கழுக்குன்றிலும் காட்டினாய் என்று களிப்போடு சொல்லுதல் திருக்கழுக்குன்றப்பதிகம் என்று புராணம் கூறும்.

31. **கண்டபத்து**: நிருத்ததரிசனம் என்பது பழையகுறிப்பு. தில்லையில்கண்ட எல்லையில்லாத ஆனந்தத் தனிப்பெருங் கூத்தை அறிவிப்பது. இந்திரியங்களின் வசப்பட்டு மயங்கி அழியாதபடி கைதூக்கித் தாமாக்கும் தன்மைவாய்ந்த ஆனந்தத்தைத் தில்லையுட் கண்டேன் என்று மகிழ்ந்துரைப்பது கண்டபத்து என்னும் புராணம்.

32. **பிரார்த்தனைப்பத்து**: சதாமுத்தி; என்பது ஆன்மாக்களுக்கு முத்திநிச்சயம் பண்ணுதல் எனப்

பழைய குறிப்புக்கூறுகின்றது. இடையீடில்லாது சிவானந்தப் பெருங்கடலில் திளைக்கச்செய்யுமாறு வேண்டிக்கொள்ளுதல் இதன்கண் விளக்கப் பெறுகின்றது. "அந்தமிலா ஆனந்தத்துஅகலாமல் எனை அழுத்தி ஆள்வாய் என்று சிந்தைகலந்து உரைத்ததுவே பிரார்த்தனைப்பத்து" என்று பழைய புராணம் கூறும்.

33. குழைத்தபத்து: ஆத்தும நிவேதனம்; அதாவது நேயத்தோடு ஒன்றல் என்பது கருத்தாகும். தனக்கென்று ஓர் உரிமை இல்லாமையும், நல்லன செய்தலும் பிழை செய்தலும் கூட அருள் வசப்பட்டனவே என்பதையும் அறிவித்துத் தான் என்பது ஒரு பொருளுமின்றி மெலிந்ததால் அறிவிக்கும் பத்து குழைத்தபத்து. "இவ்யாக்கையைத் தாங்கி வினைகளை மேலும் மேலும் இழைத்தேன் இனிக் கணமும் பொறுக்கேன் அடியேனை மெலிவிப்பது எற்றுக்கு? பிழைபொறுத்து ஆட்கொள்ள வேண்டும் என்று இரங்கிக் கூறுதல் குழைத்த பத்தாம்" என்பர் புராணவாசிரியர்.

34. உயிருண்ணிப்பத்து: சிவானந்தம் மேலிடுதல். அதாவது நேயம் மேலிடுதல் என்பது பழைய குறிப்பு. மேலிடுதல் என்பது தோய்ந்ததை அகப்படுத்தல். சிவானந்தமாகியவெள்ளம் தோய்வதாகிய ஆன்மாவைத் தன்னகப்படுத்தி வெள்ளம் மேலிடுதல். அதாவது தன் தன்மைகெட்டு இன்பவடிவாயிருத்தல் என்பதாம். உண்ணி - உண்பது. உயி

ருண்ணி - உயிரையுண்டபொருள். உயிர் உண்ணப் பட்டமையின் அதன் தன்மை இல்லையாயிற்று. இந்த நிலையை எடுத்து விளக்குவது இப்பத்து. "தழைத்து வளர் பேரின்பம் தானாகி உயிர்தோன்றாத் தன்மை யாய்த் துன்பம் ஒழித்து நிறைவைப் பெறுதல் உயிருண்ணிப்பத்து" என்பர் திருப்பெருந்துறைப் புராண ஆசிரியர்.

35. அச்சப்பத்து: ஆனந்தமுறுதல்; அதாவது நேயத்திலே ஒன்றுபட்டுச் சிக்கென அழுந்தினமை. நேயமாகிய சிவானந்தத்து வேறின்றி அழுந்தின மையால், சிவானந்தத் தோய்வில்லாத எதனைக் கண்டாலும் அஞ்சுவது இயற்கையாதலின், அம்ம நாம் அஞ்சுமாறே என்ற இவ்வச்சப்பத்து எழுந் தது. 'தரையில்வளர் வினைமுழுதும் வரினுமஞ்சேன் சிவசமயத்தவஞ் சாராதார் அருகில்வரக் காணகின் மனம் அஞ்சுமென இகழ்ந்துரைத்தல் அச்சப்பத் தாம்' என்பது மேற்குறித்த புராணக்கூற்று.

36. திருப்பாண்டிப்பதிகம்: சிவானந்தவிளைவு அதாவது சுகமேலீடு. தாம்பெற்ற சிவானந்த விளைவை எல்லாரும் பெறுங்கள் என்று அடியார் களுக்கு உறுதிகூறுவது. "புரவியின்மேல் பாண்டி யன்முன்வரும் பதத்தை யாம்பெறுமற் புதம்போல் யாரும், விரவுமின்களென் றடியார்க்குறுதி சொலல் திருப்பாண்டி விருத்தமாமே" என்பது பழைய புராணம்.

37. *பிடித்தபத்து:* முத்திக்கலப்புரைத்தல்; அதாவது மற்றுமுள்ள ஆன்மாக்களுக்கு முத்தியின் சுகத்தைச் சொல்லியது. இறைவனை இன்பவடிவின னாகக்கண்டு வேறின்றித் தோய்ந்தநிலையில் அவ் இன்பம் இனித் தன்கையைவிட்டுத் தவறாது என்ற எழுச்சிமிக, அதனைப் பிடித்தேன் என்று பேசுந் துணிவுபிறக்கும். அதனால் பிடித்தபத்தாயிற்று. பிறவித்துயர்கெடுத்து விபுத்துவம் அளித்தலாலே நின்னைச் சிக்கெனப்பிடித்தேன் என்று துணிவு உரைத்தல் பிடித்தபத்தாம் எனப் புராணம்கூறும்.

38. திருவேசறவு: சுட்டறிவு ஒழித்தல்; என்பது தன்செயல் அறநிற்றல். சீவச்செயல்யாவும் அற்றுச் சிவச்செயலாய் நிற்றலாம். ஒன்றற்கும் பற்றாத இழிந்தநரியை அரசர்க்குரிய அங்கமாகிய குதிரை ஆக்கியதுபோல, அடியேனையும் பெரிதாக் கித் திருவடிக் கீழ்வைத்த பெருமைதான் என்னே என்று ஏசற்றுக் கூறுதல். இந்தநிலை தன்செய லற்றுத் தாமற்றபின்னன்றித் தோன்றாதாகலின் சுட்டறிவு ஒழித்தலாயிற்று.

39. திருப்புலம்பல்: சிவானந்த முதிர்வு; என்பது சிவானந்தம் பெறு இச்சை. சிவானந்தம் பெற்றும் அது முறுகி முதிராமையால் இரங்கிக் கூறியது. கற்றாவின் மனம்போல உன்கழ லிணைக்கே கரைந்துருகும் பேரன்பை எனக்கு அருளுக எனக்கேட்டல் திருப்புலம்பலாகும் என்பது புராணம்.

40. குலாப்பத்து: அநுபவம் இடையீடுபடாமை; என்பது விட்டுவிட்டுப் பற்றுமல் ஒருதன்மையா யிருப்பது. என்றும் ஒருபடித்தான இன்பவெள்ளத் துத் திளேப்பதால் மனத்தில் களிப்புமிகுந்து, இன் பத்திலிருத்திய இறைவனே வாயாரவாழ்த்தி உரைப் பது குலாப்பத்து என்பது புராணக்கருத்து.

41. அற்புதப்பத்து: அநுபவம் ஆற்றுமை; என்பது அநுபவம் முற்றுதல் பொறுமை விம்முத லாம். குறுணி கொள்ளும் கோணி முக்குறுணி திணித்தால் விம்முதலேப்போலச் சிவானுபவம் எல்லேயின்றி மேவர இங்ஙனிருந்ததென்று சொல் லவும் முடியாதபடி விம்முதல். அற்புதம் என் பது இதுவரையில் தோன்றியில்லாததும் இனித் தோன்றவும் கூடாததுமாகிய நிகழ்ச்சிகள் விளே கின்றகாலத்து உளதாகும் சுவைகளுள் ஒன்று. அற்புதம், ஆச்சரியம், அதிசயம் என்பன ஒரு பொருட்கிளவிகள். ஆயினும், அவற்றுள் நிகழ்ச்சி யால் வேறுபாடு உண்டு. இதுவரையில் அறிவுக்குப் புலனுகாத ஒன்று புலப்படின், அது அதிசயமாகும். சிவாநுபவம் ஆன்மாவுக்குப் புதிதாகையாலும் ஒரு முறை அடைந்த ஆன்மா மீட்டும் அடையவேண்டிய வாய்ப்பு நிகழாமையானும் இவ்வற்புதத்தை உற்ற ஆன்மா அதுபொறுக்கமுடியாது விம்முதல் இயல்பு. அந்த நிலேயை அறிவிக்கும் இது அற்புதப்பத்தா யிற்று. உலகவின்பமே உயர்வு என்று எண்ணி அலேயும் அடியேனுக்கு உண்மையறிவை அளித்து ஆண்டது அதிசயம் என்று உரைத்தல் அற்புதப்

பத்தாகும் என்றது புராணம். இதில் அசிசயத்துக்கும் அற்புதத்துக்கும் வேறுபாடு இன்றி ஆண்டிருத்தல் ஆராய்தற்கு உரியது.

42, சென்னிப்பத்து: சிவவிளைவு; அதாவது சீவனுக்கு நிச்சயப்படுத்தல்என்பது பழையகுறிப்பு. இறைவனுடைய திருவடிகள் தமது சென்னியில் விளங்கும் முறையை விளக்குவதால் இது சென்னிப் பத்தெனப் பெயர்பெற்றது. குருநாதன் திருவடி சூட்டியதால் தாம்பெற்ற சுகத்தைவியந்து கூறியது சென்னிப்பத்து என்று கூறும் திருப்பெருந்துறைப் புராணம்.

43. திருவார்த்தை: அறிவித்து அன்புறுதல்; அதாவது 'நின்னால் அறியப்படாதது உரைக்க அறிவை என்றது' குறிப்பு. இறைவன் தமக்காக எளிவந்து குரு திருமேனிதாங்கி முதற்பொருளின் உண்மையை அறிவித்த அருட்பெற்றியை அறிவாரே எமக்குத் தலைவர் என உரைத்தது திருவார்த்தையாகும். வார்த்தை ஆதிப்பிரமத்தை அறிவிக்கும்சொல். அதனை ஆசாரியனாகவந்து தமக்கு உபதேசித்ததைச் சொல்வதால் இது திருவார்த்தை ஆயிற்று.

44. எண்ணப்பதிகம்: ஒழியா இன்பத்து உவகை; என்பது தேகம் முதலாகிய ஆசை அறுத்தல். இன்பத்து மூழ்கியிருக்கின்ற ஒருவருக்கு மேலும்மேலும் வேண்டுதலும் வேண்டாமையுமாகிய

எண்ணம்ஓங்கிக்கொண்டேசெல்வதுபோலச்சிவாநு பவத்துப்பிறந்த உவகையால், பிறப்பறவேண்டும்; பத்திமை பெறவேண்டும்; திருவருளைக்காணவேண் டும்; அதற்குத்தடையாகிய உடல் உலகம் முதலிய வற்றின் ஆசை அறவேண்டும்; என இவ்வெண் ணங்களை அறிவிப்பதால் எண்ணப்பதிகமாயிற்று. தில்லை மன்றுள் எழுந்தருளியிருக்கின்ற இறை வனது திருநாமத்தைச் செப்புவதாலுண்டாகும் இன்பத்தை அருளுக என்று வேண்டிக்கொள்வது எண்ணப்பதிகம் என்று புராணம் கூறும்.

45. யாத்திரைப்பத்து: அநுபவாதீத முரைத் தல்; என்பது அநுபவத்து எட்டாமையை அறி வுறுத்தல். சிவாநுபவம் தன்னளவினன்றித் தன் னைச்சார்ந்தாருக்கும் வாரிவழங்கும் தரத்ததாய் மிக, ஆண்டவனால் வா என்றழைக்கப்பட, அடியார்க ளெல்லாரையும் அழைத்துக்கொண்டு திருவடிக்கு யாத்திரை செல்லுதலை அறிவிப்பது. 'பொய்மாயப் பிறவியைவிட்டுச் சிவன்கழல்செல்லும் காலம் அடி யேனுக்குக் கிடைத்துவிட்டது எல்லாரும்வாருங்கள்' என்று கருணையால் அழைப்பது யாத்திரைப்பத்து என்று கூறுகிறது புராணம்.

46. திருப்படையெழுச்சி: பிரபஞ்சப்போர்; என்பது மலவிளைவு அற்றது என்பதாம். பிரபஞ்ச மாகிய மாயப்படை ஆன்மாவைத் தாக்காதவாறு படை எழுக என அடியார்களுக்கு அறிவிப்பது. இங்ஙனம் தடைசெய்தலின் உள்ளமலம்தேய மேல்

விளைவற்றுப்போகும். 'துர்க்குண மாயப்படைகள் விளையாதபடி அருள்வாளேந்தி அடியார்களை வரும் வாருங்கள் என்று அவர்களை அழைப்பது திருப்படையெழுச்சி' என்று புராணம்கூறும்.

47. திருவெண்பா: அணைந்தோர்தன்மை; என்பது பரிசவேதிபோல என்றது பழையகுறிப்பு. தொட்டதை எல்லாம் பொன்னுக்கும் பரிசவேதியைப்போலச் சிந்தையைத் தீண்டிய அளவில் சீவனைச் சிவமாக்கிய திருவருள்தன்மையை விரித்துரைத்தது. 'இறைவன் என்னுடைய சிந்தனையே ஊராகக்கொண்டிருந்தார் என்று உரைப்பது திருவெண்பா' என்பது புராணக்கருத்து.

48. பண்டாயநான்மறை: இது அநுபவத்துக்கு ஐயமின்மையை உரைத்தது. இது முதற்குறிப்பால் பெயர்பெற்றது. 'திருப்பெருந்துறையை வாழ்த்துகின்ற அடியார்களே, பாசபந்தமறுத்து வாழ்வார்கள் என்பதைச் சொல்வது பண்டாய நான்மறையாம்' என்று கூறுகிறது புராணம்.

49. திருப்படையாட்சி: சீவ உபாதி ஒழிதல். இறைவன் எதிர்ப்பட்டு என்னுட்புகுமாயின், எந்த விதமான சீவோபாதிகளும் என்னை அணுகா என்பதை அறிவிப்பது. இதற்குக் குறிப்புரை எழுதிய அருணகிரி முதலியாரவர்கள் "ஞானனந்த வஸ்துவாகிய சிவத்தைத் தரிசித்தவர்கள் தூயஞான நாட்டம்பெற்றவர்களாதலின், அவர்களுக்கு வேறு

விவகாரங்கள் நிகழ்தலாகாவாம்'' என்பர். புராணம் 'திருப்பெருந்துறையார் எழுந்தருளப்பெறின் எல்லா வளங்களுமுற்றும் ஆகும் எமக்கு அல்லாதது ஆகா தென்று இயம்பல் படையாட்சியாகும்' என்று கூறும்.

50. ஆனந்தமாலை: என்பது சிவானுபவ விருப்பம்; அதாவது 'சிவானந்தமேலீட்டில் கிரியா சத்தி அழிவு உரைத்தல்' என்பது பழைய குறிப்பு. 'அடியாரோடு கூடவேண்டுமென்ற விருப்பத்தை உணர்த்தியது ஆனந்தமாலை' என்பது முற்குறித்த புராணக்கருத்து.

51. அச்சோப்பதிகம்: அநுபவவழி அறியாமை; அநுபவத்து அதிசயம். தாம்பெற்ற அருளின் மேன்மையை வேறுயார்பெறுவார் என்று வியந்து கூறியது அச்சோப்பத்தாம். இதனைப் புராணம் "ஈசர் போகசுகம் எனக்கு அளித்தார் ஆர்பெறுவார் எனும் அருமை புகலல் அச்சோ'' என்று கூறும்.

பெரியாழ்வார் திருமொழியில் 'அச்சோ என்பது முற்காலத்திலேகுழந்தையை அணைத்துக்கொள் என்று சொல்வதற்கேற்ற குறிப்புச் சொல்லாக இருந்தது எனக்கொள்ளலாம். இனி அச்சோ என்பது அதிசயத்தைக் குறிக்கும் இடைச்சொல் எனக் கொண்டு கிருஷ்ணன் தன்னை அணைத்துக்கொள்ளுதலை நினைக்கும்போது தோன்றும் பரமானந்தத்தில் மூழ்கி நெஞ்சுருகிச் சொல்லிடிந்து வாய்விட்டுச்

சொல்லமாட்டாமல் அச்சோ என்கின்றுள் என்னவுமாம்' என்று வியாக்கியானகாரர் உரைவகுப்பர்.

இதனுல் இறைவன் தனக்குச்செய்த கருணையினை - திருவருளில் சேர்த்துக்கொண்டதை வாய்விட்டுச் சொல்லமுடியாமல் அநுபவத்ததிசயத்தால் அச்சோ என்றுர் என்பது மிகப்பொருத்தமுடையது போலும்.

பதிக முறைவைப்பு — புராணங்கள் கூறுவன:

இதுவரை வெளிவந்த பல பதிப்புக்களும் மேற்கொண்டுள்ள பதிகவரிசை ஒரு முறையாய் அமைந்துள்ளது. அதனை இவ்வெளியீட்டானும் அறியலாம்.

வரலாறு வகுக்கப்புகுந்த நூல்களாகிய நம்பி திருவிளையாடலும், திருவாதவூரடிகள் புராணமும் வேறுவேறு முறைகளைக் கூறுகின்றன. மற்றெருநூலாகிய பரஞ்சோதி திருவிளையாடல் பதிக அடைவைப்பற்றி ஒன்றுங் கூறவில்லை. சிவபுராணம் திருப்பெருந்துறையில் முதற்கண் உரைக்கப்பெற்றதாக வாதவூரர்புராணம் வகுக்கிறது. நம்பிதிருவிளையாடல் மந்திரியாக மன்னனிடம் விடைபெற்றுக் கொண்டு போம்பொழுது பாடிக்கொண்டே ஆலயத்துள் நுழைந்தார் என்கின்றது.

நம்பிதிருவிளையாடலில் திருவாதவூரர் குதிரை வாங்கப் புறப்பட்டார்; திருப்பெருந்துறையடைந்தார்; தன்வசம்கெட்டார்; அதனுல் இங்கே அற்புத

மிருக்கவேண்டுமென்றெண்ணி முதற்கண் அற்புதப் பத்தைப்பாடினூர். குருநாதனைத்தரிசித்து, அவரால் திருவடிதீக்ஷை செய்யப்பெற்று, அதை ஏற்றுக் கொண்ட சென்னியை வியந்து சென்னிப்பத்துப் பாடினூர்; கருணையை வியந்து அச்சோப்பத்து ஓதினூர். கூடஇருந்த அடியார்களைச் சுட்டிக்காட்டி அதிசயப்பத்து பாடினூர். குருநாதன் மறையவே உளம் கவன்று கோயிற்பத்து, புணர்ச்சிப்பத்து, செத்திலாப்பத்து, பிரார்த்தனைப்பத்து, ஆசைப் பத்து, உயிருண்ணிப்பத்து, திருப்புலம்பல், வாழாப் பத்து, எண்ணப்பத்து ஆகிய இவைகளை அருளிச் செய்தார். பின் திருப்பெருந்துறையை அடைந்த போது திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருக் கோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருவெம்பாவை, திருச்சதகம் இவற்றைப்பாடினூர்.

அரசன் குதிரைகொண்டுவரும்படி ஓலையனுப் பியபோது வாதவூரர் வருந்திக் கோயிலுட்சென்று திருப்பள்ளியெழுச்சி பாடினூர். குறித்தநேரத்திற் குதிரை வாராமையால் அரசன் சிறையிட அதனைப் பொறுக்காமல் குழைத்தபத்தையும், அருட்பத்தை யும் அருளினூர். இறையிடத்து அடைக்கலம்புகுவ தாக அடைக்கலப்பத்தும், குயிற்பத்தும் கூறப் பெற்றன. குதிரைச்சேவகனுக இறைவன் எழுந் தருளுவதைப்பார்த்த பெண்மணிகளின் கூற்றாக அன்னைப்பத்து அருளினூர். குதிரைச்சேவகற்கு மன்னன் பரிசுவழங்கியபொழுது பிடித்தபத்தும்,

பரிகளெல்லாம் நரிகளாக அரசன் சிறையிட்ட பொழுது திருவேசறவும், பாண்டியன் வையைப் பெருக்கால் உண்மையுணர்ந்து சிறைவீடு செய்த காலத்தில் சிவபுராணமும்பாடினர்.

பின்னர், திருவுத்தரகோசமங்கை திருக்கழுக் குன்றம் முதலிய தலங்களையும் வழிபட்டு நீத்தல் விண்ணப்பம், திருக்கழுக்குன்றப்பதிகம் முதலிய வற்றை முறையே அருளிச்செய்தார். ஏனையபதிகங் கள் பாடிய இடங்களையோ பாடிய வரலாற்றையோ இந்நூல் அறிவிக்கவில்லை.

திருவாதவூரர்புராணம் திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் குருவுக்காகத் தெய்வபீடிகை அமைத்து வழிபட்டுவந்த நாளில் 'சிவபுராணத்தை யும்' சோதிப்பெருமான்வந்து அருள் செய்யும் அற் புதத்தை அறியேன் என்று அற்புதப்பத்தையும், ஆட்கொண்ட அதிசயத்தைக் கண்டோமென்று அதிசயப்பத்தையும், மின்னர் செஞ்சடையண்ணல் என் நெஞ்சங்குழைத்தான் என்று குழைத்தபத்தை யும், குருநாதன் திருவடி என் சென்னியில் விளங்கு கிறது என்று சென்னிப்பத்தையும். இறைவனைக் காண ஆசைப்பட்டதாக ஆசைப்பத்தையும், காலம் நீட்டிக்க உய்கிலேன் என்று வாழாப்பத்தையும், வருந்தி உனக்கு அடைக்கலம் என்று அடைக்கலப் பத்தையும், செயலற்று இன்னம் சாகவில்லையே என்று செத்திலாப்பத்தையும், திருவடி அடையும் நாள் என்று என்பதாகப் புணர்ச்சிப் பத்தையும் அடிகளார் புகன்றதாகக் கூறுகிறது.

மேலும் அருட்பத்தையும்திருவார்த்தையையும், திருவெண்பாவாகிய இருபத்தெட்டையும் ஓதினர். இன்னும் திருப்பள்ளி யெழுச்சி, திருவேசறவு, ஆனந்தமாலை, உயிருண்ணிப்பத்து, பிரார்த்தனைப் பத்து, பாண்டிவிருத்தம் என்னும் இவற்றையும் அருளிச்செய்தார். இறைவன் ஆணைப்படி பொய்கைச் சோதியில் அடியார்கள் கலக்க வருந்தித் திருச் சதகத்தை அருளினர். உத்தரகோசமங்கையை யடைந்து நீத்தல் விண்ணப்பம் பாடினர். இறைவன் குரு உருவத்தைக் காட்டினர். தரிசித்த அடிகளார் திருவிடைமருதூர் முதலிய பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவாரூரையடைந்தார். அங்கே திருப்புலம்பல் ஓதப்பெற்றது. அங்கிருந்தும் சீகாழி அடைந்து பிடித்தபத்து அருளிச்செய்தார். திரு முதுகுன்றம் முதலியதலங்களை வணங்கிக்கொண்டு திருவண்ணாமலை அடைந்தார். அங்கே அருளிச் செய்யப்பெற்றன திருவெம்பாவையும், திருவம் மானையுமாம். திருக்கழுக்குன்றத்தை யடைந்து கழுக்குன்றப் பதிகமும் பாடினர்.

தில்லையடைந்து கண்டபத்து உரைத்தார். அங்குத்தங்கியிருக்கும்நாளில் குலாப்பத்து,கோயின் மூத்த திருப்பதிகம், கோயிற்பதிகம், கீர்த்தித்திரு வகவல், திருவண்டப்பகுதி, போற்றித்திருவகவல், திருபொற்சுண்ணம், திருத்தெள்ளேணம், திரு வுந்தியார், திருத்தோணோக்கம், திருப்பூவல்லி, திருப்பொன்னூசல் ஆகிய இவற்றைப்பாடினர்.

அன்னைப்பத்து, கோத்தும்பி, குயிற்பத்து, தசாங்கம், அச்சப்பத்து இவைகளையும் ஓதினர். புத்தரை வாதில் வென்று திருச்சாழல் அருளினர். பின்னர் திருப்படையெழுச்சி, அச்சோப்பத்து, யாத்திரைப் பத்து இவற்றை அருளிச்செய்தார் என்று வரலாற்றோடு முறையை வகுக்கிறது.

இவ்வாறு இந்த இரண்டுபுராணங்களும் தம்முள் மாறுபடுவதிலிருந்து ஒரு உண்மை வெளியாகாமல் போகவில்லை. திருவாசகத்தின் பதிகப் பெயர்க் காரணங்களைக் கொண்டு வரலாற்றோடு ஒட்டித் தத்தம் கற்பனைத் திறத்தால் முடிந்தவரையில் முறையைமாற்றி அமைத்தனர் என்பதே.

## இப்பொழுதுள்ள முறைவைப்பின் காரணம்:

ஆனல், திருவாசகம் மணிவாசகப் பெருமான் சொல்லச் சிற்றம்பலப் பெருமான் எழுதிக் கொண்டது என்பது வரலாறு. அதன்வண்ணம் இப்போது வழங்குகின்ற முறைவைப்பு இருக்கலாமென்பது தெளிவு. பாட்டுடைத் தலைவராகிய பரமன் முன்னிலையில்பாடிய பெரியோர் வைத்த முறையேமுறை. வயிரமணிமாலைகளுள் உள்நுழைந்திருக்கின்ற நூற்கயிறுபோல இந்தத் திருவாசக மாலையிலும் ஒரு இயைபு இல்லாமல் இல்லை. அது வருமாறு:—

இறைவனது தொன்மையையும், புகழையும், அவர் அண்டமாயும் அதனுள் அனைத்துமாயும் இருக்கின்ற

நிலைமையையும் அறிந்த ஆன்மா அவனே செகத்காரணனென் பது அறிந்து போற்றக்கடமைப்பட்டிருக்கிறது. அங்ஙனம் போற்றுதற்கு மெய்யுணர்தல் முதலாயின நிமித்தமாதலின் அவற்றைப் படிமுறையாகச் சிந்தித்து ஆனந்தத்தழுந்தித் தன்செயலற்று, அதீதநிலையை யண்மிக் களித்திருக்கும் நிலையில், ஓரொருகால் வாதனை தாக்கப் பிரிவுநிகழ்ந்துழிப் பொறுது "விடுதிகண்டாய்" எனஇரங்கும். இதுவரையில் உபகாரமாயிருந்து உண்மையை விளக்கிய திருவருட் சத்தியை வியக்கும். அதனல் சத்தியின் பதிவு உண்டாகித் தானும் தன்தன்மைகெட்டுச் சத்தியாய் மகளிரைப்போல அம்மானை ஆடுதலும், சுண்ண மிடித்தலும், வண்டைத் தூதாக விடுத்தலும், பறைகொட்டி யாடலும், சாழலாடலும், பூக்கொய்தலும், உந்தி பறத்தலும், தோணேக்க மாடுதலும், ஊசலாடுதலும் ஆகிய மகளிர் விளையாட்டை மேற்கொள்ளும். அப்போது தன்னறிவிழந்து நிற்குந் தன்மையைத் தாயார் சந்தேகிப்பது போலவும் அதற்கு அவள் உயிர்த்தோழி பதில் உரைப்பது போலவும் பேசப் பெறும் கனிந்தநிலை எழும். அப்போது அவ்வான்மாவாகிய பெண் பேசாத குயிலைத் தூதுபோக அனுப்புவள். அனுப் பியும் தலைவர் வாராமையால் பொழுது கழியாதாகப் பிரிவுத் துன்பம் பெருக அதற்கு ஒரு ஆறுதலாயிருக்கும் முறையில் தலைவனுடைய ஊரும் பேரும், நாடும் நகரும், தேரும் குதிரையும், யானையும் தானையும் எவை? என்று கிளியைக் கேட்டு, அது கூறச் செவிமடுத்துச் சிந்தைமகிழ்வாள். அம் மகிழ்ச்சியிலே திளைத்து இருளைக்கழிக்கின்ற பெண்ணுக்குத் தான் விழித்திருந்தும் தலைவன் உறங்குகின்றுன் என்ற உணர்ச்சி எழும். அப்போது பள்ளி எழுந்தருளாய் என வேண்டிக்கொள்வாள்.

தலைவனோடு தனக்குளதாய அனாதியான சம்பந்தத்தையும் அவனைத் தான் நுகருகின்றகாலத்து இன்பமாக, அன்பாக, உரையுணர்விறந்த உணர்வாக, ஆனந்தமாக இருக்கின்ற அநுபவநிலையையும் சொல்லித் தோத்திரிப்பாள். தலைவனோடு தான் தலைப்பெய்த ஆனந்தம் அளவறுக்கொணுமையால் இன்னும் நான் செத்திலேன்; உன்னடைக்கலம்; உன் அருளை இடையீடின்றியேபெற ஆசைப்பட்டிருக்கிறேன் என்றும் இரங்கிக் கூறுவள். அப்போது தன்னைப் பண்டு ஆண்டுகொண்ட அருட்டிறம் நினைவுக்குவர அதனைப் பாராட்டி அடியாரில்கூட்டிய அதிசயங்கண்டாம் என்று இறுமாந்து கூறியும் தலைவனோடு தான் இரண்டற ஒன்றறக் கூடிநின்றும் இன்புறுவள்.

புணர்ச்சிக்குப்பின் நிகழ்வது பிரிவாதலின் அது நிகழயான் வாழவல்லேன் என வெறுத்துரைப்பாள். ஆதரித்து அழைத்து அருளாய் அருளாய் என்று அரற்றுவள். அப்போது இறைவன் உண்மை உருக்காட்டி ஆட்கொள்வன். உருவைக்கண்ட ஆனந்தத்தால் ஆனந்தங்கண்டேன், இணையிலியைக் கண்டேன், சிவபதத்தைக் கண்டேன், பாசமறுத்தானைக் கண்டேன் என்பது முதலாகத் தான் கண்டதை வியந்துரைப்பள். இன்பச்சுடரை – மிக்கஅன்புமேவுதலை – திருவடிப்பேற்றை – ஆனந்தத்தை விரும்பினேன், அருள்க என்று பிரார்த்திப்பாள். அருளாமையாற் குழைவள். என் உயிருண்ணியாயிருக்கின்ற நீ அடியேற்கு எத்தகைய பேறு அளித்தாய் என்று ஏத்துவள். தலைவன்மேல் வைத்த பேராதரத்தால் ஆனந்தமுற்று அவர் அடியரல்லாதாரைக் காண அஞ்சுவள். உன் உருவை யன்றி யாரையும் என்

உள்ளம் அறியாதென்று தம் கற்பின் மேன்மையைப் புலப்படுப்பள். அதனைக்கேட்ட தலைவன் தன்வழிவந்தானாக அவனை இறுகப் பிடித்துக்கொண்டு இனி நீ எங்கேபோவது என்று உரிமையால் வினவுவள். தலைவன் தனக்காகச் செய்த அற்புதமான நிகழ்ச்சிகளை அறிந்து வெருவுவள். ஆனந்தம் முதிரக் கலந்திருக்கின்றேமென்ற கருத்தும் மடியத் தனித்ததாக எண்ணிப் புலம்புவள். எனக்குக்கிடைத்த இத்துணைப் பேறும் இவனைத் தலைவனாகக் கொண்டதனாலல்லவா என்று இன்புறுவள். அதனால் முன்னும் பின்னும் இல்லாத ஓர் ஆனந்தம்பிறந்து அற்புதத்தில் ஆழ்வள். தலைவன் திருவடியை முடிமேல் தாங்கித் திருவடியிலே சேர்ந்து அடியேன் தலை மிக விளக்கத்தை யடைந்தது என்று தன் தலையைப் பாராட்டுவள்.

தனக்குக் கூறிய மறைப்பொருளாகிய உரையாடலை எண்ணி ஒழியா இன்பத்து உவகைமீதூரப் பல எண்ணங்களை எண்ணி இன்புற்றிருக்கிறபோது தலைவன் வா வா என்று அழைக்க அவனோடு ஒன்றஇருக்கின்ற இவள் உடன் வருவாரை அழைத்துக்கொண்டு யாத்திரை புறப்படுவாள். இடையூறு சிறிது உண்டாகப் படையெழப் பணிப்பள். தன் துயரம் தீர்க்கும் மருந்தாய்த் தலைவன் ஆயினமையும் தான் அவனோடு அனுபவிக்கும் அனுபவத்துக்கு ஐயமில்லை என்பதையும் உரைத்துத் தன் நிலை தலைவன் நிலையாகவே ஆயிற்று; அதனால் எனக்குள்ள அநுபவம் ஆனந்தமாலையாக வருகிறது; இத்தகைய ஆனந்தத்தை இவ்வுலகில் என்னைத் தவிரப் பெறவல்லார் வேறுயார் அச்சோ என்று இன்பமார்ந்து இனிதிருப்பாள்.

நூலமைப்பு:

முதற்கண் நான்குபாடல்கள் கலிவெண்பாவும், நிலைமண்டிலம், இணைக்குறள் நிலைமண்டிலம் ஆகிய அகவற்பாக்களுமாக அடிகள் பல்கி அமைந்திருக் கின்றன. திருச்சதகம், நீத்தல் விண்ணப்பம், கோயில் மூத்த திருப்பதிகம், கோயில் திருப்பதிகம், பிரார்த்தனைப் பத்து, குழைத்த பத்து, பண்டாய நான்மறை என்பன அந்தாதித் தொடையான் அமைந்துள்ளன. ஏனைய அங்ஙனமன்றித் தனிப் பாடல்களின் தொகுதியாகக் கோக்கப் பெற்றன. சில பதிகம் என்றும் சிலபத்தென்றும் பெயரமைந் துள்ளன. இவற்றின் வேறுபாடுகள் அறியக் கூடவில்லை, அச்சோப்பதிக மென்பது அச்சோப் பத்தென்றும், திருப்பாண்டிப் பதிகமென்பது திருப்பாண்டி விருத்த மென்றும், கோயிற் பதிக மென்பது கோயிற்பத்தென்றும் அழைக்கப்படு கின்றன. திருவெண்பாவையும் பண்டாயநான்மறை யையும் சேர்த்து ஒரு பகுதியாகத் திருவாதவூர் புராணம் வழங்குகிறது. மற்றும் 'வெண்பா நாலேழ்' என இருபத்தெட்டு இருந்ததாகக் கூறுகிறது. திருவாசகத்துள் வெண்பாவால் வரும் பகுதிகள் திருத்தசாங்கமும், திருவெண்பாவும், பண்டாய நான்மறையும் ஆம். இவை மூன்றும் சேர இருபத் தெட்டு வெண்பாக்கள் உள்ளன. ஆனால் தசாங்கத் தைத் தனியே கூறி மீட்டும் இருபத்தெட்டு வெண்பாக்கூறுவதால் திருவெண்பா பதினென் றும், பண்டயநான்மறை ஏழும் போகப் பாக்கி

பத்துவெண்பாக்கள் இருந்து மறைந்திருக்கலாமோ என்று எண்ண இடமுண்டு.

திருவாசகப்பதிகங்களின் அடைவுமுறை மாறுத வண்ணம் திருப்பதிகங்களின் பெயருந்தொகையும் என்ற தலைப்பில் எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம் மூன்றும், வெண்பாவந்தாதியாகப் பத்துப் பாடல்களும் பெருந்தொகை முதலிய தொகைநூல் களிற் காணப்பெறுகின்றன. அவை இந்த முறை யைக்கோத்து நினைவுக்குக்கூறப்பட்டனவேயன்றிக் காரணம் கூறுவனவல்ல. அவற்றைச் செய்தார் பெயரும் அறியக்கூடவில்லை.

பழமொழிகள் :

பெரியோர்கள், நுண்ணிய தெள்ளிய திரு வுள்ளக்கிடக்கைகளை உலகியலிலே எல்லார் வாயி லும் வழங்குகின்ற பழமொழிகள்வாயிலாக வைத்து விளக்குவார்கள். அவற்றை அப்படியே எடுத்தாளு வது முண்டு. செய்யுள் நடைக்கேற்பச் சொற்களை மாற்றியமைத்து ஆளுவதுமுண்டு. மிகவுயர்ந்த கருத்துக்களை எளிய பழமொழிகளின் வாயிலாகப் பெரியோர்கள் விளக்குவது இயல்பு. அம்முறையில் திருவாசகத்திலும் பல பழமொழிகள் வந்துள்ளன.

குருட்டுக்காளை ஊர்சுற்றியதுபோல், முதலையும் மூர்க்கனும் கொண்டது விடா, ஊராமிலைக்கக்குருட் டாமிலைத்தது போல, குழந்தை கையில் பொற் கிண்ணம், ஆற்றங்கரை மரமும் அரசறிய வாழ்ந்த

வாழ்வும், விளக்கில்விழுந்த விட்டிற்பூச்சி, இருதலைக் கொள்ளி எறும்பு, கடல் தண்ணீரை நாய் நக்கியது போல, வெள்ளத்தில் நாவற்றியதுபோல, நீர்வறள மீன் துவண்டதுபோல, மத்துறு தயிர்போல, மூங்கிற்புதரில் தீப்போல, பலாப்பழத்தில் ஈமொய்த் தாற்போல, இரைதேர் கொக்குப்போல, ஆள்வாரிலி மாடுபோல ,பாவாடு குழல்போல, தாம்வளர்த்த நச்சு மரமாயினும் கொல்லமாட்டார்கள், கல்லைப் பிசைந்து கனியாக்கல், காலமெல்லாம் பாழுக் கிறைத்தல், கல்லில் நார் உரித்தாற்போல, அடி அகலா நிழல்போல, உன்கையிற் பிள்ளை உனக்கே அடைக்கலம், நெய்க்குடத்தை எறும்பு மொய்த்தாற் போல, எறும்பிடை யகப்பட்ட நாக்குப்பூச்சிபோல, கொழுகொம்பில்லாக் கொடிபோல, நாய்மேல் தவிசிட்டாற்போல, கரையில்லா வெள்ளம்போல, நாய்க்குப்பொற்றவிசிட்டாற்போல (நாயைக்குளிப் பாட்டி நடுவீட்டில் வைத்தாற்போல), நாயைப் பல்லக்கில்வைத்தாற்போல முதலான பழமொழிகள் இடமிடங்கள்தோறும் விளங்கிக் கருத்துக்களின் உயர்வையும் தெளிவையும் ஆழத்தையும் காட்டு கின்றன.

புராணவரலாறு :

வரலாறுகள் நமக்குப் பழைமையையுணர்த்தி உணர்ச்சிவேகத்தைத்தட்டி எழுப்புங்கருவிகளாம். புராண வரலாறுகள் இறைவன் நமக்குச்செய்த பேருபகாரத்தைப் பழைய நிகழ்ச்சிகள்மூலம் நினை

லூட்டுவன. நன்றியை மிகுவிப்பன. நாம் அவரை மறக்காமலிருக்க நல்லுபாயங்கற்பிப்பன. அவற்றை எடுத்தாளுதலாலேயே தோத்திரப்பாடல்கள் அன்புக் கருவூலங்கள் ஆகின்றன.

அடியார்கள், தம்மனம் இறைவனுடைய எந்த அருட்செயலில் மிகத்தோய்ந்திருக்கின்றதோ அதனையே பலகாற்பேசுவார்கள், அன்புவெள்ளத்தைப் படிப்பவர்களுடைய பள்ளமனத்திற்பாயச்செய்வார்கள்.

இந்தநிலையில் முன்னிற்பவர் நமது வாதவூர் அண்ணல். திருவாசகத்துள் இடமறிந்து புராண வரலாறுகளைப் பொருந்தவைக்கின்றார்கள். ஒரு வரலாற்றையே பலகாற் பேசினும் புதியகருத்து மனத்தைப் பிணித்திருக்கின்றது. உதாரணமாக, இறைவன், திருமாலும் அயனும் அறியமுடியாத வண்ணம் அண்ணாமலையாய் வளர்ந்தருளி, அவர்களது அறியாமையைப்போக்கி ஆட்கொண்டார் என்பது புராணவரலாறு. இதனை நாற்பதுக்கு மேற்பட்ட இடங்களில் அமைத்துள்ளார். ஆனாலும் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு புதுமை. கீர்த்தித் திருவகவலில் 'அரியொடுபிரமற் களவறியாதவன்' என்றார்கள். தந்தையும் தனயனும் அளந்தறிய முடியாத தன்மையன் எம்மிறை என்பதனையுணர்த்தினர்.

அடுத்த திருவண்டப்பகுதியில் இதேகருத்தை அமைத்துப் 'பிரமன் மால் காணாப்பெரியோன்'

என்கின்ருர். காணுதற்குக் கண்கூர்மை வேண்டும். எந்தத்திசையிலிருந்தாலும் ஒருசேரப் பார்க்கும் வன்மைவேண்டும். ஆதலால் அந்த இரண்டையுமே இளமையாற்பெற்ற பிரமனை முற்கூறி, அவ்விரண்டாலும் சிறிது குறைந்துள்ள மூத்த அவன் தந்தையான திருமாலைப் பிற்கூறி அவ்விருவருங் காணமுடியாதவன் என்ருர். காணமுடியாமைக்கு இறைவன் அணுவிற்கு அணுவாயிருக்குந்தன்மை காரணமன்று. அவன் பெரியவற்றிற்கும் பெரியவஞக இருக்கின்ருன்; அங்ஙனமிருந்தும் காணமை அவர்கள் ஒளிக்குறைவேயென்பார் 'பிரமன் மால் காணுப்பெரியோன்' என்கின்ருர். பின்னர், 'மால் அறியா நான்முகனுங் காணுமலை' என்ற பகுதியால் இறைவன் மாலறியாமலை, நான்முகனுங் காணுமலை என்கின்ருர். இதஞல் மால் பிரமனைக்காட்டிலும் சிவபூசை செய்து சிவாநுபவவாயிலை அடைந்தவன். ஆஞல் அவஞலறியப்பெருத மலைபோன்றவன் இறைவன். நான்முகன் நாற்றிசைகளிலும் முகம் உடையவன். மலை எங்குநின்ருலும் தோன்றுமியல்பினது. அதனை இவன் காணமாட்டான் ஏன்; அறிவொளியோடு கண்ணொளியும் இல்லாதவன் என்பதனைக் காட்டியருளுகின்ருர். திருவம்மானை முழுவதிலுமே இத்தகைய சிறந்த நயங்கள்பல தோன்றப் பலவிடங்களில் இவ்வரலாறே தொடர்ந்து வருகின்றது. நஞ்செயலற்று நாமற்றபின் நாடவேண்டிய இறைவனடியைத் தோண்டிக் காணமுற்பட்ட திருமால் தோல்வியுற்ருன் என்ற நயத்தை

யுள்ளடக்கித் 'திருமாலும் பன்றியாய்ச் சென்றிடந் துங்காண்பரிய' என்கின்றார்.

திருமால், திருவீழிமிழலையில் கண் மலர்கொண்டு அருச்சித்துச் சக்கராயுதம்பெற்ற வரலாற்றையும், சலந்தராசுரனைவென்ற வீரட்டச்செயலையும், திருச்சாழலிலும், திருத்தோணோக்கத்திலும் அமைத்து அருளுகின்றார். இதில், திருச்சாழல் சிவபெருமானுடைய முழுமுதற்றன்மையை வெளிப்படுத்தப் பாடப்பெற்றது. ஊமையின் வாயிலாகவந்த விடைகளைத் தொகுத்து அமைக்கப்பெற்றது. அந்த இடத்தில் நாராயணன் பூசித்துச் சக்கரம்பெற்ற வரலாற்றையமைப்பது எவ்வளவுபொருத்தமானது.

அங்ஙனமே தோணோக்கமாடும்போதும் தக்க யாகத்து வீரச்செயல்கள் பலவும் விளங்குகின்றன. திருவுந்தியாரிலும் இந்திரன் குயிலாகித்தப்பியோடியது, பகன்கண்ணைத் தோண்டியது, தக்கனுக்குத் தலையகன்றது முதலாகிய நிகழ்ச்சிகள் குறிக்கப் பெற்றுள்ளன.

திருத்தில்லையில் இறைவன் பதஞ்சலிக்காக நடனஞ்செய்த வரலாறு கீர்த்தித்திருவகவலிலும், திருச்சாழலிலும், பூவல்லி தோணோக்கம் முதலியவற்றிலும் பேசப்பெற்றுள்ளன. இவையன்றி முப்புரம் எரித்தது, யானைத்தோல் போர்த்தது, மன்மதனை எரித்தது முதலிய வீரச்செயல்களும் குறிக்கப்பெற்றுள்ளன.

திருவிளையாடற் புராண வரலாறுகளில் நரி பரியாக்கியது, வாதவூரடிகட்கு உபதேசித்தது, பிட்டுக்கு மண்சுமந்தது, அட்டமாசித்தி உபதேசித்தது, மெய்க்காட்டிட்டது, விருத்தகுமாரபாலரானது, வெள்ளானை சாபந்தீர்த்தது, பன்றிக் குட்டிக்குப் பாலருத்தியது, கரிக்குருவிக்குபதேசித்தது, தண்ணீர்ப்பந்தல் வைத்தது, சோழனைமடுவில் வீட்டியது, இரசவாதஞ்செய்தது, வலைவீசியது, வளையல்விற்றது முதலியன விளக்கப்பெற்றுள்ளன.

பெரியபுராணத்தில் கூறப்படும் கண்ணப்பர் வரலாறும் சண்டேசுரநாயனர் வரலாறும் திருத்தோணைக்கத்திற் பேசப்படுகின்றன. இறைவன் அர்ச்சுனனுக்காக வேட்டுவ வுருவங் தாங்கிய வரலாறு பண்டாய நான்மறையிலும், சந்திரன் சாபத்தைத் தடுத்துச் சடையிலணிந்த வரலாறு திருப்பொற்சுண்ணத்திலும், இராவணன் கைலையைத்தூக்க நெரித்தவரலாறும் பிரமன் சிரங் கொய்தவரலாறும் உபமன்னிய முனிவர்க்குப் பாற்கடல் அளித்த வரலாறும் திருவுந்தியாரிலும் பேசப்படுகின்றன.

இவர்களால் மிகுதியும் எடுத்து ஆளப்படுவது பிரமன் மாலறியாமையும் தக்கன் மகமழித்த வரலாறுமேயாம். அருட்பத்தில் அம்மையார் வளைத் தழும்பினைப் பெற்றுத் திருத்தோள் விளங்குவதை எடுத்துப் பேசுகின்றார். புலிமுலை புல்வாய்க்கருளிய

தும், இறைவன் பிக்ஷாடனத் திருக்கோலங்கொண்டதும் ஆகிய வரலாறுகள் ஆங்காங்கு குறிப்பிடப்படுகின்றன.

தலக்குறிப்புக்கள் :

ஆசிரியர் யாத்திரைசெய்த தலங்கள் எல்லாவற்றையும் அவர்கள் குறித்துள்ள தலங்களின் பெயர்களிலிருந்து அறியலாம். இந்நூலுள் கோகழி, கல்லாடம், தில்லை, சிவபுரம், நந்தம்பாடி, வேலம் புத்தூர், சாந்தம்புத்தூர், மதுரை, உத்தரகோசமங்கை, பூவணம், வாதவூர், வெண்காடு, பட்டமங்கை, ஓரியூர், பாண்டூர், தேவூர், திருவாரூர், திருவிடைமருதூர், காஞ்சிபுரம், திருவாஞ்சியம், கடம்பூர், திருஈங்கோய்மலை, திருவையாறு, திருத்துருத்தி, திருப்பனையூர், திருக்கழுமலம் (சீகாழி), திருக்கழுக்குன்றம், திருப்புறம்பயம், திருக்குற்றாலம், சந்திரதீபம், திருக்கயிலை, திருவண்ணாமலை, திருப்பராய்த்துறை, திரிசிராப்பள்ளி, திருப்பழனம், மகேந்திரமலை என்ற தலப்பெயர்கள் குறிப்பிடப்படுகின்றன.

அவற்றுள் கோகழி என்பது திருப்பெருந்துறையைக் குறிப்பதாகும் என்று பல உரையாசிரியர்கள் கூறுகிறார்கள். திருவாவடுதுறை என்பாரும் உளர். தில்லை முதலிய தலங்கள் பலவேறு பெயர்களாலும் அழைக்கப்படுகின்றன. சந்திரதீபம் என்பது ஒரு தீவா அல்லது ஊரா என்பது ஆராயத்தக்கது.

தெய்வங்கள் :

இந்நூலுள் அம்மை, கந்தன், திருமால், பிரமன், உருத்திரன், வீரபத்திரன், இந்திரன் முதலிய தெய்வப் பெயர்களும், தக்கன், பகன், சந்திரன், மன்மதன் முதலிய தேவர்களின் பெயர்களும், பரமனுடைய அருளையும், வீரத்தையும் விளக்கும் முறையால் பல இடங்களில் சேர்க்கப் பெற்றுள்ளன.

அம்மையார் சற்றேறக்குறைய நாற்பத்தேழு இடங்களில் பேசப்படுகின்றார். அம்மையினுடைய பலவேறு நிகழ்ச்சிகள் அணிசெய்து நிற்கின்றன. 'இமவான் மகள்' 'மலைகமள்' 'பார்ப்பதி' என்ற குறிப்புக்கள் மலையரசனுக்கு மகளான வரலாற்றை அறிவிப்பன. ஏனைய அம்மையின் குழற்சிறப்பையும், அணிச்சிறப்பையும், கண்ணழகு இடையழகு நடையழகு தோளழகு முதலியவற்றின் சிறப்பையும் எடுத்து விளக்குவன.

திருச்சாழலில் 'மலையரையன் பொற்பாவை', 'வாணுதலாள் பெண்திரு' என்று அம்மை பேசப்படுகிறார். இறைவன் மணஞ் செய்துகொண்டதை அறிவிக்குமிடமாதலின் முதற்கண் அரசகன்னி என்றும், அடுத்து நெற்றி அழகுடையவள் என்றும் பேசிப் பின் பெண்களுக்கெல்லாம் செல்வம் அம்மையே என்பார் 'பெண்திரு' என்கின்றார்.

திருப்பாண்டிப்பதிகத்தில் அம்மையைப் பெருந்தேவி என்பது மிக அழகிய பகுதி. இவ்வாறே

'மாது நல்லாள்' என்று திருவார்த்தையில் அழைக்கின்றார். இச்சொல்லமைதிகள் முன்னுள்ள பொருட் டொடர்களுக்கு ஏற்ப, நலமும் நயமும் பயந்து நிற்கின்றன.

அம்மை பெருங்கருணைப்பிராட்டியாக இறைவன் இயற்றும் ஐந்தொழிலுக்கு உபகாரியாக இருந்தும், பெண்மைக்கு ஏற்ற விளையாட்டு நலமும் உடையவர் என்பதனை 'பந்தணைவிரலி' என்ற பகுதி காட்டுகிறது. எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் நிற்பவளாயிருந்தும் 'உலக மாதர்களுக்கு உணர்வு பெருக வேண்டும்' என்ற திருவுள்ளக் குறிப்பால் பேதைபோல இருக்கின்றார் என்ற . கருத்தை விளக்கும் 'ஏழை' என்ற பகுதி இனிப்பு ஊட்டுவனவற்றுள் ஒன்று. 'பழுதில் தொல்புகழாள்' என்பதும் அங்ஙனமே.

முருகனின் புகழ் நேரே கூறப்படாவிட்டாலும் நல்வேலன் தாதை (197) குமரன் தாதை (310) என இறைவனைக் குறிக்கும் முறையில் குறிப்பிடப் படுகின்றன.

திருமால் ஆழியான், நாரணன், கன்றால் விளவெறிந்தவன், பொருகடற் கிடந்தான், வளைக்கையான், கருடக்கொடியோன், கருமால், நீண்டமால் என்ற பெயர்களால் அழைக்கப்பெறுகிறார். இறைவனடியைத் தேடித்திரிந்த வரலாறும், தனது கண் மலரைச் சாத்திச் சக்கரம்பெற்ற வரலாறும் பல இடங்களிற் கூறப்படுகின்றன.

பிரமன் 'முழுதுலகங்கண்டான்' எனப்பேசப் படுகின்றான். பிரமனின் படைப்புத் தொழிலுக்கு உறுதுணையாயிருந்தது வேதம் என்பதனை மறை யோன், மாமறையோன் என்ற பிரயோகங்கள் நன்கு விளக்குகின்றன. நான்முகன், பூவேறு கோன், போதுசேரயன், அல்லிக்கமலத்து அயன், கமல நான்முகன் என்ற பெயர்கள் பல இடங்களில் விளங்குகின்றன. அன்னமாய் முடிதேடிய வரலா றும், சிரங்கிள்ளப்பெற்ற வரலாறும் பேசப்படு கின்றன.

இந்திரன் புரந்தரன் என்றும், அமரர்கோன் என்றும் அழைக்கப்பெறுகின்றான். தக்கயாகத்து அவியுண்ணச் சென்ற அடாத செயலுக்காக வீரபத்திரக்கடவுளால் தோள் நெரிக்கப்பெற்றதும், குயிலாக உருமாறி ஓடிஒளிந்ததுமாகிய நிகழ்ச்சிகள் குறிக்கப்பெறுகின்றன. கற்பக விருக்ஷம் (197) திருப்பொற்சுண்ணத்தில் குறிக்கப்பெறுகின்றது.

மன்மதன் வேனில்வேள் என்றும், அநங்கன் என்றும் பேசப்பெறுகின்றான். திருச்சாழலில் 'அநங்கனை வயனங்கள் மாயா வடுச்செய்தான்' என்றருளுகின்றார். இறைவன் செய்தற்கருஞ்செய லைச்செய்பவன் என்பதை மன்மதன் உருவிலியா யிருந்தும் அவனுக்கு அழியாத வடுவை ஆக்கினர் என்றும், இறைவன் இருமங்கையர்களுக்கு நாயக ராக இருந்தும் காமனைக் கண்ணழலால் எரித்த

அருமைப் பாட்டில் வியப்புத்தோன்ற "ஏலவார் குழலிமாரிருவர் தங்கள் நாயகனே காமன் உடல் தழலெழ விழித்த செங்கணுயகன்" என்றும் கூறு வது இடத்திற்கு ஏற்ப அநங்கன் பெயரை ஆண் டிருக்கும் அருமைப்பாட்டை விளக்குகின்றது.

வீரபத்திரர் திருப்பூவல்லியில் வீரபத்திரர் பூதப் படையை யுடையவர் என்றும், தக்கன் அருக்கன் எச்சன் முதலியோர்களைப் புண்படுத்தி மடியச் செய்தார் என்றும் கூறப்பெற்றுள்ளன.

உவமை நலம் :

கவிகளின் கருத்துக்களைப் படிப்பாரும் கேட் பாருமாகிய பிறர்கருத்தில் பதிவிக்கும் கருவியே உவமைகள். கருத்தைத் தெள்ளத் தெளிய எடுத்து விளக்கும் சிந்தனையின் தெளிவே உவமைகள். இதனாலேயே அணியியலார் எல்லா அணிகளுக்கும் தாயாக இதனை ஏற்றுக்கொண்டனர். தருக்கநூலார் இதன் இன்றியமையாமையைக்கருதி அளவை களுள் ஒன்றாகவும் ஆண்டனர். எழுத்திலக்கண வாசிரியர்கள் ஆகுபெயர்களுள் ஒன்றாகவும் தொகை நிலைத்தொடரில் ஒன்றாகவுமாண்டார்கள். இதனால் புலவன் கருத்து உவமை ஏணியின் வாயிலாகவே பிறருடைய உள்ள மலையை ஏறுகின்றதென்பது உறுதி. அதிலும் ஆன்ம அறிவிற்கு அப்பாற்பட்ட சிவபோக நுகர்ச்சியைத் தெரிவிக்க உவமையைத் தான் ஊன்றுகோலாகக்கொள்ள இயலும். நமது

மணிவாசகப்பெருந்தகை அங்ஙனமே இடத்திற்கும், கூறும்பொருளுக்கும் ஏற்ப அழகிய உவமைகளை ஆழ்ந்த கருத்தைத் தெளிவிக்கு முறையில் தெரிவித் திருக்கின்றார். அவற்றை ஒவ்வொன்றாகச் சுவைப் பது முடியாதாகலின் ஒன்றிரண்டைச் சுவைத்து ஏனையவற்றைத் தொகுத்துக் கூறிவிடுவோம்.

அரி பிரமாதிகட்கும் அரியவனுகிய இறைவன் ஒளிசெய் மானுடமாகி எழுந்தருளி யாட்கொண் டான்; அங்ஙனம் ஆட்கொண்டபின் அவனரியன் என்பதை அடியேன் அறிந்திலேனென்ற கருத்தை விளக்கவந்த மணிவாசகப் பெருந்தகைக்குக் குழந் தையின் செயல் ஒன்று உவமையாயிற்று. ஒரு குழந்தை விலைமதிக்கமுடியாத பொற்கிண்ணம் ஒன்றைக் கையில் எடுத்தது. அதன் மதிப்பை-அரு மையை அது அறியுமா? அடித்தது; கடித்தது; மோதிற்று; வீசிற்று; நசுக்கிற்று. அதுபோலவே தேவரீர் பெருமையுணராது மயங்கினேன் என்ற கருத்தை யமைத்து "மழக்கையிலங்கு பொற்கிண் ணம் என்றலால் அரியை யென்றுனைக் கருதுகின்றி லேன்'' என்றருளுகின்றார்கள்.

மற்றோரிடத்து, 'என் ஆன்மாவிற்குக் கருவாகி யிருப்பவர் கடவுள். எனது முயற்சிகள் யாவும் அவரைக்காணவே. அங்ஙனமிருந்தும் யான் கண்டி லேன்' என்றருளுகின்றவர்கள் "இருகையானையை ஒத்து என்னுள்ளக்கருவை யான் கண்டிலேன்'' என்கின்றார்கள்.

"இருகையானை ஒத்து" என்ற உவமை எல்லாரையும் மயக்கி நிற்கின்றது. சிந்தனை சக்தியைத் தட்டி எழுப்பி நிற்கிறது. ஒருவர் கூறிய நலத்தைக் காட்டிலும் உயர்ந்த கருத்தைத்தேட ஒவ்வொருவரையும் உந்துகிறது. அதனால் ஒருவர் 'ஒருகையால் உண்டு போதாமையால் இரு கையாலும் உண்டு உடலை வளர்க்கின்ற யானைபோல உயிர்க்கருவை உணராதிருந்தேன்' என்கின்றார். ஒருவர் 'கையும் மூக்குமாகிய ஞானேந்திரியங்களில் ஒன்றாகியும்-கன்மேந்திரியங்களில்ஒன்றாகியும் இருக்கிற கையையுடைய யானையைப்போல எல்லாவிதமான இந்திரியங்களையும் கரணங்களையும் பெற்றும் கருவைக் கண்டிலேன்' என்கின்றார். மற்றொருவர் 'ஸ்பரிச உணர்ச்சியும் கந்த உணர்ச்சியும் உடைய கையைப் பெற்ற யானைபோலக் கண்டிலேன்' என்கின்றார். மற்றொருவர் வடமொழிபடித்தவர். 'துவிபம்என்றாற் போலக் கையால் ஒருதரமும், அதனை வாயால் ஒரு தரமும் குடிக்கும் ஒழுக்கமுள்ள யானைபோலப் பல கால் முயன்று, உடல் பருத்ததேயன்றிப் பரமனை யறியாத ஆனைபோன்றேன்' என்கின்றார்.

கம்பர் 'இருகையிற் கரிநிகர் எண்ணிறந்தவர்' என்றும், 'இருகை வேழத்திராகவன்' என்றும் இராமபிரானைக் குறிப்பிடுகின்றார். அவர் கவிதைப் போக்கு இராமனையும், மந்திரிமார்களையும் வலியாலும், ஒளித்த துப்பாலும், நிறத்தாலும் யானைக்கு ஒப்பிட எண்ணினர் என்பதையும், அதற்கு இடை

பூருக இருந்தது யானைக்கு ஒரு கையும்-இவர்கட்கு இரு கையும் இருந்தமையுமே என்பதையும் காட்டி நிற்கிறது. ஆதலால் சிந்தனை பெருக்கிய கம்பர் இரு கைவேழத்திராமன் என இல்பொருளுவமையாகத் தந்தார் என்பதும் விளங்குகின்றது. ஆதலால் இங்கும் அடிகளார் காணவேண்டிய உள்ளக் கருவைக் காணாது இருகை யானையை ஒத்திருந்தேன் என இல்பொருள் உவமை தந்தார் என்பது மிகப் பொருந்துவதுபோலும். அன்றியும் பின்னடிகளில் யானைபோல உடல் வளர்க்கத் தெரிந்துகொண்டேன் ஆனால், மகாதேவன் என்றுகூறும் ஆற்றலில்லேன் என்ற கருத்தை விளக்கும் "அண்ணலே கிற்பன்" என்பதும் இக்கருத்திற்கு நயம்பயப்பதாகும். இங்ஙனம் புலவர்க்கு அறிவுநலங்காட்டும் உவமைகளை அடிகளார் அருள்வாக்கு வெளிப்படுத்தும். பொன்னூசலில் ஏறியிருந்து ஆடும் மகளிர்க்கு "அன்னத்தின் மேலேறியாடும் அணி மயில்போல்" என்ற உவமை மிக இன்பம் பயப்பதாம்.

இயற்கை நிகழ்ச்சிகள் எண்ணுவார் எண்ணத்தின் அமைதிக்கேற்ப அழகைத்தந்து அணியாகின்றன என்பர் அலங்கார சாத்திரமுடையார். அங்ஙனமே அடிகளார் காணும் உவமைகள் அன்புச் சுவையை மிகுவிப்பனவேயாக அமைந்துள்ளன. கடவுளின் தயையை அளந்துகாட்ட, 'பானினைந்தூட்டும் தாயினும் சாலப்பரிந்து' என்றும், 'தாயிற்

சிறந்த தயாவான தற்பரன்' என்றும் கூறுவது அன்பை வளர்க்கும் அரிய உவமைகளாம். இங்ஙனமே உவமைகள் பலவிடங்களில் விளங்குகின்றன.

மழை பெய்தது. இந்த இயற்கை இவர்கள் கருத்துக்குப் பராசக்தியின் கருணையாகப்பட்டது. அதனால் 'அவள் நமக்கு முன்சுரக்கும் இன்னருளே என்னப்பொழியாய்' என்கின்றார்கள். அம்மட்டோ! மேகம் எழும்பும்போதே பராசக்தியின் திருமேனியைப்போலப் பசுமையாய் எழுந்தது. அவள் இடைபோல மின்னியது. அவள் திருவடியிற் கிடக்கும் நாதச்சிலம்புபோல் ஒலித்தது. அவள் புருவம் போல இந்திர வில்லிட்டது என்று அதன் முழுச் செயலாலும் திருவருட் சக்தியாகவே காண்கின்றார்.

உவமையோடு சிலேடை :

புலவர்க்குப் பெரும் விருந்தாக இருப்பது சிலேடை. ஒரு கல்லில் இரண்டு மாங்காய் விழுவது போலச் சொல்லொன்றே இருபொருள் தந்து இனிக்குமானால் அதனை வேண்டாம் என்பார் யார்? இத்தகைய சிலேடைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகப் பாவையராடும் பொய்கை இறைவனும் இறைவியுமாகவே காட்சியளிக்கிறது எனத் திருவெம்பாவையுள் சிலேடைவகையால் சித்திரிக்கின்றார். (167)

## உருவகம் :

உவமை முறுகி வளர்ந்தால் உருவகமாகும். உவமையும் பொருளுமாக-அளவையும் அளக்கப் படும் பொருளுமாகப் பேதநிலையில் அனுபவிப் பதைக்காட்டிலும், ஒன்றுபடுத்தி அனுபவிப்பது இன்பமிகுந்தநிலை - தோய்ந்தநிலை என்பதை அறி ஞர்உலகம் நன்கு அறியும். அங்ஙனமே பரமானந் தப்பெருங்கடலே முகிலாய்த்தோன்றிப் பெருந் துறை மலையில் ஏறி, நாலாபக்கமும் மின்னொளி யிட்டு, அருட்டுளி வழங்கியது. வானப்பேரியாறு அருச்சனை வயலிற் பாய்ந்தது. அன்பு விளைத்த தொண்ட உழவர்கள் சிவபோகம் அறுத்து அனு பவித்தனர் என்றுருவகிக்கின்றார். இன்னும் 'அறி வொண்கதிர்வாள் உறைகழித்து ஆனந்தமாகக் கடவி எறியும் பிறப்பை எதிர்ந்தார் புரள இரு நிலத்தே' என்பது எவ்வளவு சிறந்த உருவகம்.

## சுவை :

அருள்வடிவாகிய சிவபெருமானை அன்புச்சுவை யால் காட்டுவது திருவாசகம் என்பதை உலகம் நன்கறியும். ஆனால் அன்பு ஒன்றே சுவையாக முடியாது. ஏனைய சுவைகள் இடை இடையே இருந் தால்தான் இது சுவைக்கும். தனித்துஎடுத்து இனிது துய்க்கப்பெறும். பவளமும் பச்சையும் முத்தும் முதலாயின விரவத்தொடுக்கப்பட்ட மாலையே கருத் தையுங் கண்ணையுங் கவருகின்றது. அதுபோல

அன்புப்பொழிலாகிய இந்நூலுள் எல்லாச் சுவைகளும் அமைந்துள்ளன. ஒவ்வொரு சுவைக்கும் ஒவ்வொன்று எடுத்துக்காட்டி ஏனையவற்றை ஒருசேரச் சுருக்கமாகத் தொகுத்து நோக்குவோம்.

நகைச்சுவை சுவைகட்கு முதல்நிற்பது. அது எள்ளல், இளமை, பேதைமை, மடமை என்ற நான்கு காரணங்களால் விளைவது. அவற்றுள் எள்ளலாவது தன்கடமையி னீங்கினரையும், செயல்தொடங்கி முடிக்காதாரையும், தோற்றாரையும் நோக்கி இகழ்வது. இகழ்ந்தவழி நகைபிறக்கும். அங்ஙனமே மணிவாசகப் பெருந்தகை, தம்மை யடிமைகொண்ட இறைவன் கைவிட்டுக் கடமையிற் றவறினராக அவரை, 'வெங்கரியின் உரிப்பிச்சன், தோலுடைப் பிச்சன், நஞ்சுண்பிச்சன், ஊர்ச்சுடுகாட்டுப் பிச்சன், என்னையும் ஆளுடைப்பிச்சன் என்று ஏசுவன் சிரிப்பிப்பன்' என்று எள்ளி நகைச்சுவை படநவில்கின்றார். மற்றும், என்னைக் கைவிடின் பெரியோர்கள் இவன் யாரடியான் என்று கேட்டால் 'உத்தரகோசமங்கைக்கு அரசின் அடியான் என்றும் சிரிப்பிப்பன்' என்கிறார். மற்றோரிடத்து குணமிலி, தேய்மதியன், மானிடன், பெரிய ஆண்டி என்று ஏளனம் செய்வேன் என்கின்றார்.

பேதைமை காரணமாக விளைந்த நகைச்சுவையாக, இடுகாட்டிற் பேயோடு ஆடிக் கதியற்றுப் பைத்தியம் பிடித்தலைவர் என விளக்குகிறார்.

இரங்கல் என்பது அவலம் எனவும், அழுகை எனவும் வழங்கப்பெறும். இச்சுவையைப் பலஇடங்களில் அடிகள் அமைத்துக் கனிகிறார். கோயில் மூத்ததிருப்பதிகத்துள் 'அடியேனை முன்னின்று ஆட்கொண்டாய்; அடியேனும் அங்ஙனமே தேவரீர் அருள்வழி நின்று முயல்கிறேன்; அங்ஙனமிருந்தும் கைவிட்டீர்; இந்நிலையில் என்னைப் பார்த்துப் பெருமக்கள் இவன்யார் என்று தேவரீரை வினவின் தேவரீர் என்செய்யக்கூடும்' என்று இரங்குகிறார். இது பிற்பட்டொழிந்தேன் என இழவு என்னும் அவலக்குறிப்பாய் நிற்பதை யுணர்த்தியவாறு.

இளிவரல் என்பது இழிபு. இது மூப்பு முதலிய நிலைக்களனாகத் தோன்றுவது. அவற்றுள், இறைவன் தன்னைவிட்டமையால் 'உடல் துணிபட அறுக்கிலேன்; தீப்புக்கு ஆர்கிலேன்; திருவருள் வகையறியேன்; பொறுக்கிலேன் உடல்' எனத் தன் நிலையை இழித்துக் கூறுவதால் இப்பகுதி வீரம் பற்றி விளைந்த இளிவரலாயிற்று.

மருட்கையாவது வியப்பு. அது புதுமை முதலிய நிலைக்களனாகத் தோன்றுவது. அவற்றுள் இந்நூலிற்கண்ட அதிசயப்பத்து, அற்புதப்பத்து முதலியன இச்சுவையினது பலநிலைக்களன்களுக்கு எடுத்துக்காட்டாக அமைந்துள்ளன.

அச்சம் என்பது பயம். அணங்கு முதலிய பிறிது பொருள் காரணமாகத் தன்கண் தோன்

றுவது. அச்சப்பத்துள், சிவத்தைக் கற்காத வரையும், பிறதெய்வத்தை யருவருக்காதவரையும், சிவத்திடத் தன்பிலாதவரையும் உள்ளம் நெகாத வரையும், நீறணியகில்லாதவரையும் காணின் அடிக ளார்க்கு வருத்துந் தெய்வத்தையும் விலங்கையும் கண்டாற் போன்ற உணர்ச்சிமிகும். அதனால் அவர்களைக் காணின் மிக அஞ்சுவதாக அறிவிக் கின்றார்கள். இதற்கென்றே இயன்ற பகுதி அச்சப் பத்தாகும்.

பெருமிதம் என்பது வீரம். அதாவது எல்லா ரோடும் ஒப்பஇல்லாது பேரெல்லையாக நிற்பது. இது கல்வி முதலிய நான்கு நிலைக்களனாகத் தோன் றும். கல்வியாவது தவமுதலாகிய விச்சையென்பர் பேராசிரியர். நமது வாதவூர் வள்ளல் பிடித்த பத்தில் இறைவனை நோக்கி 'சிக்கெனப்பிடித்தேன் எங்கெழுந்தருளுவதினியே?' என்று வினவியருளு கின்றார். ஒரு ஆண்டானைப் பார்த்து அடிமை வினவலாமா? தன் கடமையாகிய தவத்திற்றவறாத் தன்மை தம்மிடம் இருப்பதால் இங்ஙனம் வினவு கின்றார்கள். ஆதலால் தவமாகிய கல்விபற்றிய பெருமிதமாகும் இந்தப்பாடல். 'பெற்றதார் பெறு கிற்பார்' என்பதும் 'ஆர்பெறுவார் அச்சோவே' என்பதும் இத்தகைய வீரமே.

வெகுளிச்சுவை அன்புள்ளத்து அங்குரியாது அல்லவா? ஆதலால் தன் மாட்டு எழுந்த வெகுளி யைத் திருவாசகத்துள் காண்டல் அரிது. ஆனால்

இறைவனிடத்து(மறக்கருணைகாட்டியதாக)வெகுளி தோன்றியதாகச் "சிரமொன் றறத்தன் திருப்புருவ நெரித்தருளி'' என்றும், "வளைந்தது வில்லு விளைந் ததுபூசல் உளைந்தன முப்புரம்'' என்றும் பல இடங் களில் வெகுளிச்சுவையின் குறிப்பும் விறலும் பேசப்படுகின்றன.

உவகைச்சுவை செல்வம் அறிவு முதலிய நான் கினையும் நிலைக்களனாகக்கொண்டது என்பது இலக் கணம். செல்வம் பொருட்செல்வமும், அருட்செல்வ முமென இரண்டாகும். அடிகள் அருட்செல்வம் பெற்ற மகிழ்ச்சியால், 'தேனையின்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்' 'சிவன்கருணைத் தேன் பருகி' 'அம்மையெனக்கருளியவாறு' 'தன்கழலே சேரும் வண்ணம் ஆதியெனக்கருளியவாறு' எனத் தன்னனுபவத்தைக் கூறுமுறையால் தன் மனத் தெழுந்த அனுபவத்திறத்தை - அதன்விளைவாகிய உவகைச்சுவையைக் காட்டுகின்றார்.

சமநிலை யல்லது சாந்தத்தை 'நன்றேசெய் வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' 'வினையேன் தொகுதிபொறுத் தென்னை யாண்டு கொள்''அவன்றன் குறிப்பேகுறிக்கொண்டுபோமா றமைமின் விடுமின் வெகுளி வேட்கை மிகவோர் காலமினியில்லை' என்பன போன்ற பல பகுதிகள் ஆன்மாவின் முனைப்பை யடக்கி அமைதியை வழங்குவன.

## கற்பனை :

கவிதைக் கிணற்றின் வற்றூ ஊற்று கற்பனை. இக்கற்பனைகள் அன்புகனிந்த உள்ளத்தில்தான் அன்புக்குரியவனை அநுபவிக்கும்போது எழும்பும். அங்ஙனமே அடிகளார் திருவுள்ளம் ஆண்டவன் திருமுடியிற் கிடக்கும் கபாலத்தையும், அரவையும் மதியையும்கண்டு ஒரு கற்பனைசெய்கிறது. எங்ஙனம்? கபாலப் பொந்துகளில் குடியிருக்கும் பாம்புகள் படத்தை விரித்துச் சுருக்கிக்கொள்கின்றன. இதைப்பார்த்த இளமதி அஞ்சிக் கங்கையிற்குதித்து ஒளிக்கின்றான் என்கின்றார். முடிக்கங்கையில் இருக்கும் பிறைமதி கங்கையாற்றில் ஓடும் மரக்கலம் போல இருக்கிறது என்கின்றார்கள். இங்ஙனம் கற்பனைச் சித்திரங்கள் பல இந்நூலில் மிளிர் கின்றன.

## அரும்பிரயோகங்கள் :

இவர்கள் வாக்கிற் சில அரிய பிரயோகங்கள் அழகுசெய்து நிற்கின்றன. அவை நரிப்பு, சிறவு, பிறவி, இறவி, வினைக்கேடன், குமண்டை, அனு குலம், பைதல், குதுகுதுப்பு, விதுவிதுப்பு, உவலைச் சமயங்கள், சவலை, பப்பு என்பனவாம்.

உலகவழக்கில் மெனக்கேடு, மெனக்கட்டவன் என்ற வழக்குக்காணப்படுகிறது. அதனை ஆராய்ந்த சில பத்திரிகைகளில்கூட மனக்கேடு என்பதே

இதன் உண்மை யுருவமென்றும், முன்னக்கேடு (உற்பாதம்) என்றும் திருத்தி எழுதின. நமது அடிகளார் அதன் உண்மையுருவம் வினைக்கேடு என்பர். அங்ஙனமே அருவெறுப்பா, அருவிருப்பா, அருவருப்பா என்பது ஆய்வில் இருப்பது ஒன்று. அதன் உருவத்தைஎதுகையில்வைத்தே அடிகளார் அருவருப்பு என முத்திரித்து மொழிகின்றார்கள்.

உலகவழக்கிலுள்ள சில பிரயோகங்கள் :

எட்டும் இரண்டும் தெரியாதவன் என்பன போன்றனவும் அதெந்து, குப்பாயம், அச்சன், அச்சோ முதலிய திசைச்சொற்களும் இதன்கண் இடம்பெற்றுள்ளன. இதனால் அடிகளார்யாத்திரை தமிழ்நாட்டளவில் அன்றிப் பிறநாடுகளிலும் இருந்தமை புலனாகும்.

அஞ்செழுத்தின் பெருமை :

திருவாசகமே அஞ்செழுத்துப் பெருமைகூற எழுந்தநூல் என்னத் தடையில்லை. ஏன்? தொடங்கும்போதே "நமச்சிவாய வாழ்க" எனத்தொடங்குகிறது. பின்னர் 'போற்றியோ நமச்சிவாய' எனப் பாராட்டுகிறது. பின்னர், 'எண்ணிலேன் திருநாமம் அஞ்செழுத்தும் என் ஏழைமையதனாலே' என்றும், 'இயல்பொடஞ்செழுத்தோதி' என்றும் இரங்குகிறது. அம்மட்டோ! 'நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்' என அநுபவமுதிர்ச்

சிக்கண் சூக்கும பஞ்சாட்சரத்தை வியக்கின்றது. இன்னும்மந்திரத்தை மறைவாகவும்சொல்லி நம்மை யுய்யவைக்கிறது. 'உடையாளுன்றன் நடுவிருக்கும்' என்ற திருப்பாடலில், சிவயசிவ என ஆன்ம எழுத்தை இருமருங்கும் சிவசக்திகள் பாதுகாத்து நிற்க இருக்கும் முக்திபஞ்சாக்கரம் மொழியப்படு கிறது. மற்றும் அதற்கு அடுத்தபாடலில் "முன் னின்றாண்டாய்" எனச் சிவமுதலாகி நிற்க, 'எனை' யென்பதால் ஆன்மாவாகிய யகரம் அதனை யடுத்து நிற்க, 'பின்னின்றேவல் செய்கின்றேன்' என நம இறுதியாக அனைத்தும் சேர்ந்து சிவயநம என ஐந்தெழுத்து நிற்றற்குப் பொருளும் கூறிக்காட்டு கின்றார்கள். இங்ஙனம் எடுத்த எடுத்த இடங்கள் தோறும் ஐந்தெழுத்தின்பொருளும் அமைதியுமே காட்டிச் செல்கின்றனர்.

## அடிகளார்காலத்துச் சமய நிலை :

பலவேறு சமயச்சூழல் அடிகளார் காலத்தும் இருந்தன என்பதைக் காட்டும் சான்றுகள் பல வுள்ளன. 'அறுவகைச்சமயத்து அறுவகையோர்க் கும், வீடுபேறாய் நின்ற விண்ணோர்பகுதி' "இருமுச் சமயத்தொருபேய்த்தேரினை" என்பன கொள்கை யால் வேறுபட்ட அறுவகைச் சமயங்கள் இருந்தன என்பதும், அவற்றில் சிக்கிய மக்கள் உண்மை காணமாட்டாது கானல் நீரைக் கருதிச்சென்ற மானினங்கள் போல மருண்டனர் என்பதுமாகிய

தன்மைகள் உணர்த்தப்படுகின்றன. போற்றித் திருவகவலில் நாத்திகர், விரதமே பரமாகக்கொண்ட வேதியர்களாகிய கன்மப்பிரமவாதிகள், மாயாவாதிகள், உலகாயதர் முதலியோரும், தோணோக் கத்தில் புத்தர் முதலியோரும் குறிக்கப் பெறுகின்றனர். இவற்றினுடைய அடை மொழியையும் உவமையையுங்கொண்டு அம்மதங்களின் இயல்புகள் விளங்குவதை யறியலாம். ஆனல் ஒன்று அடிகளார் புத்தர்களைக் குறிப்பதுபோலச் சமணரைக் குறிக்காமலிருப்பது கால ஆராய்ச்சி செய்வார்க்கு ஒருசிறிது துணையாகக்கூடும்.

அடிகளார்காலத்துச் சைவநிலை:

சைவத்திலும், மக்கள் உண்மையறிவிற் கருத்தின்றி, உடலைப்பற்றியதான சாதி முதலியவற்றில் அழுத்தமான பற்றுடையவர்களாயிருத்தலை கண்ட அடிகளார் மனம் நொந்து ஞானத்திற்கு இவை இடையூறுயிற்றே, மக்கள் செய்வனவிட்டுத் தவிர் வனவற்றைத் தாங்கி நிற்கின்றனரே எனத் திருவுள்ளத்தடைத்துச் 'சாதி குலம் பிறப்பு என்னுஞ்சுழிப்பட்டுத் தடுமாறி' என்று கூறுகின்றூர்கள்.

நூல்களும், அவற்றைப்பற்றிய வரலாறும்:

வேதமும் ஆகமும் பல இடங்களில் பேசப் பெறுகின்றன. "பண்டாய நான்மறை" என

வேதம் சிறப்பிக்கப்பெறுகின்றது. இதனைப்பற்றிய ஆராய்ச்சிகளும் மறுப்புரைகளும் பல வுள்ளன.

'மன்னுமாமலை மகேந்திரமதனிற் சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும்' எனவும், 'மாவேட்டாகிய ஆகமம் வாங்கியும், மற்றவைதம்மை மகேந்திரத்திருந்து, உற்ற வைம்முகங்களாற் பணித்தருளியும்' எனவும் வரும் பகுதிகள் ஆகமத்தை இறைவன் கைலைமலையிலிருந்து, ஈசானுகி ஐம்முகங்களால் அருளிச்செய்தனர் என்ற வரலாற்றை வகுப்பன. ஆனல் வேதம் நான்கு முகங்களிலிருந்தும், ஆகமம் உச்சிமுகமாகிய ஈசானத்தினின்றும் தோன்றியதாக வரலாறு கூறும்.

அடிகளார்காலத்துப் பருவநிலை:

மார்கழிமாதம்பின்பனிக்காலம். அம்மாதத்தில் மழைபெய்யாது. பெய்தாலும் கருப்போட்டம் குலையும். பனிமிகுதியால் தாமரை கருகிவாடும் என்பது அநுபவம். ஆனல் நமது அடிகளார் திருவெம்பாவையில் மகளிர் மார்கழிநீராடச் செல்லுங்காலையில் மழைபெய்தது; தாமரைகள் மலர்கின்றன என்கின்ருர். இக்கருத்தை "மழையே பொழியாய்" "பூத்திகழும் பொய்கை" "பங்கயப்பூம் புனல்பாய்ந்து" என்பவற்ருல் அறியலாம்.

பிறநூற்கருத்துக்கள்:

குறள்: மிகப்பழைய இலக்கியம். தோன்றிய காலத்தே தனிப்பெருமை படைத்ததும் இதுவே.

அதனது கருத்துக்களும் இந்நூலுள் இடம் பெற்றுள்ளன. "மற்றது வேண்டாமை வேண்ட வரும்" என்றகுறள் "வேண்டாதொன்றும் வேண்டாது" எனவும், "தனக்கு உவமையில்லாதான்" என்ற திருக்குறட்பகுதி "உவமனிலிறந்தன" "ஒப்புனக்கில்லா ஒருவன்" எனவும், "பற்றுக பற்றற்றான்" என்ற குறட்கருத்து "பற்றற நான் பற்றிநின்ற" "பற்றுங்கவையற்றீர் பற்றும் பற்றுங் கதுபற்றி" எனவும், "கற்றதன்பயன் வாலறிவன் நற்றாள் தொழலே" என்ற குறட்கருத்து, "கற்றுங் கவன் கழல்பேணினர்" எனவும் அமைந்துள்ளன. ஒரு பொருள் நுதலிய திருமுறைகளுக்குள் கருத்தொருமித்தல் இயற்கையே. ஆயினும் அக்கருத்துக்களேயன்றி அவை செறிந்த தொடர்மொழிகளும் அப்படி அப்படியே வந்துள்ளமை மிக வியக்கத்தக்கதொரு செய்தியாம்.

## உபநிஷதக்கருத்துக்கள்:

வேதத்தில் விதிமார்க்கம் ஒழிந்தவை ஞான மார்க்கங்கள். அவை உபநிஷத்துக்கள். இவை வேதபுருஷனுடைய உச்சியென்று உரைக்கப்பெறுவன. அவற்றின் கருத்துக்கள்பல திருவாசகத்துக் கருத்தோடு ஒத்துள்ளன. 'எல்லா ஐசுவரியங்களாலும் நிறைந்தவரும், எல்லாவற்றிற்கும் இறைவரும் ஆகிய சிவபெருமான் இதயாகாயத்தில் இலங்குகிறார்' என்று அதர்வசிகை கூறுகிறது. இந்தக்

கருத்து 'இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்கா தான்' என்றதோடு ஒத்துள்ளது. இதனையே சுவே தாசுவதரம் 'எஞ்ஞான்றும் ஆன்மாக்களுடைய சிந்தையில் வீற்றிருப்பவர்' என்கின்றது. இவ்வாறே 'ஏகன்' என்பதை 'ஏகோருத்ர: அத்துவிதீய:' எனவும், 'அநேகன்' என்பதை 'அநந்தரூபம்' எனவும், சிந்தையுணிற்றலை 'இருத் புண்டரீகம் விராஜம்' எனவும், 'சிறியவாகப்பெரியோன்' என் பதை 'அணோர் அணீயான் மகதோர் மஹீயான்' எனவும், 'இறைவன் ஓங்காரமாய் நின்றமெய்யான்' என்பதை 'ஓமித்யேததக்ஷரம்ஆதௌ பிரயுக்தம் த்யானம் த்யாயிதவ்யம்' எனவும், 'ஸ: ஓங்காரமேவ ஓங்கார:' எனவும் விளக்கப்பெற்றுள்ளன. இவை போன்ற இருநூற்றுக்கு மேற்பட்ட கருத்து ஒற்றுமைகள் ஆங்காங்குக் காணப்படுகின்றன.

காலத்தைப்பற்றிய குறிப்பு:

இன்றுவரையில் அடிகளார் காலம் ஆராய்ச்சிப் புலவர்களுக்கு அறிவுவிருந்தாக வந்துகொண்டிருக் கிறது. அடிகளார் அடைந்த முத்திநிலை முடிவில் லாததுபோல அடிகளார் கால ஆராய்ச்சியும் முடிவு பெறுதஒன்று. இங்ஙனம் ஆராய்ச்சியின் வளர்ச் சிக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்குந்தன்மையில் அடியேன் இதனை எழுதவில்லை; ஆயினும் அறிஞர் கள் கருத்து எவ்வாறு இருக்கின்றது என்று தொகுத்து நோக்குவதே இதன் நோக்கம்.

அடிகளார், கடைச்சங்க காலத்திற்குப்பின் பதினோராம் நூற்றாண்டுவரையில் இருந்தவராக ஆராய்ச்சியுலகம் எண்ணுகிறது.

ஆராய்ச்சியாளர்களுக்குள், திருமலைக் கொழுந்துப்பிள்ளையவர்கள் முதல் நூற்றாண்டாகக் கருதுகிறார். பொன்னம்பலம்பிள்ளையவர்கள் இரண்டு அல்லது மூன்றாம்நூற்றாண்டாகக் கருதுகின்றார். மாணிக்கவாசகர் காலமும் ஆராய்ச்சியும் கண்ட சிவத்திரு மறைமலையடிகளார் மூன்றாம் நூற்றாண்டு என முடிவுகட்டுகின்றார். வில்சன்வுட் என்பார் ஏழாம் நூற்றாண்டு என்றும், டாக்டர் போப் ஏழு எட்டு அல்லது ஒன்பதாம் நூற்றாண்டென்றும், மிஸ்டர் இன்னீஸ் ஒன்பதாம் நூற்றாண்டென்றும், சூலின் வின்சன் ஒன்பது அல்லது பத்து என்றும், மிஸ்டர் கௌடி எட்டிலிருந்து பத்துக்குள் என்றும், டாக்டர் ரோஸ்டு பதின்மூன்று அல்லது பதினாலாம் நூற்றாண்டென்றும், மதுரை மாவட்ட மான்யுவல் எழுதிய நெல்சன் ஒன்பதாம் நூற்றாண்டென்றும், கே. ஜி. சேஷய்யர் மூன்று அல்லது நான்காம் நூற்றாண்டென்றும் நான்காம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதல்ல என்றும், சீநிவாசபிள்ளையவர்கள் தமிழ் வரலாற்றில் மூவர்க்குப்பிந்தி ஒன்பதாம்நூற்றாண்டென்றும் கூறுகிறார்கள்.

சிவக்கவிமணி திரு. C. K. சுப்பிரமணியமுதலியாரவர்கள் மூவருக்கும் முந்தியவர்கள் என்பதற்குப் பல ஆதாரங்கள் காட்டுகிறார்கள். மூவர் திருமுறை

கட்கும் திருவாசகம் திருக்கோவையாருக்கும் உள்ள ஒற்றுமைகளை உணர்த்துகிறார்கள். திரு. சீநிவாச பிள்ளையவர்கள் தமது வரலாற்றில் முற்பட்டவர் என்பதற்கு ஒன்பது காரணங்களும், பிற்பட்டவர் என்பதற்கு ஒன்பது காரணங்களும்காட்டி இருவர் மாறுகோள் ஒருதலைதுணிவாக வரகுணபாண்டியன் காலத்தவர் என்ற காரணத்தால், பிற்பட்டவர் என்றே துணிவர். இவ்வாராய்ச்சிகள் அனைத்தும் 'தாம் கண்டனைத்து இவ்வுலகு' என்றாற்போலக் கிடைத்த சாதனங்களையும், அவற்றைப்பற்றிய எண்ண விளைவுகளையுமே உதவியாகக்கொண்டன. சாதனங்கள் இன்னும் தோன்றுமேல் சாத்தியங் களும் மாறுபடலாம்.

பின்னென்பார் கூறுங் காரணங்கள்:

1 அப்பர் சம்பந்தர் சுந்தரர் மாணிக்கவாசகர் என்ற முறைவைப்பும் - திருமுறை முறைவைப்பும். 2 சுந்தரர் திருத்தொண்டத்தொகையில் கூறாமை. 3 பொன்னம்பலம் எனவழங்குவது. 4 வரகுணனைக் குறித்தது (862-3). 5 ஏகான்மவாத மாயாவாதங் களைக் கண்டிப்பது. 6 ஆகமவழக்கு. 7 பாவினங் களைப் பயில்வது. 8 சதகம் முதலிய பிரபந்த வகையிற்பாடியது. 9 திருவிசைப்பா ஆசிரியர்கள் வாதவூரரைக்குறியாமை. 10 10ம் நூற்றாண்டுக்கு முந்திய உரைநூல்களிற் காட்டப்பெறாமை என்பன. இவற்றைச் சிறிது ஆராய்வோம்.

முறைவைப்பு:- சமயநோக்குடையவர்கள் சமய ஒழுக்கங்களைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனவே முறைப்படுத்தி வழங்குவர். சரியையில் நின்று முத்திபெற்றவர்கள் அப்பரடிகள். கிரியையில் நின்றார் ஞானசம்பந்தர். யோகத்தில் நின்றார் சுந்தரர். ஞானத்தில் நின்றவர் மணிவாசகர். இந் நிலைகள் முறையே தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என வழங்கப் பெறும். இந்நிலைகளை உளங்கொண்ட சைவ சமயிகள் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்க வாசகர் என்னத் தலைப்பட்டார்கள். கால ஆராய்ச்சியில் முடிவுகட்டி இம்முறையமைத்தார்கள் என்பது ஒருபோதும் பொருந்தாது. அங்ஙனமே திருமுறை முறைவைப்பிலும் நம்பியாண்டார் நம்பிகள் சமயநெறியுணர்ந்த சைவராகையால் மூவர் முதலிகள் திருமுறையைக் கோத்துப் பின் சன்மார்க்க நெறிபற்றிய ஞானத்திருமுறையாகிய இதனை எட்டாந் திருமுறையாக்கினர் என்பது மிகப் பொருந்துவதாம்,

சுந்தரர் திருத்தொண்டத்தொகையிற் கூறுமை:- திருவாரூரில் தேவாசிரய மண்டபத்துக் கூடியிருந்த அடியார் பெருமக்களுக்கு ஆளாவதென்றுளோ? என்று சுந்தரர் பூங்கோயிலில் நுழைந்தாராகத் தியாகேசர் 'தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்' என அடியெடுத்துக்கொடுத்தார் என்று வரலாறு கூறுகிறது. இதனாற் சரியையாதி முதன்

மூன்று நெறியினின்ற அடியார்களையே தொகுத்துணர்த்துவது திருத்தொண்டத்தொகை என்பது வெளிப்படை. ஆதலால் சன்மார்க்கராகிய அடிகள் முந்தியவராக இருந்தும் விடுத்திருக்கலாம் என்று எண்ணுவதால் தவறு என்னே?

**பொன்னம்பலம் என வழக்குவது:—** கூத்தப்பெருமான் நடமாடிய மன்றம் பொன்வேயப் பெற்றது இரணியவர்மன் காலத்திலேயாதலின் இவர் அவ்வரசனுக்குப்பிந்தியவராதல் தெளிவு என்பர். இரணியவர்மன் கி.பி.436 முதல் 458வரை அரசாண்டவன் என்பதை எமது சிதம்பரம் என்ற நூலிற் காணலாம், இதனையே உறுதியாகக் கொண்டாலும் "பொன்னம்பலம்" எனப் பிரயோகித்தமையால் அடிகளார் 6-ம் நூற்றூண்டினராக அல்லது 5-ம் நூற்றூண்டினராக இருக்கலாமேயன்றி மூவர்க்கும் பிந்தக் காரணமில்லை. அல்லாமலும் பொன் வேய்தல் என்ற வழக்காறு பல அரசர்களாற் பலகாலங்களிற் செய்யப்பெற்றுள்ளது. உதாரணமாகப் பராந்தகன் I(கி.பி.907, 944) பொன்வேய்ந்தமையும், குலோத்துங்கன் I (கி. பி. 1070, 1120) பொன்வேய்ந்தமையும் கல்வெட்டுக்களிற் குறிக்கப்படுகின்றன. ஆதலால் இரணியவர்மன் பொன் வேய்ந்தான் என்பதற்கு இருந்ததைப் புதுக்கியதாகப் பொருள்கொள்ளலாம். இது மூவர்க்கு முந்தியவர் என்பதற்குத் துணை செய்யாவிட்டாலும் பிந்தியவர் என்பதற்குச் சான்றாகாது.

**வரகுணனைக்குறித்திருப்பது:-** திருக்கோவையாரில் வெளிப்படையாகக் குறித்திருப்பினும் திருவாசகத்துள் "நரகொடு சொர்க்கம் நானிலம்புகாமல் பரகதி பாண்டியர்க்கருளினை" என்றே குறிப்பிடுகிறார். புராண ஆதாரங்களை வைத்துக்கொண்டும் வடமொழிப் பேராயிருப்பதைக்கொண்டும் இரண்டு வரகுணர்களுக்கு முந்தியதாக ஒரு வரகுணர் இல்லையென்று சாதிப்பதும், இருந்தால் திருத்தொண்டத்தொகையில் இடம்பெற்றிருப்பான் என்று காரணங் காட்டுவதும் ஆராய்தற்குரியன. சிலர் கூறுவதைப் போல ஞானசம்பந்தர் மாணிக்கவாசகர்க்கு முந்தியவராய் இருப்பின் மதியமைச்சராய் மதுரையையாண்ட மணிவாசகர், சமணரை ஓட்டிச் சைவம் காத்த தனிப்பெரும் குழந்தையை மறந்திருப்பாரா? திருவாசகத்தில் இடம் பெற்ற அடியார்கள் கண்ணப்பரும் சண்டேசுரருந்தானே! என்பதைச் சிறிது உள்ளங்கொண்டால் உண்மை விளங்காமற் போகாது.

**ஏகான்மவாத மாயாவாத மதங்களைக் கண்டித்தல்:-** இம் மதங்களைக் கண்டிப்பதால் இவர் ஒன்பதாம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டவர் என்றும், கி. பி. ஒன்பதாம்நூற்றாண்டிலிருந்த சங்கரர் தமிழ்நாட்டில் அம்மதத்தைப்பரப்பினார்என்றும்அதனால் அடிகளார் பிற்பட்டவர் என்றும் கூறுகிறார்கள். அத்வைத மதங்களாகிய இவையிரண்டும் சங்கரர்க்கு முன்பும் அருகித்தமிழ்நாட்டில் வழங்கியதுண்டு.

பாணினி முனிவருக்குச் சமகாலத்தவராய் இருந்த இலக்கண ஆசிரியராகிய வருஷரின் தம்பி உபவருஷர் அத்வைத சித்தாந்தத்திற்கு ஆசிரியரா யிருந்தார் என்று வரலாறு கூறும். இவற்றால் சங்கரர்க்குமுன்பே தமிழ் நாட்டில் ஏகான்மவாதம் பரவியிருந்தது. இதனையே பிரச்சன்னபௌத்தம் என்ற மரியாதைப் பெயரினால் வழங்கிவந்தனர். அடிகளாரால் கண்டிக்கப்பட்ட பௌத்தமும் ஏகான்மவாதமும் பேசப்பெறுவதால் அடிகளார் காலத்தாற் பிற்பட்டவராகக் கட்டாயமில்லை. சம்பந்தர் காலத்துப் புத்தமதம் தேய்ந்தமையும், சமணம் பெருகிவந்தமையும் அவர்கள் கூறுவதால் அறியலாம்.

'சிவமாக்கி யெனையாண்ட' 'சித்தஞ் சிவமாக்கி' என்ற கூற்றுக்கள் தேவாரத்தில் இல்லை, அதனாலே இவர் பிற்பட்டவர், என்பதும் பெரிதும் ஆராய் தற்குரியது. சிவாநுபவத்தில் அழுந்திய ஆன்மா சிவமேயாய் இருத்தலை ஞானசாஸ்திரங்கள் அறிவிக் கின்றன. இது ஞானமார்க்க அநுபவம். இதனால் இவர் பிற்பட்டவராகமுடியாது.

ஆகமம்:- ஆகமத்தோற்றம் இந் நூலுள் அறிவிக்கப்படுதலால் மூவருக்கும் இவர் பிந்தியவர் என்பதும் ஆராய்தற்குரியதே. ஆகமம் என்ற வழக்காறு தேவாரங்களிலும் பயின்றுவந்துள்ளன. காலத்தால் மிகமுற்பட்டவராகிய திருமூலர் இருபத் தெட்டு என்று தொகையும் அறிவிக்கிறார்.

**பாவினங்களைப்பற்றி:-** விருத்தம் முதலிய பாவினங்களைச் சீவகசிந்தாமணி உரையில் கொச்சக ஒருபோகு என்று எடுத்துக்காட்டிய நச்சினார்க்கினியரும் துணையாக இருக்கின்றார். ஆதலால் விருத்தங்களும் துறைகளும் ஒருபோகு ஆகவும் ஒருபோகு விருத்தங்களாகவும் ஆயிருக்கலாமல்லவா? சதகம் முதலிய பெயர்கள் சொல்தொடர் நிலைச் செய்யுளுக்கு அளவாற்பெற்ற பெயர். இது அமைதி நோக்கிப் பிற்காலத்தவர்களாலும் இடப்பட்ட பெயர் ஆகலாம்.

திருவிசைப்பா ஆசிரியர்கள் இவர்களைப்பற்றிக் கூறவேண்டிய நியதிதான் என்னை? கூறுமையாற் பிற்பட்டவர் என்பது பொருந்தாது என்பதும் காரணமும் முன்னரே விளக்கப்பெற்றன. ஆதலால் இவர்கள் மூவர்க்கும் முந்தியவர் என்பதில் துணிவு பிறக்கக் கூடும். மூவர் திருமுறைக்கும் இதற்கும் கருத்தொற்றுமையே யல்லாமல் சொற்றொடர் ஒற்றுமைகளும்கூடப் பல இடங்களிற் காணப்படுகின்றன.

ஆகவே சைவப்பேரறிஞர் C. K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் கண்ட முடிவின்பின் இதனை ஆராய்தல் மிகையாகும்.

திரு. சுப்பிரமணியபிள்ளையவர்கள் "புத்தமதத்திலிருந்து வேதுல்ய மதமாகிய சைவத்திற்குச் சிலர் வந்ததாக மகாவம்சம் என்னும் புத்தநூல் குறிக்

கிறதென்றும், அக்காலமும் கி. பி. 302 முதல் 315 வரை என்றும் குறிப்பிடுகிறார்கள். அது மணிவாசகர் வாதில்வென்றபுத்தர்கள் சைவமானதைக் காட்டுவது. மேலும் மூன்றாம் நூற்றாண்டில் மலையாளக் கரைக்குவந்த சிரியகிறிஸ்தவபாதிரிமார்கள், மாணிக்கவாசகரைப்பற்றித் தமது மதக் குருக்களுக்கு எழுதியுள்ள கோட்டயக்கோயிற் கடிதத்தாலும் மூன்றாம் நூற்றாண்டின் இறுதியே அடிகள் காலம் என்பது துணியப்படும் என்கின்றார்கள்.

முடிவுரை :

இந்நூல் உயிர்வளர்க்கும் மருந்தாக - அன்பு நெறிக்கு அருந்துணையாக இருப்பது என்பதனைத் தமிழுலகம் நன்கு அறியுமாயினும் இதன் அமைப்பைப்பற்றிப் பலவேறு ஆசிரியர்கள் காட்டிய பொருணுணுக்கங்களை அடியேன் சிற்றறிவு ஏற்றுக் கொண்டஅளவு ஒருவாறு இருபத்தைந்து தலைப்புக்களில் வைத்துத் தொகுக்கத் திருவருள்துணை செய்தது. இருந்து எண்ணிச் சிந்தையிற்றேக்கி இன்புறவேண்டிய நூலைப்பற்றி, ஒரு சில எழுதத் துணிந்த அடியேனது அறியாமையும் அறிவு வளர்ச்சிக்கு வழியாகலாமென்ற துணிவுடையேன்.



சிவமயம்

# திருவாசகம்

## நூற்சிறப்பு

வெண்பா

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே — எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூர் எங்கோன்
திருவா சகமென்னுந் தேன்.

---

எல்லை மருவா நெறி - வீட்டுநெறி. அல்லல் - வினைகளும் அவற்றிற்கேதுவாகிய அறியாமையும் ஆகிய துன்பம். ஆனந்தம் - பூவினிற் கந்தம் பொருந்தியவாறுபோல் சீவனுக்குள்ளே சிவமணம் பூத்தலால் விளைந்த ஆனந்தம். தளை - ஆன்மாவை அநாதியே சூழ்ந்துள்ள ஆணவமலக்கட்டு. ஆக்கியோன்பெயரும், நூற்பெயரும், பெருமையும் இதில் கூறப்படுதலின் சிறப்புப் பாயிரமாதல் காண்க. தேன் மலரில்தோன்றி, சுவைமிக்கு, பிணிநீக்கி, இதயவன்மையை அளிப்பது. அதுபோல் திருவாசகம் மணிவாசகர் திருவாயிற்பிறந்து சொல்லும் பொருளுமாகிய சுவையுடையதாய்ப் படிப்போர்க்குப் பிணிநீக்கிப் பேரின்பமளிப்பது ஆதலின் ஒப்பாயிற்று.

உ

சிவமயம்

# திருவாசகம்

## 1. சிவபுராணம்

[சிவனது அநாதி முறைமையான பழமை]

*திருப்பெருந்துறையில் அருளியது*

[திருப்பெருந்துறையில் குருந்தமரத்தடியில் குருவடிவாக எழுந்தருளி, அருளாரமுதத்தைவழங்கிய சிவபெருமான், மணிவாசகப்பெருந்தகையாருக்கு அருட்கண்பாலித்து, 'சிதம்பரத்தில் ஆன்மாக்களுய்ய அனவரதமும் ஆனந்ததாண்டவம் புரிந்தருளுகின்றோம்; ஆண்டு வருக' என்று ஆணைதந்து மறைந்தருளினார். வாதவூரடிகள், திடுக்கிட்டுக் குருவின் திருமேனிகாணும் இணையிலாப் போகத்தையும்இழந்தோமே! என்று இரங்கி, அன்பரொடு மருவுதலாகிய சிவநெறியில் தலைநிற்பாராய், அடியார்கள் கூட்டத்தை அடைந்தார். அங்கு அடியார்களும் தாமுமாகக் குருந்தமரத்தடியில் தெய்வப் பீடிகை ஒன்றுசெய்து அதில் குருநாதனுடைய திருவடித் தாமரைகளை அமைத்து வணங்கிவந்தார். ஒருநாள் இவர் உள்ளத்து 'இறைவன் அடியடைந்தார் அன்பிலாதாராயிருப்பினும், பாடிப்பரவுவார்க்கு இரங்கியருள்புரிவன்' என்ற எண்ணம் திருவருள் விளக்கத்தால் உதயமாயிற்று. உடனே

**மங்கலச்சொல் யாவற்றிற்கும் தலையாயதும், தான்மங்கலமாதலேயன்றித் தன்னைச் செபிப்பார்க்கும் தியானிப்பார்க்கும் பெருமங்கலத்தைத் தரவல்லதும், வேதவிருக்ஷத்து வித்தாயுள்ளதும், ஞானசம்பந்தப்பெருந்தகையாரால் 'வேதநான்கினும் மெய்ப்பொருளாவ' தென்றும், 'செந்தழல் ஓம்பிய செம்மை வேதியர்க்கு அந்தியுண் மந்திர' மென்றும், திருநாவுக்கரசுசுவாமிகளால் 'கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணையாவ' தென்றும், 'நாவினுக் கருங்கலம்' என்றும், 'நல்லக விளக்கு' என்றும் பாராட்டப்பெறுவதும், தூலம் சூக்குமம் அதிசூக்குமம் என்ற மூன்று முறைகளால் ஓதப்பெறுவதும் ஆகிய திருவைந்தெழுத்தை முதலாகவைத்து 'நமச்சிவாய வாழ்க' என இக் கலிவெண்பாவை அருளிச் செய்தார்.]**

**கலிவெண்பா**

*திருச்சிற்றம்பலம்*

1 *நமச்சிவாய* வாஅழ்க நாதன்றாள் வாழ்க*
*இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க*
*கோகழி யாண்ட குருமணிதன் தாள்வாழ்க*

1. *நமச்சிவாய - தூலபஞ்சாக்கரம். நாதன் - திருவைந்தெழுத்தின் ஒலியிலுள்ளதாகிய நாதவடிவினன்.*

3. *கோகழி - திருப்பெருந்துறை.*

***'சிவாயநம' என்பது, இடைவிடாமல் உச்சரிக்கும்போது மாலையாக நமசிவாய எனவருதல் இயல்பாம். இதன்பொருள் சிவனுக்கு வணக்கம் என்பது. இது தனிமுடிபாகநின்று வாழ்க என்பதனோடு இயையாது, இங்ஙனம் வணங்கும் ஆன்மாக்கள் வாழ்க என எழுவாய்வருவித்து முடிக்க இரண்டு வாக்கியமாகும் என்பாரும் உளர்.**

ஆகம மாகிநின் றண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன் கழல்வெல்க
ஈசனடி போற்றி எந்தை யடிபோற்றி
தேசனடி போற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கும் மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
ஆராத இன்பம் அருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையுள் நின்ற அதனால்
அவனரு ளாலே அவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுரா ணந்தன்னை
முந்தை வினைமுழுதும் ஓய வுரைப்பனியான்

---

4. ஆகமம் - உயிர்களுக்கு மலநாசஞ்செய்து ஞானத்தைவிளக்குவது. அண்ணிப்பான் - அணுகி அருள்வழங்குவான். 6. வேகம் கெடுத்து - மனவிருத்திகளின் வேகத்தை அடக்கி. 7. பிஞ்ஞகன் - தலைக்கோலமுடையவன். 8. புறத்தார் - புறச்சமயிகள். 10. சிரங்குவிவார் - சிரத்தின்மேல் கைகுவித்து வணங்குவார். 11. ஈசன் - அனைத்தையும் ஆள்பவன். 12. தேசன் - ஒளியுள்ளவன். 17. சிவனவன் - சமயநிலையுணர்ந்த பக்குவிகளுக்குச் சிவனெனச் சிறப்பாயும் உணராத அபக்குவிகளுக்கு அவன் எனச் சுட்டளவாயன்றி உணர்த்தலாகாத பொதுவாயும் இருக்கும் இயல்பினன் என்பதாம். 20. ஓய - நணுக.

கண்ணுதலான் தன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா எழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியாய்
எண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்
உய்யஎன் னுள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்கள்
ஐயா எனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியாய் இயமான னும்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
எஞ்ஞான மில்லாதேன் இன்பப் பெருமானே

---

21. கருணைக்கண் காட்ட என்றது நெற்றிக்கண் கருணைக் கண்ணாயிருத்தலை விளக்கியவாறு. 24. இறந்து - கடந்து. 26. பூடு - பூண்டு. 27. விருகம் - மிருகம். 30. தாவரசங்கமத்துள் - அசையாப்பொருள் அசையும் பொருளாகியவற்றுள். 33. ஓங்காரம் - ஒலிகட்கு முதலாய் எங்கும் நிறைந்திருக்கும் ஓசை. 36. வெய்யாய் தணியாய் இயமானனும் விமலா என்றது எட்டு உருவங்களுள் சூரியன் சந்திரன் இயமானன் என்ற மூன்றையும் கூறியவாறு.

அஞ்ஞானந் தன்னை யகல்விக்கும் நல்லறிவே
ஆக்கம் அளவிறுதி யில்லாய் அனைத்துலகும்
ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள்தருவாய்
போக்குவாய் என்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பின்
நாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுள் தேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கும் எங்கள் பெருமான்
நிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய இருளை
அறம்பாவம் என்னும் அருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரும் ஒன்பது வாயிற் குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தஅன் பாகிக் கசிந்துள் ளுருகும்
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி

---

41. அளவு - திதி அல்லது இருப்பு, 43. தொழும்பு - அடிமை. 44. நேரியாய் - பொருந்தியிருப்பவனே. 45. மாற்றம் - உரை. கழிய - அப்பாற்பட. 46. கன்னல் - சர்க்கரை. நெய் - தேன். 49. நிறங்கள் ஐந்துடையாய் என்றது ஐம்பூதங்களில் இறைவன் கலந்திருத்தலின் அவற்றுக்குரிய ஐந்து நிறங்களும் இறைவர்க்கும் உரியவாயின என்ற கருத்துப்பற்றி. 51. மாய இருள் - மாயை. 54. குடிலை - குடிசையை. 55. மலங்க - கலங்க. 56. விலங்கு - பிரபஞ்ச வாசனையிலிருந்து விலகிய.

நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த அடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனார் அமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கும் ஆரியனே
நேச அருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே அளவிலாப் பெம்மானே
ஓராதார் உள்ளத் தொளிக்கும் ஒளியானே
நீரா யுருக்கியென் ஆருயிராய் நின்றானே
இன்பமும் துன்பமும் இல்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமாய் அல்லையுமாம்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட எந்தை பெருமானே
கூர்த்தமெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே

---

64. பாரிக்கும் - வளர்க்கும். 67. ஆரா அமுது - உண்டு தெவிட்டாத அமுது. 68. ஓராதார் - ஆராயாதவர். 72. துன்னிருளே - செறிந்த இருளே; என்றது ஆணவ இருளில் தான்மறைக்கப்படாது அதனுள்ளும் நிறைந்திருத்தலின். 74. ஈர்த்து - இழுத்து. என்றது; வலிய ஆட்கொள்ளுதலைக் குறித்தது. 76. நோக்கரிய நோக்கு - சுட்டுணர்வால் அறியப்படாதபொருள். நுணுக்கரிய நுண்ணுணர்வே - நுட்பத்தில் நுட்பமாகிய அநுபவப்பொருளாயுள்ளவனே. 77. புணர்வு - அடைதல்.

காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே அத்தாமிக் காய்நின்ற
தோற்றச்சுடரொளியாய்ச்சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாம்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்
ஊற்றான வுண்ணா ரமுதே யுடையானே
வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
ஆற்றேனெம் மையா அரனேயோ என்றென்று
போற்றிப் புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளில் நட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
அல்லற் பிறவி அறுப்பானே ஓவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரும் ஏத்தப் பணிந்து.

திருச்சிற்றம்பலம்.

---

79. அத்தா - தலைவனே. 81. மாற்றம் ஆம் வையகத்தில் - பரிணமத்தை அடைகின்ற உலகத்தில். 82. தேற்றன் - தெளியன். 83. ஊற்றான - ஊற்றுப்போல் சுரக்கின்ற. 84. விடக்குடம்பு - ஊனாலாகிய உடல். 85. ஓ என்பது இரக்கக் குறிப்பு இடைச்சொல். 86. பொய் - பொய்யான சொல் செயல் முதலியன. 88. குரம்பை = வீடு; என்றது உடலை. கட்டழித்தல் - அடியோடு அழித்தல். 89. நள்ளிருள் - உயிர்கள் உணர்வற்று ஒன்றி இருக்கும் அறியாமைஇருள். சொல்லுவார், சிவபுரத்தின் செல்வர்; ஏத்தப்பணிந்து அடிக்கீழ் உள்ளார் எனக் கூட்டுக.

## 2. கீர்த்தித் திருவகவல்

[சிவனது திருவருட்புகழ்ச்சி முறைமை]

*திருத்தில்லையில் அருளியது*

[புலியூரையடைந்த அடிகளார் கண்டபத்தைக் கருத்தார உரைத்தபின் ஆனந்தக்கூத்தருடைய திருமேனியிலீடுபட்டு அநுபூதிமிக்கு அசைவற்றுநின்ருர். இந்நிலையறியாத மெய்காவலாளர்கள் 'கனகசபையைவிட்டுக் கீழேயிறங்கும்' எனக் கடிந்து கூறினர்கள். அவ்வுரை அடிகளார் செவிகளிற் புகுந்திலது. இவர் சிதானந்தப்பெருவெளியில் ஓங்காது குறையாது விளங்குகின்ற சிவானந்தப்பிரகாசத்தில்திளைத்துத் தம்பம்போல் நின்ருர். இதுகண்ட காவலர்கள் 'என்ன இவர்; போமென்றும் போகார்; உரையும் ஆடார்; பித்துக்கொண்டார் போலும்' என்று இரங்கிநின்றபோது சிவசிவ என்று இவர் வாயசைந்தது. கைகள் சிரமேற்குவிந்தன. குஞ்சிதபாதத்தை மீட்டும் தலையால் வணங்கித் திருப்புலீச்சரம் சார்ந்தார். அங்கிருந்து அனந்தேச்சரத்தைவணங்கிக்கொண்டு திருவீதி வலமாக வரும்போது கீர்த்தித்திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித்திருவகவல் ஆகிய இம்மூன்று திருவகவல்களையும் சொல்லிக்கொண்டேவந்தார்.

இதனுலேயே இன்றும் சைவத்தமிழுலகம் திருக்கோயில் வலம்வருகின்றகாலத்து வீண்பேச்சும் சழக்குரையும்பேசாது இவ்வகவல்களைப் பாராயணம் செய்துகொண்டே வரு

**கின்றது. கூட்டமாக வழிபடுபவர்களும் இதனைச் சொல்லிக்கொண்டே வலம்வருதல் மரபாம்.]**

## நீலமண்டில ஆசிரியப்பா

*திருச்சிற்றம்பலம்*

2 *தில்லை மூதூர் ஆடிய திருவடி*
*பல்லுயி ரெல்லாம் பயின்றன னாகி*
*எண்ணில் பல்குணம் எழில்பெற விளங்கி*
*மண்ணும் விண்ணும் வானோ ருலகும்*
*துன்னிய கல்வி தோற்றியும் அழித்தும்*
*என்னுடை யிருளை யேறத் துரந்தும்*
*அடியா ருள்ளத் தன்புமீ தூரக்*
*குடியாக் கொண்ட கொள்கையும் சிறப்பும்*
*மன்னு மாமலை மகேந்திர மதனிற்*
*சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்*
*கல்லா டத்துக் கலந்தினி தருளி*
*நல்லா ளோடு நயப்புற வெய்தியும்*
*பஞ்சப் பள்ளியிற் பான்மொழி தன்னொடும்*

---

2. பயின்றனன் - இடைவிடாது ஆடுவான். 3. பல்குணம் - தன்வயத்தனாதல் முதலிய எண்குணங்கள். 6. ஏற - முழுவதும். 9. மகேந்திரத்தில் ஆகமந் தோற்றுவித்தது கடலிலிருந்துமீட்ட ஆகமப்பொருளை மகேந்திர மலையிலிருந்து வெளிப்படுத்திய வரலாற்றை உட்கொண்டது. 11. கல்லாடம் - ஒரு சிவஸ்தலம். 12. நயப்புறவு - இன்பம். 13. பஞ்சப்பள்ளி - ஓர் ஊர்.

எஞ்சா தீண்டும் இன்னருள் விளைத்தும்
கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்
விராவு கொங்கை நற்றடம் படிந்தும்
கேவேட ராகிக் கெளிறது படுத்தும்
மாவேட் டாகிய ஆகமம் வாங்கியும்
மற்றவை தம்மை மகேந்தி ரத்திருந்
துற்றவைம் முகங்க ளாற்பணித் தருளியும்
நந்தம் பாடியின் நான்மறை யோனாய்
அந்தமில் ஆரிய னாயமர்ந் தருளியும்
வேறுவே றுருவும் வேறுவே றியற்கையும்
நூறுநூ றாயிரம் இயல்பின தாகி
ஏறுடை யீசனிப் புவனியை யுய்யக்
கூறுடை மங்கையும் தானும்வந் தருளிக்
குதிரையைக் கொண்டு குடநா டதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந் தருளியும்
வேலம் புத்தூர் விட்டே றருளிக்

---

14. ஈண்டும் - நிறைந்த. 15. கிராத வேடம் - அருச்சுனன் தவத்தை உலகினர்க்கு அறிவிக்க எடுத்த வேடம் என்று மகாபாரதம் கூறும். கிஞ்சுகம் - முருக்கம்பூ. 17. கேவேடர் - வலைஞர். கெளிறு - ஒருவகைமீன். கெளிறு படுத்தது இறைவன் சாபத்தால் இருமீனான நந்திதேவரை மீட்டது. 18. மாவேட்டாகிய - பெரிய விருப்பத்தைச் செய்வதாகிய. 20. ஐம்முகங்கள் - ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்யோஜாதம் என்பன. 21. நந்தம் பாடி - ஓர் ஊர். 22. ஆரியன் - மேலோன். 25. ஏறு - இடபம். 28. சாத்து - வர்த்தகக் கூட்டம். 29. விட்டேறு - வேற்படை இது உக்கிரகுமார பாண்டியனுக்கு வேல்கொடுத்த வரலாற்றை உணர்த்துவது.

கோலம் பொலிவு காட்டிய கொள்கையும்
தர்ப்பண மதனிற் சாந்தம் புத்தூர்
விற்பொரு வேடற் கீந்த விளைவும்
மொக்கணி யருளிய முழுத்தழல் மேனி
சொக்க தாகக் காட்டிய தொன்மையும்
அரியொடு பிரமற் களவறி யொண்ணன்
நரியைக் குதிரை யாக்கிய நன்மையும்
ஆண்டுகொண் டருள அழகுறு திருவடி
பாண்டி யன்றனக் குப்பரி மாவிற்
றீண்டு கனகம் இசையப் பெறாஅ
தாண்டான் எங்கோன் அருள்வழி யிருப்பத்
தூண்டு சோதி தோற்றிய தொன்மையும்

---

31. தர்ப்பணம் - கண்ணாடி. வேடனொருவனுக்கு அவன் வேண்டிய வாள் படை முதலியவற்றைக் கண்ணாடியின் வாயிலாக அளிப்பித்தது. 33. மொக்கணி - கொள்ளுப்பை. இறைவழி பாட்டின் பின்னரே உணவு அருந்தும் நியமம்பூண்ட ஒரு வணிக அன்பரைப் பரிகசித்தற் பொருட்டு அவாது மைத்துனர் கொள்ளுப்பையில் மணலை நிரப்பி, இலிங்கம்போல அமைத்து, மாலை முதலியன சாத்தி, அவ் அன்பரை வழிபடச்செய்து, பின் உண்மையுரைத்து நகைத்து, அவர்முன்பேயே அக்கொள்ளுப்பையை அசைத்தார். அது பாதளம்வரையில் ஊடுருவிச் சிவலிங்கமாகவே ஆகிவிட்டது. அதுமுதல் பெருமானும் மொக்கணீசர் எனப்பெயர் பெற்றார். (கொங்குமண்டலசதகம் பா 24.) 34. சொக்கு-பேரழகு. 38. பரிமா விற்று ஈண்டு கனகம் - குதிரை விற்றதால் வந்த பெரும்பொன். 40. இருப்ப-யானிருக்க. எங்கோன் பாண்டிய னெனக்கொண்டு ஆண்டான் அருள்வழி அவன் இருப்ப எனினும் ஆம். 41. தூண்டுசோதி - குதிரைகளைத் தூண்டிய ஒளிவடிவு.

அந்தண னாகி யாண்டுகொண் டருளி
இந்திர ஞாலங் காட்டிய இயல்பும்
மதுரைப் பெருநன் மாநக ரிருந்து
குதிரைச் சேவக னாகிய கொள்கையும்
ஆங்கது தன்னில் அடியவட் காகப்
பாங்காய் மண்சுமந் தருளிய பரிசும்
உத்தர கோச மங்கையு ளிருந்து
வித்தக வேடங் காட்டிய இயல்பும்
பூவண மதனிற் பொலிந்திருந் தருளித்
தூவண மேனி காட்டிய தொன்மையும்
வாத வூரினில் வந்தினி தருளிப்
பாதச் சிலம்பொலி காட்டிய பண்பும்

---

43. இந்திரஞாலம் - இந்திரஜாலம் என்பதன் திரிபு. இறைவன் தன்னை ஆட்கொண்டது பெரும் மாயமாகத் தோன்றியதாகலின் இவ்வாறு கூறினர். 46. அடியவள் - வந்தி. வந்தி தந்த பிட்டுக்காக மண்சுமந்த வரலாற்றை உள்ளடக்கியது. 47. பாங்கு - உரிமை. குறிப்புமொழியாகக்கொண்டு நன்றுயெனவுமாம். 49. வித்தக வேடம் - ஞானத்திருவுரு. உத்தரகோசமங்கையில் தவஞ்செய்த அறுபத்துநாலு முனிவர் விருப்பப்படி, கண்ணுதலும் கண்டக் கறையுமுடைய தன் திருவுருவைக்காட்டி ஞானோபதேசஞ் செய்த வரலாற்றை உணர்த்தும். 50, 51. திருப்பூவணத்தில் பொன்னனையாளுக்காகச் சித்தவேடங்கொண்டு அவள்வீட்டு இரும்பையெல்லாம் பொன்னாக்கிப் பொன் திருவுருசமைக்கத் துணைபுரிந்த வரலாறு அறிவிக்கப்படுகிறது. 52, 53. வாதவூரில் குருவாக எழுந்தருளித் தமக்குப் பாநாத உபதேசஞ்செய்த வரலாற்றை அறிவிக்கிறது. குதிரையை எதிர்நோக்கிய வாதவூரடிகட்கு இறைவன் சிலம்பொலி காட்டித் தம் வருகையை அறிவித்தாரென நம்பி திருவிளையாடல் தெரிவிக்கும்.

திருவார் பெருந்துறைச் செல்வ னாகிக்
கருவார் சோதியிற் கரந்த கள்ளமும்
பூவல மதனிற் பொலிந்தினி தருளிப்
பாவ நாச மாக்கிய பரிசும்
தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்
விருந்தின னாகி வெண்கா டதனிற்
குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்
பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளிய வதுவும்
வேடுவ னாகி வேண்டுருக் கொண்டு
காடது தன்னிற் கரந்த கள்ளமும்

---

54, 55. இது அடிகட்கு அருள்வழங்கியபின் இறைவன் பேரொளியில் மறைந்தமையை அறிவிக்கிறது. கருவார்சோதி - எல்லாப்பொருளுக்கும் முதன்மையான பேரொளி. 58, 59. பாண்டியன் தன்தம்பியோடு பொருதகாலத்துப் படைகள் நாவறண்டுதளர இறைவன் நறுமணத் தண்ணீர்ப் பந்தர்வைத்துக் காப்பாற்றினார் என்பது வரலாறு. 62, 63. இறைவன், சாபத்தால் பட்டமங்கையில் ஆலமரத்தினடியில் கற்களாகக்கிடந்த இயக்கமாதர்கள் அறுவரையும் எழுப்பி அட்டமாசித்தி அறிவுறுத்தினார். அவை அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம் என்பன. 64, 65. செருக்குற்ற சோழன் பாண்டியநாட்டிற் படையெடுத்துவர, பெருமான் வேடுவனாகிச் சோழனைத் தன்னுடன் தொடர்ந்துவரும்படிச்செய்து மடுவில் மறைந்து அவனையும் வீழ்த்தினார் என்பது வரலாறு.

மெய்க்காட் டிட்டு வேண்டுருக் கொண்டு
தக்கா னொருவ னாகிய தன்மையும்
ஓரி யூரின் உகந்தினி தருளிப்
பாரிரும் பாலக னாகிய பரிசும்
பாண்டூர் தன்னில் ஈண்ட விருந்தும்
தேவூர்த் தென்பாற் றிகழ்தரு தீவிற்
கோவார் கோலங் கொண்ட கொள்கையும்
தேனமர் சோலைத் திருவா ரூரின்
ஞானந் தன்னை நல்கிய நன்மையும்
இடைமரு ததனில் ஈண்ட இருந்து
படிமப் பாதம் வைத்தவப் பரிசும்
ஏகம் பத்தி னியல்பா யிருந்து
பாகம் பெண்ணோ டாயின பரிசும்
திருவாஞ் சியத்திற் சீர்பெற இருந்து

---

66, 67. சாமந்தன் என்னும் சிற்றரசனுக்காகப் பாண்டியன் ஆணைப்படி இறைவன், படைகளை அவனுக்கு மெய்க்காட்டிட்டு மகிழ்ச்சியை விளைவித்திருக்கும்போது பாண்டியநாட்டில் படையெடுத்துவந்த சேதிபர்கோன் சிங்கத்தாலிறந்தான் என்பதை ஒற்றர் சொன்னதைக்கேட்டுப் படைகளுக்கு உத்தரவளிக்க படை திடீரென மறைந்தது. பாண்டியனும் சாமந்தனும் இறைவன் திருவருட்டிறம் இது என எண்ணி வியந்தார்கள். மெய்க்காட்டிடுதல் - படைகளின் தன்மையை உள்ளவாறு காட்டுதல். 68. ஓரியூரில் வாழ்ந்த சிவத் துவிஜர் பெண்ணாகிய கௌரிக்காக இறைவன் விருத்த குமார பாலரான வரலாறு. பார் - பூமி. 72. கோ - தலைமை. 76. படிமப்பாதம் - தெய்வத்தன்மைவாய்ந்த திருவடி. 77. ஏகம்பம்-காஞ்சிபுரம். 78. பாகம்பெண்ணோடாயினது உமை இடப்பாகம் பெற்றது.

மருவார் குழலியொடு மகிழ்ந்த வண்ணமும்
சேவக னாகித் திண்சிலை யேந்திப்
பாவகம் பலபல காட்டிய பரிசும்
கடம்பூர் தன்னில் இடம்பெற இருந்தும்
ஈங்கோய் மலையில் எழிலது காட்டியும்
ஐயா றதனிற் சைவ னாகியும்
துருத்தி தன்னில் அருத்தியோ டிருந்தும்
திருப்பனை யூரில் விருப்ப னாகியும்
கழுமல மதனிற் காட்சி கொடுத்தும்
கழுக்குன் றதனில் வழுக்கா திருந்தும்
புறம்பய மதனில் அறம்பல அருளியும்
குற்றா லத்துக் குறியா யிருந்தும்
அந்தமில் பெருமை அழலுருக் கரந்து
சுந்தர வேடத் தொருமுத லுருவுகொண்
டிந்திர ஞாலம் போலவந் தருளி
எவ்வெவர் தன்மையுந் தன்வயிற் படுத்துத்
தானே யாகிய தயாபரன் எம்மிறை

---

80. மரு - மணம். 81. சேவகன் - வீரன். 82. பாவகம் - தோற்றம். 84. எழில் - அழகு. 85. ஐயாறப்பர் அர்ச்சகர்கள் இருபத்துநால்வரில் ஒருவர் காசிசெல்ல அவரது முறையையும் ஏனையோர் கைக்கொண்டனர். அவருடைய மைந்தரும் மனைவியும் வேண்டியபடி இறைவர் ஆதிசைவராக எழுந்தருளி அருச்சித்திருந்த போது உண்மையான அந்தணர்வர வழக்கிட்டு முன்னவர் மறைந்தார். 86. துருத்தி - குத்தாலம் என வழங்குவது. அருத்தி - அன்பு. 88. கழுமலம் - சீகாழி. 89. வழுக்காது - மறவாது. 91. குறி - அடையாளம்.

சந்திர தீபத்துச் சாத்திர னாகி
அந்தரத் திழிந்துவந் தழகமர் பாலையுள்
சுந்தரத் தன்மையொடு துதைந்திருந் தருளியும்
மந்திர மாமலை மகேந்திர வெற்பன்
அந்தமில் பெருமை யருளுடை யண்ணல்
எந்தமை யாண்ட பரிசது பகரின்
ஆற்ற லதுவுடை அழகமர் திருவுரு
நீற்றுக் கோடி நிமிர்ந்து காட்டியும்
ஊனந் தன்னை யொருங்குடன் அறுக்கும்
ஆனந் தம்மே யாறா அருளியும்
மாதிற் கூறுடை மாப்பெருங் கருணையன்
நாதப் பெரும்பறை நவின்று கறங்கவும்
அழுக்கடை யாமல் ஆண்டுகொண் டருள்பவன்
கழுக்கடை தன்னைக் கைக்கொண் டருளியும்
மூல மாகிய மும்மல மறுக்குந்
தூய மேனிச் சுடர்விடு சோதி
காதல னாகிக் கழுநீர் மாலை

---

97. சந்திரதீபம் - ஒருதலம். சாத்திரன் - கலைவல்லோன். 98. பாலை - கழிப்பாலை. 99. சுந்தரத்தன்மை - பேரழகனாயிருக்கும் பெற்றி. 104. நீற்றுக்கோடி - திருநீறாகிற கொடிமடிப்புக்கள். கொடி கோடியாயிற்று. 105. ஊனம் - கேடு. 107. மாது - உமை. 108. நாதப்பெரும்பறை - இறைவற்குரிய தசாங்கங்களுள் ஒன்றான பறை நாதம்என்பது. நவின்று-பலகாலும் பயின்று. 109. அழுக்கு-மலம். 110. கழுக்கடை - சூலம். ஆன்மாக்களை அநாதியே பந்தித்துள்ள மும்மலங்களைக் கழுவுதற்காக இறைவன் அறிவிச்சை செயல்களை முத்தலைவேலாகக்கொண்டுள்ளான் என்பது குறிப்பு.

ஏனுடைத் தாக எழில்பெற அணிந்தும்
அரியொடு பிரமற் களவறி யாதவன்
பரிமா வின்மிசைப் பயின்ற வண்ணமும்
மீண்டு வாரா வழியருள் புரிபவன்
பாண்டி நாடே பழம்பதி யாகவும்
பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்
உத்தர கோச மங்கையூ ராகவும்
ஆதி மூர்த்திகட் கருள்புரிந் தருளிய
தேவ தேவன் திருப்பெய ராகவும்
இருள்கடிந் தருளிய இன்ப வூர்தி
அருளிய பெருமை அருண்மலை யாகவும்
எப்பெருந் தன்மையும் எவ்வெவர் திறமும்
அப்பரி சதனல் ஆண்டுகொண் டருளி
நாயி னேனை நலமலி தில்லையுட்
கோல மார்தரு பொதுவினில் வருகென
ஏல என்னை யீங்கொழித் தருளி
அன்றுடன் சென்ற அருள்பெறும் அடியவர்
ஒன்ற வொன்ற வுடன்கலந் தருளியும்
எய்தவந் திலாதார் எரியிற் பாயவும்

---

114. எல் - பொருத்தம். 116. பரிமா - குதிரை. 117.மீண்டு வாராவழி - முத்திநெறி. 119. பரம்பரம் - மிக மேலானஇடம். 122. தேவதேவன் திருப்பெயராகவும்-மகாதேவன் எனும்பெயரைத் தமக்குச் சிறப்புத் திருநாமமாகக்கொண்டும். 123, 124. இறைவனுக்குப் பேரின்பமே ஊர்தி, அருளே மலை என்பதாம். 126. அப்பரிசதனல் ஆண்டுகொண்டு என்றது விஞ்ஞானகலர் முதலிய மூவகை ஆன்மாக்களை அவரவர் தகுதிப்படி ஆட்கொள்வதை அறிவிப்பது. 131. ஒன்ற ஒன்ற - இரண்டற.

மாலது வாகி மயக்க மெய்தியும்
பூதல மதனிற் புரண்டுவீழ்ந் தலறியும்
கால்விசைத் தோடிக் கடல்புக மண்டி
நாத நாத என்றழு தரற்றிப்
பாதம் எய்தினர் பாதம் எய்தவும்
பதஞ்சலிக் கருளிய பரமநா டகவென்
றிதஞ்சலிப் பெய்தநின் றேங்கின ரேங்கவும்
எழில்பெறும் இமயத் தியல்புடை யம்பொற்
பொலிதரு புலியூர்ப் பொதுவினில் நடநவில்
கனிதரு செவ்வா யுமையொடு காளிக்
கருளிய திருமுகத் தழகுறு சிறுநகை
இறைவன் ஈண்டிய அடியவ ரோடும்
பொலிதரு புலியூர்ப் புக்கினி தருளினன்
ஒலிதரு கைலை யுயர்கிழ வோனே.

திருச்சிற்றம்பலம்.

---

133. மால் - ஆசை. 135. விசைத்து - விரைந்து. 138. பரம நாடக - மேலான கூத்தனே. 139. இதம் சலிப்பெய்த - நெஞ்சு சலிக்க; இதயம் என்பது இதம் என ஆயிற்று. 142. தாரகனை அழித்தற்பொருட்டுத் தோன்றிய காளிதேவி அசுரனை அழித்த பின்பும் கோபம் தணியாமையால் உலகத்தை அழிக்கத்தொடங்கவே பெருமான் ஊர்த்துவதாண்டவஞ்செய்து காளியின் கோபத்தை அடக்கிய வரலாற்றை உட்கொண்டது. கனி - கொவ்வைக்கனி. 144. ஈண்டிய - திரண்ட. 146. கிழவன் - உரியவன்.

# 3. திருவண்டப்பகுதி

[சிவனது தூலசூக்குமத்தை வியந்தது]

* இதுவும் திருத்தில்லையில் அருளியதே. இவ்வகவல் முதற்குறிப்பால் பெயர்பெற்றது.

**இணைக்குறளாசிரியப்பா**

திருச்சிற்றம்பலம்

3 அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் துன்னணுப் புரையச்
சிறிய வாகப் பெரியோன் றெரியின்
வேதியன் றொகையொடு மாலவன் மிகுதியும்
தோற்றமும் சிறப்பும் ஈற்றொடு புணரிய
மாப்பே ரூழியும் நீக்கமும் நிலையும்
சூக்கமொடு தூலத்துச் சூறை மாருதத்
தெறியது வளியிற்

---

*வரலாறு இந்நூல் 10-ம் பக்கத்திற் காண்க.

1. பிறக்கம் - பெருக்கம். 3. எழில் - எழுச்சி. நின்ற எழில் என்பது நின்றெழிலெனப் பெயரெச்சத்தகரம் விகாரத்தாற்றொக்கது. 5. இல்நுழை கதிரின் துன் அணு - வீட்டின் கூரை ஓட்டில் நுழைகின்ற சூரியவொளியிற்பொருந்திய அணுக்கள். 7. வேதியன் - பிரமன். மிகுதி - செருக்கு. 8. சிறப்பு - நிலைபேறு. 10. சூக்கம் சூக்ஷுமம் என்பதன் திரிபு. சூறைமாருதம் - சுழல் காற்று.

கொட்கப் பெயர்க்குங் குழகன் முழுவதும்
படைப்போற் படைக்கும் பழையோன் படைத்தவை
காப்போற் காக்குங் கடவுள் காப்பவை
கரப்போன் கரப்பவை கருதாக்
கருத்துடைக் கடவுள் திருத்தகும்
அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி
கீடம் புரையுங் கிழவோன் நாடொறும்
அருக்கனிற் சோதி அமைத்தோன் திருத்தகு
மதியிற் றண்மை வைத்தோன் திண்டிறல்
தீயின் வெம்மை செய்தோன் பொய்தீர்
வானிற் கலப்பு வைத்தோன் மேதகு
காலின் ஊக்கங் கண்டோன் நிழல்திகழ்
நீரில் இன்சுவை நிகழ்ந்தோன் வெளிப்பட
மண்ணிற் றிண்மை வைத்தோன் என்றென்
றெனைப்பல கோடி யெனைப்பல பிறவும்

---

12. கொட்க - சுழல. குழகன் - இளையன். 15. கரப்பவை கருதா - தத்தங்காரணத்து ஒடுக்கி மறைக்கப்பட்டவைகளைக் கருதாத. 17. அறுவகைச்சமயத்து அறுவகையோர் - உலகாயதம், பௌத்தம், சாங்கியம், நையாயிகம், வைசேடிகம், மீமாம்சம் என்ற ஆறுவகைச் சமயக்கொள்கையால் அறுவகைப்பட்ட மக்களுக்கும். 18. விண்ணோர்பகுதி - தேவர்களின்பிரிவு. 19. கீடம் - புழு. 20. அருக்கன் - சூரியன். 21. மதி - சந்திரன். 23. கலப்பு - பொருள்கள் கலந்திருக்கும் தன்மை. 24. கால் - காற்று. ஊக்கம் - வேகம்.

அனைத்தனைத் தவ்வயின் அடைத்தோன் அஃதான்று
முன்னோன் காண்க முழுதோன் காண்க
தன்னே ரில்லோன் தானே காண்க
ஏனத் தொல்லெயி றணிந்தோன் காண்க
கானப் புலியுரி யரையோன் காண்க
நீற்றோன் காண்க நினைதொறு நினைதொறும்
ஆற்றேன் காண்க அந்தோ கெடுவேன்
இன்னிசை வீணையில் இசைந்தோன் காண்க
அன்னதொன் றவ்வயின் அறிந்தோன் காண்க
பரமன் காண்க பழையோன் காண்க
பிரமன்மால் காணாப் பெரியோன் காண்க
அற்புதன் காண்க அநேகன் காண்க
சொற்பதங் கடந்த தொல்லோன் காண்க
சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க
பத்தி வலையிற் படுவோன் காண்க
ஒருவன் என்னும் ஒருவன் காண்க
விரிபொழில் முழுதாய் விரிந்தோன் காண்க
அணுத்தருந் தன்மையி லையோன் காண்க
இணைப்பரும் பெருமையில் ஈசன் காண்க
அரியதில் அரிய அரியோன் காண்க
மருவியெப் பொருளும் வளர்ப்போன் காண்க

---

30. நேர் - ஒப்பு. 31. ஏனம் - ஆதிவராகமாகிய **பன்றி.** 32. கானப்புலி சாதியடை; தாருகாவனத்து முனிவர்கள் செய்த யாகத்திலெழுந்ததாகலின். 36. அன்னது ஒன்று - அவ்வியல்பினதாகிய வீணையின் அரிய இசை. 41. சேட்சி - தூரம். 44. பொழில் - உலகம். 45. ஐயோன் - நுணுக்கமானவன்.

நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க
மேலொடு கீழாய் விரிந்தோன் காண்க
அந்தமும் ஆதியும் அகன்றோன் காண்க
பந்தமும் வீடும் படைப்போன் காண்க
நிற்பதும் செல்வதும் ஆனோன் காண்க
கற்பமும் இறுதியும் கண்டோன் காண்க
யாவரும் பெறவுறும் ஈசன் காண்க
தேவரும் அறியாச் சிவனே காண்க
பெண்ஆண் அலியெனும் பெற்றியன் காண்க
கண்ணா லியானும் கண்டேன் காண்க
அருணனி சுரக்கும் அமுதே காண்க
கருணையின் பெருமை கண்டேன் காண்க
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க
சிவனென யானுந் தேறினன் காண்க
அவனெனை யாட்கொண் டருளினன் காண்க
குவளைக் கண்ணி கூறன் காண்க
அவளும் தானும் உடனே காண்க
பரமா னந்தப் பழங்கட லதுவே

---

49. நூலுணர்வு -கலைஞானமாகிய பாசஞானம் 58. காணுதல் கண்ணாலன்றி நிகழாதாயினும் கண்ணால் கண்டேன் என்றது. இவ்வாறு அரியனும் எளியனுமாய இறைவனைத் தான் நேரே கண்டருளின உண்மையை வற்புறுத்த. கண்டதனனுபவம் பின்தொடர்ந்து வரும் எழு அடிகளால் விளக்கியருளப்படுகின்றது. 66. இதுமுதல் முப்பது அடிகளால் முகிலாய்த்தோன்றி அருட்டுளிவழங்கி வானப் பேரியாறாக அருச்சனைவயலுள் பாய்ந்து அன்புவிதைத்த தொண்டவுழவர்கள் அநுபவிக்கத்தக்க அரும்பெறல் மேகமாக இறைவனை உருவகிக்கின்றார்.

கருமா முகிலிற் றோன்றித்
திருவார் பெருந்துறை வரையி லேறித்
திருத்தகு மின்னொளி திசைதிசை விரிய
ஐம்புலப் பந்தனை வாளர விரிய
வெந்துயர்க் கோடை மாத்தலை கரப்ப
நீடெழிற் றோன்றி வாளொளி மிளிர
எந்தம் பிறவியிற் கோப மிகுத்து
முரசெறிந்து மாப்பெருங் கருணையின் முழங்கிப்
பூப்புரை யஞ்சலி காந்தள் காட்ட
எஞ்சா இன்னருள் நுண்டுளி கொள்ளச்
செஞ்சுடர் வெள்ளந் திசைதிசை தெவிட்ட, வரையுறக்
கேதக் குட்டங் கையற வோங்கி
இருமுச் சமயத் தொருபேய்த் தேரினை
நீர்நசை தரவரு நெடுங்கண் மான்கணம்
தவப்பெரு வாயிடைப் பருகித் தளர்வொடும்
அவப்பெருந் தாப நீங்கா தசைந்தன
ஆயிடை வானப் பேரியாற் றகவயின்
பாய்ந்தெழுந் தின்பப் பெருஞ்சுழி கொழித்துச்
சுழித்தெம் பந்தமாக் கரைபொரு தலைத்திடித்
தூழூ ழோங்கிய நங்கள்
இருவினை மாமரம் வேர்ப றித்தெழுந்
துருவ அருணீர் ஓட்டா அருவரைச்
சந்தின் வான்சிறை கட்டி மட்டவிழ்

---

73. கோபம் - இந்திரகோபம்; சினம் என்னும் பொருள் தொனித்தல் காண்க. 78. கேதக்குட்டம் - துன்பமாகிய குளம். 79. பேய்த்தேர் - கானல்நீர். 88. ஓட்டா - ஓட்டி. 89. சிறை - அணை.

வெறிமலர்க் குளவாய் கோலி நிறையகில்
மாப்புகைக் கரைசேர் வண்டுடைக் குளத்தின்
மீக்கொள மேன்மேன் மகிழ்தலி னோக்கி
அருச்சனை வயலுள் அன்புவித் திட்டுத்
தொண்ட வுழவர் ஆரத் தந்த
அண்டத் தரும்பெறன் மேகன் வாழ்க
கரும்பணக் கச்சைக் கடவுள் வாழ்க
அருந்தவர்க் கருளும் ஆதி வாழ்க
அச்சந் தவிர்த்த சேவகன் வாழ்க
நிச்சலும் ஈர்த்தாட் கொள்வோன் வாழ்க
சூழிருந் துன்பந் துடைப்போன் வாழ்க
எய்தினர்க் காரமு தளிப்போன் வாழ்க
கூரிருட் கூத்தொடு குனிப்போன் வாழ்க
பேரமைத் தோளி காதலன் வாழ்க
ஏதிலர்க் கேதிலெம் இறைவன் வாழ்க
காதலர்க் கெய்ப்பினில் வைப்பு வாழ்க
நச்சர வாட்டிய நம்பன் போற்றி
பிச்செமை யேற்றிய பெரியோன் போற்றி
நீற்றொடு தோற்ற வல்லோன் போற்றி, நாற்றிசை

---

94. ஆர - நுகர. 96. கரும்பணக் கச்சை - கரியபடமுள்ள பாம்பாகிய அரைக்கச்சை. இதுமுதல் பத்துவரிகளால் இறைவன் அன்பர்களுக்கு அருளும் ஆற்றலை விளக்கி வாழ்த்துகின்றார். 99. நிச்சலும் - எப்போதும். 102. குனித்தல் - வளைந்தாடுதல். 103. அமை - மூங்கில். 104. ஏதிலர் - அயலார்; என்றது அன்பிலாரை. 105. எய்ப்பினில் வைப்பு - சேமநிதி. 106. இது முதல் பதினெட்டு அடிகளால் இறைவன் தமக்குப் பிச்சேற்றி அளித்த இன்ப அலையைப் போற்றாத யாக்கையை வெறுக்கின்றார்.

நடப்பன நடாஅய்க் கிடப்பன கிடாஅய்
நிற்பன நிறீஇச்
சொற்பதங் கடந்த தொல்லோன்
உள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅன்
கண்முதற் புலனாற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவி னாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந் தருளி
அழிதரும் ஆக்கை யொழியச் செய்த, ஒண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந் துள்ளங் களிப்போன் போற்றி
ஆற்றா இன்பம் அலர்ந்தலை செய்யப்
போற்றா ஆக்கையைப் பொறுத்தல் புகலேன்
மரகதக் குவாஅன் மாமணிப் பிறக்கம்
மின்னொளி கொண்ட பொன்னொளி திகழத்
திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும்
முறையுளி யொற்றி முயன்றவர்க் கொளித்தும்
ஒற்றுமை கொண்டு நோக்கு முள்ளத்
துற்றவர் வருந்த வுறைப்பவர்க் கொளித்தும்

---

120. அளிதரும் ஆக்கை - அன்பால் உருகும் உடல்.
124. இதுமுதல் இருபத்தொரு அடிகளில் இறைவன் மறைந்து நின்று அருள்செய்தலை விளக்கியருளுகின்றார். குவால் - குவியல்.
127. முறையுளி - வேதாகமங்களிற் சொல்லிய முறைப்படி.

மறைத்திற நோக்கி வருந்தினர்க் கொளித்தும்
இத்தந் திரத்திற் காண்டுமென் றிருந்தோர்க்
கத்தந் திரத்தின் அவ்வயின் ஒளித்தும்
முனிவற நோக்கி நனிவரக் கௌவி
ஆணெனத் தோன்றி அலியெனப் பெயர்ந்து
வாணுதற் பெண்ணென வொளித்துஞ் சேண்வயின்
ஐம்புலன் செலவிடுத் தருவரை தொறும்போய்த்
துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை
அருந்தவர் காட்சியுட் டிருந்த வொளித்தும்
ஒன்றுண் டில்லை யென்றறி வொளித்தும்
பண்டே பயிறொறும் இன்றே பயிறொறும்
ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்
ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலின்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் தொடர்மின் விடேன்மின்
பற்றுமின் என்றவர் பற்றுமுற் றொளித்தும்
தன்னே ரில்லோன் றானே யானதன்மை
என்னே ரனையோர் கேட்கவந் தியம்பி
அறைகூவி யாட்கொண் டருளி
மறையோர் கோலங் காட்டி யருளலும்

---

131. தந்திரம் - நூல். 133. முனிவு - வெறுப்பு, 137. துற்றவை - நுகர்ச்சிகள். 141. சோரன் - கள்ளன். 143. தளை - விலங்கு. 146 இது முதல் பதினேழுவரிகளில் இறைவனை அடைந்தார் பிறவிப்பிணி தீர்தலேயன்றிப் பேரின்பமுத்தியும் எய்துவர் என்பதனைத் தமக்கு அருள்செய்தமுறையில் வைத்துக்காட்டுகிறார்.

உளையா அன்பென் புருக வோலமிட்
டலைகடற் றிரையின் ஆர்த்தார்த் தோங்கித்
தலைதடு மாறா வீழ்ந்துபுரண் டலறிப்
பித்தரின் மயங்கி மத்தரின் மதித்து
நாட்டவர் மருளவும் கேட்டவர் வியப்பவும்
கடக்களி றேற்றாத் தடப்பெரு மதத்தின்
ஆற்றே னாக அவயவஞ் சுவைதரு
கோற்றேன் கொண்டு செய்தனன்
ஏற்றார் மூதூர் எழினகை யெரியின்
வீழ்வித் தாங்கன்
றருட்பெருந் தீயின் அடியோம் அடிக்குடில்
ஒருத்தரும் வழாமை யொடுக்கினன்
தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்
சொல்லுவ தறியேன் வாழி முறையோ
தரியேன் நாயேன் தானெனைச் செய்தது
தெரியேன் ஆவா செத்தேன் அடியேற்
கருளிய தறியேன் பருகியும் ஆரேன்
விழுங்கியும் ஒல்ல கில்லேன்
செழுந்தண் பாற்கடற் றிரைபுரை வித்
துவாக்கட னுள்ளுநீர் உள்ளகந் ததும்ப

---

150. உளையா - சலிப்பில்லாத. 153. மத்தர் - வெறிகொண்டவர். 155. ஏற்றா - பாகனை ஏற்றிக்கொள்ளாத. 157. கோற்றேன்-கொம்புத்தேன். 158. ஏற்றார்-பகைவர். 160. அடிக்குடில் - அடிமைச்சிறுமனை. 163. இதுமுதல் முடிய தாம் அழுந்திய பேரின்பத்தின் பெற்றியையும் அதன்விளைவையும் சொல்லமுடியாமையைச் சொல்லி இன்புறுகிறார்.

வாக்கிறந் தமுதம் மயிர்க்கால் தோறும்
தேக்கிடச் செய்தனன் கொடியேன் ஊன்றழை
குரம்பை தோறும் நாயுட லகத்தே
குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறும் ஏற்றினன் உருகுவ
துள்ளங் கொண்டோர் உருச்செய் தாங்கெனக்
கள்ளூ றாக்கை யமைத்தனன் ஒள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை
என்னையும் இருப்ப தாக்கினன் என்னிற்
கருணை வான்றேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மால் அறியாப் பெற்றி யோனே.

திருச்சிற்றம்பலம்.

---

**171.** தேக்கிட - நிறைய. ஊன்தழை குரம்பை - தசை தழைத்திருக்கின்ற உடல். **173.** குரம்பைகொண்டு - சிறுவீடு அமைத்துக்கொண்டு. **175.** எற்பு - எலும்பு. **178.** கன்னல் - கரும்பு. கனி - விளாங்கனி.

# 4. போற்றித் திருவகவல்

**[சகத்தின் உற்பத்தி]**

* *இதுவும் திருத்தில்லையில் அருளியதே.*

**நிலைமண்டில ஆசிரியப்பா**

*திருச்சிற்றம்பலம்*

4 நான்முகன் முதலா வானவர் தொழுதெழ
ஈரடி யாலே மூவுல களந்து
நாற்றிசை முனிவரும் ஐம்புலன் மலரப்
போற்றிசெய் கதிர்முடித் திருநெடு மாலன்
றடிமுடி யறியும் ஆதர வதனிற்
கடுமுரண் ஏனம் ஆகி முன்கலந்
தேழ்தலம் உருவ இடந்து பின்னெய்த்
தூழி முதல்வ சயசய என்று
வழுத்தியுங் காணா மலரடி யிணைகள்
வழுத்துதற் கெளிதாய் வார்கட லுலகினில்

---

* வரலாறு இந்நூல் 10-ம் பக்கத்தில் காண்க.

1. முதல் பத்துவரிகள் திருமாலாலறிய வொண்ணாத திருவடிகளைக் கடவுளரும் முனிவரும் தொழுதார்கள் என்று சொல்லுகின்றன. 2. மூவுலகு - விண்ணுலகு, மண்ணுலகு, வளியுலகு. 3. மலர - மகிழ்ச்சியால் விரியும்படி. 6 முரண் - மாறுபாடு. ஏனம் - பன்றி. 7. இடந்து - தோண்டி. எய்த்து - இளைத்து.

யானை முதலா எறும்பீ றாய
ஊனமில் யோனியின் உள்வினை பிழைத்தும்
மானுடப் பிறப்பினுள் மாதா வுதரத்
தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்தும்
ஒருமதித் தான்றியின் இருமையிற் பிழைத்தும்
இருமதி விளைவின் ஒருமையிற் பிழைத்தும்
மும்மதி தன்னுள் அம்மதம் பிழைத்தும்
ஈரிரு திங்களிற் பேரிருள் பிழைத்தும்
அஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்தும்
ஆறு திங்களின் ஊறலர் பிழைத்தும்
ஏழு திங்களிற் றாழ்புவி பிழைத்தும்
எட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்தும்
ஒன்பதில் வருதரு துன்பமும் பிழைத்தும்

---

11. இதுமுதல் நாற்பத்தொன்றாவது வரி முடிய பிறவியின் அருமையும், அதன்கண் நிகழும் ஊறுகளும் தொகுத்துக் கூறப் படுகின்றன. 14. செரு - போர். 15. தான்றி - தான்றிக்காய்; முதன்மாதக்கரு தான்றிக்காய் அளவு வடிவமானது. கருவளர்தற்குத் தடையான இரணடிலிருந்து தப்பிப் பிழைத்தலை இருமையிற் பிழைத் தென்றார். 16. விளைவின் ஒருமை - ஆண்கருவும் பெண்கருவும் ஒன்றுபட்டுத்திரண்டவழி உளதாகின்ற தடை. 17. அம்மதம்பிழைத் தல் - கருவில் மதநீர் அளவுக்குமீறிப் பெருகுவதால் உளதாகும் கேட்டில் தப்புதல். 18. பேர் இருள் - அங்ஙனம் பெருகிய மதநீர் கருத்தலாலுண்டாகிய இருள். 19. முஞ்சுதல் - இறத்தல். 20. ஊறு அலர் - தினவுமிகுதியா லுளதாகும் துன்பம்; வெளிப்பட இயலா மையால் வருந்துன்பம். 21. தாழ்புவி பிழைத்தும் - பூமியில் தசைத் திரளாய் பிறத்தலினின்று தப்பியும். 22. கட்டம் - துன்பம்.

தக்க தசமதி தாயொடு தான்படுந்
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்
ஆண்டுக டோறும் அடைந்தவக் காலை
ஈண்டியும் இருத்தியும் எனைப்பல பிழைத்தும்
காலை மலமொடு கடும்பகற் பசிநிசி
வேலை நித்திரை யாத்திரை பிழைத்தும்
கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுண் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்து முன்பணைத்
தெய்த்திடை வருந்த எழுந்து புடைபரந்
தீர்க்கிடை போகா இளமுலை மாதர்தம்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்
பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுள்
மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்
கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்
செல்வம் என்னும் அல்லலிற் பிழைத்தும்
நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்
புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்
தெய்வம் என்பதோர் சித்தமுண் டாகி
முனிவி லாததோர் பொருளது கருதலும்

---

24. தசமதி - பத்தாமாதம். 25. சாகரம் - கடல். 27. ஈண்டி - நெருக்கி. 28. நிசி - இரவு. 35. கூர்த்த - கூர்மையையுடைய. நயனக் கொள்ளை - கண்வீச்சால் விளையும்கேடு. 40. நல்குரவு - தரித்திரம். 42. இதுமுதல் பதினேழுவரிகளால் மதவாதியர் கொள்கைகள் கூறப்படுகின்றன. 43. முனிவு - வெறுப்பு.

ஆறு கோடி மாயா சத்திகள்
வேறு வேறுதம் மாயைகள் தொடங்கின
ஆத்த மானார் அயலவர் கூடி
நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்
சுற்றம் என்னுந் தொல்பசுக் குழாங்கள்
பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்
விரத மேபர மாகவே தியரும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்
சமய வாதிகள் தத்தம் மதங்களே
அமைவ தாக அரற்றி மலைந்தனர்
மிண்டிய மாயா வாதம் என்னும்
சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்
துலோகா யதனெனும் ஒண்டிறற் பாம்பின்
கலாபே தத்த கடுவிடம் எய்தி
அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்
தப்பா மேதாம் பிடித்தது சலியாத்
தழலது கண்ட மெழுகது போலத்
தொழுதுளம் உருகி யழுதுடல் கம்பித்(து)

---

44. ஆறுகோடி மாயாசத்திகள், 'மாமாயை மாயை வைந்தவம் வைகரி, ஓமாயை உள்ளொளி ஓராறு கோடியில்' என்னும் திருமந்திரத்தால் விளங்கும். 46. ஆத்தமானார் - ஆப்தர்கள் (விருப்பமானவர்கள்). 50. பரம் - மோக்ஷம். 51. சரதம் - உண்மை. 54. மிண்டிய - வலிய. 57. கலாபேதத்த கடுவிடம் - காமகலையின் பேதங்களாகிற கொடிய பாம்பு. 58. மாயை - வஞ்சனை. அதின் - அதனால். 59. இதுமுதல் இருபத்துமூன்றுவரிகளால் இறைவன் அன்பரைவளர்க்கின்ற முறையை வகுத்தருளுகின்றார். 61. கம்பித்து - நடுங்கி.

ஆடியும் அலறியும் பாடியும் பரவியும்
கொடிறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறா அன்பிற்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்
கதியது பரமா அதிசய மாகக்
கற்றா மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வம் கனவிலும் நினையா
தருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனும் ஆறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி உரோமஞ் சிலிர்ப்பக்

---

63. கொடிறு - குறடு. 67. அனுகுலமாய் - ஏற்ப; அனுகூலம் என்ற வட சொற்சிதைவு. 71. சதுர் - சாமர்த்தியம். அறிமால் - சிவஞானம் பெறவேண்டுமென்று முறுகி எழுந்த அவா. 72. பரமா அதிசயம் - மேலானவியப்பு. 73. கற்றா - கன்றோடுகூடிய பசு.

கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி
மெய்தரு வேதிய னாகி வினைகெடக்
கைதர வல்ல கடவுள் போற்றி
ஆடக மதுரை அரசே போற்றி
கூட லிலங்கு குருமணி போற்றி
தென்றில்லை மன்றினு ளாடி போற்றி
இன்றெனக் காரமு தானாய் போற்றி
மூவா நான்மறை முதல்வா போற்றி
சேவார் வெல்கொடிச் சிவனே போற்றி
மின்னா ருருவ விகிர்தா போற்றி
கன்னா ருரித்த கனியே போற்றி
காவாய் கனகக் குன்றே போற்றி
ஆவா என்றனக் கருளாய் போற்றி
படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி
இடரைக் களையும் எந்தாய் போற்றி
ஈச போற்றி இறைவ போற்றி

---

84. மொட்டித்து - குவித்து. மொட்டித்து மலர என முரண் அணி வந்தவாறு காண்க. 86. சாயா - கெடாத. 88. இதுமுதல் முடிவளவும் ஆட்கொண்ட இறைவனுக்கு வணக்கம் தெரிவிக்கின்றார்கள். மெய் - உண்மைப்பொருள். 89. கைதர - உதவ. 90. ஆடகம் - பொன். 93. ஆரமுது - உண்ணுதற்குரிய அரிய அமுதம். 94. மூவா - மூப்படையாத (ஒருபடித்தான). 95. சே - இடபம்.

தேசப் பளிங்கின் திரளே போற்றி
அரைசே போற்றி அமுதே போற்றி
விரைசேர் சரண விகிர்தா போற்றி
வேதி போற்றி விமலா போற்றி
ஆதி போற்றி அறிவே போற்றி
கதியே போற்றி கனியே போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
உடையாய் போற்றி உணர்வே போற்றி
கடையே னடிமை கண்டாய் போற்றி
ஐயா போற்றி அணுவே போற்றி
சைவா போற்றி தலைவா போற்றி
குறியே போற்றி குணமே போற்றி
நெறியே போற்றி நினைவே போற்றி
வானோர்க் கரிய மருந்தே போற்றி
ஏனோர்க் கெளிய இறைவா போற்றி
மூவேழ் சுற்ற முரணுறு நரகிடை
ஆழா மேயருள் அரசே போற்றி
தோழா போற்றி துணைவா போற்றி
வாழ்வே போற்றியென் வைப்பே போற்றி
முத்தா போற்றி முதல்வா போற்றி
அத்தா போற்றி அரனே போற்றி
உரையுணர் விறந்த வொருவ போற்றி

---

103. தேசம் - ஒளி. 105. விரை - மணம். விகிர்தன் - விளையாட்டுடையவன். 109. நம்பன் - குணபூரணன்; நம்பப்படத் தக்கவன் எனினுமாம். 118. மூவேழ்சுற்றம் - இருபத்தொரு தலைமுறைவரையிலுள்ள சுற்றத்தார்.

விரிகட லுலகின் விளைவே போற்றி
அருமையி லெளிய அழகே போற்றி
கருமுகி லாகிய கண்ணே போற்றி
மன்னிய திருவருண் மலையே போற்றி
என்னையு மொருவ னாக்கி யிருங்கழற்
சென்னியில் வைத்த சேவக போற்றி
தொழுதகை துன்பந் துடைப்பாய் போற்றி
அழிவிலா வானந்த வாரி போற்றி
அழிவது மாவதுங் கடந்தாய் போற்றி
முழுவது மிறந்த முதல்வா போற்றி
மானேர் நோக்கி மணாளா போற்றி
வானகத் தமரர் தாயே போற்றி
பாரிடை யைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடை மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி
அளிபவ ருள்ளத் தமுதே போற்றி
கனவிலுந் தேவர்க் கரியாய் போற்றி
நனவிலு நாயேற் கருளினை போற்றி

---

132. வாரி - கடல். 137. இது முதல் ஐந்துவரிகளால் ஐம்பெரும் பூதங்களில் இறைவன் நிறைந்திருக்கின்றான் என்பதைக் காட்டுகிறார், ஐந்து - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன. 138. நான்கு - நாற்றம் ஒழிந்த நான்கு. 139. மூன்று - ஒளி ஊறு ஓசை என்பன. 140. இரண்டு-ஊறும் ஓசையும். 141. ஒன்று- ஓசை. 142. அளிபவர் - கனிகின்ற மெய்யடியார்.

இடைமரு துறையும் எந்தாய் போற்றி
சடையிடைக் கங்கை தரித்தாய் போற்றி
ஆரூ ரமர்ந்த அரசே போற்றி
சீரார் திருவை யாறா போற்றி
அண்ணா மலையெம் அண்ணா போற்றி
கண்ணா ரமுதக் கடலே போற்றி
ஏகம் பத்துறை யெந்தாய் போற்றி
பாகம் பெண்ணுரு வானாய் போற்றி
பராய்த்துறை மேவிய பரனே போற்றி
சிராப்பள்ளி மேவிய சிவனே போற்றி
மற்றோர் பற்றிங் கறியேன் போற்றி
குற்றா லத்தெங் கூத்தா போற்றி
கோகழி மேவிய கோவே போற்றி
ஈங்கோய் மலையெம் எந்தாய் போற்றி
பாங்கார் பழனத் தழகா போற்றி
கடம்பூர் மேவிய விடங்கா போற்றி
அடைந்தவர்க் கருளும் அப்பா போற்றி
இத்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய அரசே போற்றி
தென்னா டுடைய சிவனே போற்றி

---

159. பழனம் - திருப்பழனம் என்னும் தலம். 160. விடங்கன் - உளிபடாது அமைந்தவன்; சுயம்புமூர்த்தி என்றவாறும். 162. இத்தி - ஓர்வகை மரம். இருமூவர் - இயக்கிமார் அறுவர். இவ்வரலாறு அட்டமாசித்தியருளிய பகுதியில் குறிக்கப்பட்டுள்ளது. 163. அத்திக்கருளியது மதுரையில் துர்வாசரால் சாபம்பெற்ற வெள்ளை யானைக்கு அருள்செய்தது.

எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி
ஏனக் குருளைக் கருளினை போற்றி
மானக் கயிலை மலையாய் போற்றி
அருளிட வேண்டும் அம்மான் போற்றி
இருள்கெட அருளும் இறைவா போற்றி
தளர்ந்தேன் அடியேன் தமியேன் போற்றி
களங்கொளக் கருத அருளாய் போற்றி
அஞ்சே லென்றிங் கருளாய் போற்றி
நஞ்சே யமுதா நயந்தாய் போற்றி
அத்தா போற்றி ஐயா போற்றி
நித்தா போற்றி நிமலா போற்றி
பத்தா போற்றி பவனே போற்றி
பெரியாய் போற்றி பிரானே போற்றி
அரியாய் போற்றி அமலா போற்றி
மறையோர் கோல நெறியே போற்றி
முறையோ தரியேன் முதல்வா போற்றி
உறவே போற்றி உயிரே போற்றி
சிறவே போற்றி சிவமே போற்றி
மஞ்சா போற்றி மணாளா போற்றி
பஞ்சே ரடியாள் பங்கா போற்றி

---

166. ஏனக்குருளைக்கு அருளுதலாவது பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்தருத்திய வரலாறுகும். 171. களம் - நிலைத்த இடம். 176. பவன் - ‘பவன் எனும் நாமம் பிடித்து’ என்புழிப்போல பவாய தேவாய என்னும் இறைமந்திரங்களுள் ஒன்று. 182. சிறவு - சிறப்பு. 183. மஞ்சன் - மைந்தன் என்றதன் மரூஉ; அழகன் எனினுமாம்.

அலந்தேன் நாயேன் அடியேன் போற்றி
இலங்கு சுடரெம் ஈசா போற்றி
கவைத்தலை மேவிய கண்ணே போற்றி
குவைப்பதி மலிந்த கோவே போற்றி
மலைநா டுடைய மன்னே போற்றி
கலையா ரரிகே சரியாய் போற்றி
திருக்கழுக் குன்றிற் செல்வா போற்றி
பொருப்பமர் பூவணத் தரனே போற்றி
அருவமும் உருவமும் ஆனாய் போற்றி
மருவிய கருணை மலையே போற்றி
துரியமும் இறந்த சுடரே போற்றி
தெரிவரி தாகிய தெளிவே போற்றி
தோளா முத்தச் சுடரே போற்றி
ஆளா னவர்கட் கன்பா போற்றி
ஆரா வமுதே அருளே போற்றி
பேரா யிரமுடைப் பெம்மான் போற்றி
தாளி யறுகின் தாராய் போற்றி
நீளொளி யாகிய நிருத்தா போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சிந்தனைக் கரிய சிவமே போற்றி
மந்திர மாமலை மேயாய் போற்றி

---

187. கவைத்தலை என்பது ஓர்ஊர். 188. குவைப்பதி - கூவம் என்னும் தலம். 190. கலையார் அரிகேசரி - ஆடையாக உடுத்திய சிங்கத்தோலையுடையவனே; அரிகேசரி என்பது ஓர் ஊர் என்பாரும் உளர். 197. தோளா - துளைக்கப்படாத. 201. தாளி - கூதாளம் என்னும் இலை.

எந்தமை யுய்யக் கொள்வாய் போற்றி
புலிமுலை புல்வாய்க் கருளினை போற்றி
அலைகடன் மீமிசை நடந்தாய் போற்றி
கருங்குரு விக்கன் றருளினை போற்றி
இரும்புலன் புலர இசைந்தனை போற்றி
படியுறப் பயின்ற பாவக போற்றி
அடியொடு நடுவீ றானாய் போற்றி
நரகொடு சுவர்க்க நானிலம் புகாமற்
பரகதி பாண்டியற் கருளினை போற்றி
ஒழிவற நிறைந்த வொருவ போற்றி
செழுமலர்ச் சிவபுரத் தரசே போற்றி
கழுநீர் மாலைக் கடவுள் போற்றி
தொழுவார் மையல் துணிப்பாய் போற்றி
பிழைப்பு வாய்ப்பொன் றறியா நாயேன்
குழைத்தசொன் மாலை கொண்டருள் போற்றி
புரம்பல எரித்த புராண போற்றி
பரம்பரஞ் சோதிப் பரனே போற்றி
போற்றி போற்றி புயங்கப் பெருமான்
போற்றி போற்றி புராண காரண
போற்றி போற்றி சயசய போற்றி.

திருச்சிற்றம்பலம்.

---

207. புல்வாய் - மான். 211. படி - பூமி. 223. புயங்கம் - பாம்பு.

சிவமயம்

# 5. திருச்சதகம்

[பத்தி வைராக்கிய விசித்திரம்]

## க. மெய்யுணர்தல்

*திருப்பெருந்துறையில் அருளியது.*

[இறைவன் அடியார்களை நோக்கி 'இக்குளத்தெழுகின்ற பெருஞ்சோதியில் கலந்தருளுக' என்று ஆணைதந்தவண்ணம் அடியார்கள் சோதியிற் கலந்தார்கள். கலந்த அவர்கள் கண நாதர்களாக விடையேறும் விண்ணவர்பெருமானோடு காட்சி வழங்கினார்கள். இறைவன் 'புத்தரை வாதில் வெல்ல உத்தம ராகிய திருவாதவூரரை இப்பூமியில் வைத்திருக்கின்றோம்; எம்மோடு கணநாதராகிய நீங்களும் வந்தால் வாதவூரன் வாடிப்போவான்; ஆதலின் சிலநாள் உடனுறைக எனஆணை தந்தோம்; யாம் முன் பணித்தபடி நீங்களனைவீரும் சில நாளேனும் மானுடச் சட்டை தாங்கியிருந்ததால் மலவாதனை பற்றியிருக்குமென்று இந்தஞானத்தழலில் வேகவைத்தோம். தெய்வத்திருமேனி தந்தோம்' என்றுகூறி மறைந்தருளினார். அடிகளார் செய்வதொன்றறியாது சிவயோகத்தமர்ந்தார். யோகக் காட்சியில் உடனின்ற அடியார்கள் கணநாதர்க ளாகத் திகழ்கின்றமையையும், தான் தில்லையம்பலத்துள் புகுவதையும் கண்டார். எழுந்து கண்ணீர்வார, கரம் சிரமேற் குவிய 'தாயான தயாபரனே! அடியேனைமட்டும் ஒழித்து

அடியார்களைத் திருவடிக்கீழ்ச் சேர்த்துக்கொள்ளலாமா? அருவினையேனுக்கு ஆற்றொணாத் துன்பந் தந்தீர். எங்கே ஒளித்தீர் எங்கே ஒளித்தீர்' எனவருந்தினார்; மூர்ச்சித்துக் கீழே விழுந்தார். தெளிந்து எழுந்தவர் குருந்தமரத்து நீழலிலுள்ள திருவடியைப் பற்றிநின்று தமிழ்நாடு கடைத்தேற திருச் சதகத்தை அருளிச்செய்கின்றார்.]

### கட்டளைக் கலித்துறை

*திருச்சிற்றம்பலம்.*

5 *மெய்தா னரும்பி விதிர்விதிர்த்*
*துன்விரை யார்கழற்கென்*
*கைதான் தலைவைத்துக் கண்ணீர்*
*ததும்பி வெதும்பியுள்ளம்*
*பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி*
*சயசய போற்றியென்னுங்*
*கைதான் நெகிழ விடேனுடை*
*யாயென்னைக் கண்டுகொள்ளே.* 1

---

1. *அன்பால்விளையும் மெய்ப்பாடுகளை அறிவித்தருளுகின்றார். அரும்பி - புளகாங்கிதங்கொண்டு. விரை - மணம். ததும்பி - இமைகளில் வழியக்கூடிய அளவு நிரம்பி. கைதான் நெகிழவிடேன் - ஒழுக்கம் தளரேன். கண்டுகொள் - இயல்பைக் கண்டு அடிமையாகக் கொள். இறைவன் விட்டுச்சென்ற பிரிவே வீரமாகக் கைநழுவவிட மாட்டேன் என்னைப்பார்த்துக்கொள் என்றதொரு பொருளும் தொனித்து நிற்றல் காண்க.*

6 கொள்ளேன் புரந்தரன் மாலயன்
வாழ்வு குடிகெடினும்
நள்ளேன் நினதடி யாரொடல்
லால்நர கம்புகினும்
எள்ளேன் திருவரு ளாலே
யிருக்கப் பெறினிறைவா
உள்ளேன் பிறதெய்வ முன்னையல்
லாதெங்கள் உத்தமனே. 2

7 உத்தம னத்த னுடையா
னடியே நினைந்துருகி
மத்த மனத்தொடு மாலிவ
னென்ன மனநினைவில்
ஒத்தன வொத்தன சொல்லிட
வூரூர் திரிந்தெவரும்
தத்த மனத்தன பேசவெஞ்
ஞான்றுகொல் சாவதுவே. 3

---

2. இப்பாடல் அடிகளாரது திருவுள்ளத்திடத்தை உணர்த்துகிறது. புரந்தரன் - இந்திரன். நள்ளேன் - நட்புக்கொள்ளேன். எள்ளேன் - இகழேன்.

3. இஷ்டப்படி உலகவர் பேசவும், தான் ஒழிவடைவது எப்போது என்று உசாவுகிறார். மால் இவன் என்ன என்றது உண்மைஅறியாத உலகவர் இவரைப் பித்தனென்றுபேசியதை.

8 சாவமுன் னாட்டக்கன் வேள்வித்
தகர்தின்று நஞ்சமஞ்சி
ஆவவென் றாயென் றவிதா
விடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிரானொடு
மெண்ணிவிண் ணாண்டுமண்மேல்
தேவரென் றேயிறு மாந்தென்ன
பாவந் திரிதவரே. 4

9 தவமே புரிந்திலன் தண்மல
ரிட்டுமுட் டாதிறைஞ்சேன்
அவமே பிறந்த அருவினை
யேனுனக் கன்பருள்ளாஞ்
சிவமே பெறுந்திரு வெய்திற்றி
லேனின் றிருவடிக்காம்
பவமே யருளுகண் டாயடி
யேற்கெம் பரம்பரனே. 5

---

4. தம் நெஞ்சம் புறந்தொழாமைக்கும், பிறர் நெஞ்சம் புறந்தொழுதற்கும் காரணம் விளக்கியருளுகின்றார். சாவ அஞ்சி எனக் கூட்டுக. ஆஆ என்னும் இரக்கக் குறிப்பிடைச்சொல் ஆவ என விகாரமாயிற்று, அவிதா-முறையீட்டுச் சொல். மூவரென்றே எம்பிரானொடும் எண்ணி என்றது 'தேவரில் ஒருவனென்பர் திருவுருச் சிவனைத் தேவர், மூவராய் நின்றதோரார் முதலுருத்தேச தென்னார்' என்ற சித்தித்திருவிருத்தத்தால் நன்குவிளங்கும். திரிதவர் - திரிவர்.

5. தம் குறைகளைக்கூறி இரங்கி, இனியேனும் சிவம் பெறுந் திருவாய்த்த பவம் அருளுக என்கின்றார். முட்டாது - குறைவற. அவம் - வீண். அன்பருள் ஆம் - அடியார்களிடை உளதாகிய. பவம்- பிறப்பு.

10 பரந்துபல் லாய்மல ரிட்டுமுட்
டாதடி யேயிறைஞ்சி
இரந்தவெல் லாமெமக் கேபெற
லாமென்னு மன்பருள்ளங்
கரந்துநில் லாக்கள்வ னேநின்றன்
வார்கழற் கன்பெனக்கும்
நிரந்தர மாயரு ளாய்நின்னை
யேத்த முழுவதுமே. 6

11 முழுவதுங் கண்ட வனைப்படைத்
தான்முடி சாய்த்துமுன்னாள்
செழுமலர் கொண்டெங்குந் தேடவப்
பாலனிப் பாலெம்பிரான்
கழுதொடு காட்டிடை நாடக
மாடிக் கதியிலியாய்
உழுவையின் றோலுடுத் துன்மத்த
மேல்கொண் டுழிதருமே. 7

---

6. இடையீடில்லாத அன்பு வேண்டும் என்கிறார். பரந்து - எல்லாத்தலங்களிலும் சென்று. ஆய்மலர் - வண்டு, பூச்சி, புழுக்கடி, சிதைவு, முறிவு முதலியன இல்லாது ஆய்ந்தமலர். இரந்த எல்லாம் - குறையாக வேண்டிற்று எல்லாம். கரந்து - மறைந்து. நிரந்தரம் - எப்பொழுதும்.

7. அன்பாலன்றி இறைவனை அணுக ஒண்ணாதென்றருளு கின்றார். முழுவதுங் கண்டவன் - பிரமன். அவனைப்படைத்தான் - திருமால். கொண்டு சாய்த்து தேட எனக்கூட்டுக. அப்பாலன் - அப்பாற்பட்டவன்; அகப்படாதவன். கழுது - பேய். கதியிலி - எல்லாரும் அடையுமிடம் தானாதலன்றித் தனக்கோர் இடமில்லா தவன். உழுவை - புலி.

12 உழிதரு காலும் கனலும்
புனலொடு மண்ணும்விண்ணும்
இழிதரு காலமெக் காலம்
வருவது வந்ததற்பின்
உழிதரு காலத்த வுன்னடி
யேன்செய்த வல்வினையைக்
கழிதரு காலமு மாயவை
காத்தெம்மைக் காப்பவனே. 8

13 பவனெம் பிரான்பனி மாமதிக்
கண்ணிவிண் ணோர்பெருமான்
சிவனெம் பிரானென்னை யாண்டுகொண்
டானென் சிறுமைகண்டும்
அவனெம் பிரானென்ன நானடி
யேனென்ன விப்பரிசே
புவனெம் பிரான்றெரி யும்பரி
சாவ தியம்புகவே. 9

---

8. இறைவனைநோக்கி வினைநீக்குங்காலத்தை வினவியருளுகின்றார். உழிதரும் - உலாவும். கால் - காற்று. இழிதருகாலம் - எப்பெரும் பூதங்களும் தத்தம் தன்மாத்திரையில் ஒடுங்குங்காலம். உழிதருகால் அத்த - என்றும் ஆடுகின்ற அத்தனே. அவைகாத்து - மீண்டும் என்னைப்பற்றாதே காத்து.

9. என்சிறுமைகண்டும் ஏற்றுக்கொண்டபெருமை போற்றத் தக்கதே என்றருளிச்செய்கின்றார். கண்ணி - தலையிற்சூடும் மாலை. புவனம் - உலகம்; எதுகைநோக்கிப் புவனெம் என ஆயிற்று;

14 புகவே தகேனுனக் கன்பருள்
யானென்பொல் லாமணியே
தகவே யெனையுனக் காட்கொண்ட
தன்மையெப் புன்மையரை
மிகவே யுயர்த்திவிண் ணோரைப்
பணித்தியண் ணாவமுதே
நகவே தகுமெம் பிரானென்னை
நீசெய்த நாடகமே.

திருச்சிற்றம்பலம்.

## உ. அறிவுறுத்தல்

### தரவுகொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்

15 நாடகத்தா லுன்னடியார்
போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான்
மிகப்பெரிதும் விரைகின்றேன்

---

10. சிறுமையுடைய என்னை அடியார் கூட்டத்துச் சேர்த்தது உன்பெருமைக்கு இயலாதென உரைத்து அருளுகின்றார். உனக்கு அன்பர் - உன்னன்பர்; உருபு முறைப்பொருளில் வந்தது. பொல்லாமணி - முழுமணி. தகவே - தகுதியாகுமா.

11. பொய்யன்பை மெய்யன்பாக்கி ஆண்டருள வேண்டுகின்றார். ஆடகம் - பொன். மணி - மாணிக்கம். என்னூடு அகத்தே - எனக்குள் மனத்தே.

ஆடகச்சீர் மணிக்குன்றே
    யிடையறா அன்புனக்கென்
ஊடகத்தே நின்றுருகத்
    தந்தருளெம் முடையானே. 11

16 யானேதும் பிறப்பஞ்சேன்
    இறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன்
    மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயு மலர்க்கொன்றைச்
    சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநாள்
    என்றென்றே வருந்துவனே. 12

17 வருந்துவனின் மலர்ப்பாதம்
    அவைகாண்பான் நாயடியேன்
இருந்துநல மலர்புனையேன்
    ஏத்தேன்நாத் தழும்பேறப்
பொருந்தியபொற் சிலைகுனித்தாய்
    அருளமுதம் புரியாயேல்
வருந்துவனத் தமியேன்மற்
    றென்னேநான் ஆமாறே. 13

---

12. யான் வேண்டுவதெல்லாம் அருளொன்றே என்றருளுகின்றார். ஏதும் - சிறிதும், என்கடவேன் - என்னசெய்யவல்லேன்.

13. அன்புகொண்டார் இயற்றும்பணிகளை மேற்கொள்ளாதயான், அருளமுதம் அடைதல் எவ்வாறு என்றருள்கின்றார். காண்பான் - காண்பதற்கு. பொற்சிலை - மேருவாகியவில். அத்தமியேன்

18 ஆமாறுன் றிருவடிக்கே
யகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன்
புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமானின் றிருக்கோயில்
தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன்
சதுராலே சார்வானே. 14

19 வானாகி மண்ணாகி
வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி
உண்மையுமா யின்மையுமாய்க்
கோனாகி யானெனதென்
றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை
யென்சொல்லி வாழ்த்துவனே. 15

---

என்றது சிறுமை மிகுதியுடையேன் என்ற சிந்தையிற் கருத்தைச் சுட்டிநின்றது.

14. பணிபுரியாமலே பதவிக்கு விரைகின்றேன்; எனது அறியாமை இருந்தபடி என்னே! என்றருளுகின்றார். புத்தேளிர் - தேவர். தூகேன் - அலகிடேன். சதுர் - சாமர்த்தியம்.

15. வான்முதற் பூதங்களாகி எல்லாமுமாயிருக்கின்ற இறைவனை எங்ஙனம் வாழ்த்துவது என்கின்றார். வளி - காற்று. ஊன் - உடல்; ஆகுபெயர். கூத்தாட்டுவான் - வினைக்கயிற்றால் அகங்கார மமகாரமுடைய ஆன்மாக்களாகிய பாவைகளை ஆட்டுபவன்.

20 வாழ்த்துவதும் வானவர்கள்
தாம்வாழ்வான் மனநின்பால்
தாழ்த்துவதுந் தாமுயர்ந்து
தம்மையெல்லாந் தொழவேண்டிச்
சூழ்த்துமது கரமுரலுந்
தாரோயை நாயடியேன்
பாழ்த்தபிறப் பறுத்திடுவான்
யானுமுன்னைப் பரவுவனே. 16

21 பரவுவா ரிமையோர்கள்
பாடுவன நால்வேதம்
குரவுவார் குழன்மடவாள்
கூறுடையா ளொருபாகம்
விரவுவார் மெய்யன்பின்
அடியார்கள் மேன்மேலுன்
அரவுவார் கழலிணைகள்
காண்பாரோ அரியானே. 17

---

16. தேவர்கள் போற்றுவது தாம் உயர; யான் பரவுவது பிறப்பு அறுக்க என்றருளிச்செய்கின்றார். தாழ்த்துதல் - தன்முனைப் பின்றித் தாழச்செய்தல். மதுகரம் - வண்டு. பாழ்த்த பிறப்பு - பயனற்றபிறப்பு.

17. பரவியும்பாடியும் விரவியுமிருக்கின்ற அன்பர்கள், திருவடி காணும்பேறு பெறுவரோ என்றையுற்றுத் தனக்குக்கிடைத்த பேற்றினை வியக்கின்றார். குரவு - குராமலர். விரவுவார் - கலப்பார். அரவு வார் கழல் இணைகள் - பாம்பையும் வீரக்கழலையும் அணிந்த திருவடிகள்.

22 அரியானே யாவர்க்கு
மம்பரவா அம்பலத்தெம்
பெரியானே சிறியேனை
யாட்கொண்ட பெய்கழற்கீழ்
விரையார்ந்த மலர்தூவேன்
வியந்தலறேன் நயந்துருகேன்
தரியேனு னாமறென்
சாவேனுன் சாவேனே. 18

23 வேனில்வேள் மலர்க்கணைக்கும்
வெண்ணகைச்செவ் வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும்
பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊனெலா நின்றுருகப்
புகுந்தாண்டான் இன்றுபோய்
வானுளான் காணாய்நீ
மாளாவாழ் கின்றாயே. 19

---

18. சிறியேனை ஆட்கொண்ட சீர்த்திக்காகவாவது மலர் தூவித்தொழவேண்டியிருக்க, கடமை தவறியயான் சாவேன் சாவேன் என்றருளுகின்றார். அம்பரவா - ஞானகாசத்தில் விளங்குபவனே. நயந்து - விரும்பி.

19. உலகினர்நிலையைத் தமதாகக்கொண்டு நெஞ்சைவிளித்து அதற்கு இறைவனிருக்குமிடத்தைக் காட்டியருளுகின்றார். வேனில் வேள் - மன்மதன். பானல் - குவளை. மாளாவாழ்கின்றாய் என்றது முனைப்பு அடங்கி அழியவேண்டிய நீ அழியாதிருக்கின்றாயென்ற கருத்துப்பற்றி.

24 வாழ்கின்றாய் வாழாத
நெஞ்சமே வல்வினைப்பட்
டாழ்கின்றாய் ஆழாமற்
காப்பானை யேத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச்
சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீயவலக்
கடலாய வெள்ளத்தே. 20

திருச்சிற்றம்பலம்.

## ௩. சுட்டறுத்தல்

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

25 வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகு மவர்நிற்க என்னை யாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவு நெஞ்சாய்
உருகாதா லுடம்பெல்லாங் கண்ணா யண்ணா
வெள்ளந்தான் பாயாதால் நெஞ்சங் கல்லாம்
கண்ணிணையு மரமாந்தீ வினையி னேற்கே. 21

---

20. தனக்கே கேடுசூழும் தன் நெஞ்சைநோக்கி எச்சரிக்கை செய்கின்றார். வாழாத நெஞ்சம் - வாழவேண்டிய முறைப்படி வாழாத நெஞ்சம். அவலக்கடல் - துன்பக்கடல்.

21. ஆட்கொண்ட அருமைப்பாட்டினை யெண்ணியெண்ணித் தன்நெஞ்சம் தாழாமைக்கு மிகமிக மாழாந்து உரைத்தருளுகின்றார்.

26 வினையிலே கிடந்தேனைப் புகுந்து நின்று
போதுநான் வினைக்கேடனென்பாய் போல
இனையனென் றுன்னை யறிவித் தென்னை
ஆட்கொண்டெம் பிரானானாய்க் கிரும்பின் பாவை
அனையநான் பாடேனின் றாடே னந்தோ
அலறிடேன் உலறிடேன் ஆவி சோரேன்
முனைவனே முறையோநா னான வாறு
முடிவறியேன் முதலந்த மாயி னானே. 22

27 ஆயனான் மறையவனும் நீயே யாதல்
அறிந்தியா னியாவரினுங் கடைய னாய
நாயினே னாதலையு நோக்கிக் கண்டும்
நாதனே நா னுனக்கோர் அன்ப னென்பேன்
ஆயினே னாதலால் ஆண்டு கொண்டாய்
அடியார்தா மில்லையே யன்றி மற்றோர்
பேயனே னிதுதானின் பெருமை யன்றே
எம்பெருமான் என்சொல்லிப் பேசு கேனே. 23

---

வெள்ளம்-கங்கைநீர். வேட்ட - விரும்பிய. பள்ளந்தாழ் உறுபுனல் - பள்ளத்தைநோக்கி ஓடுகின்றநீர். உள்ளந்தாள் - உள்ளங்கால்.

22. இரும்புப் பதுமைபோல உணர்ச்சியற்றிருந்த தன் நிலைக்கு வருந்தியருளுகின்றார். போது - வா. வினைக்கேடன் - வினையை நீக்குபவன். ஆவிசோரேன் - உயிர்த்தன்மையை வற்றச்செய்கிலேன். முனைவன் - வினையின் நீங்கி விளங்கிய அறிவன்.

23. உனக்கு அடியார்கள் இல்லாமல் இல்லையாயினும் அடியேனை ஆட்கொண்டது நின்பெருமையே எனப் பேசுகின்றார். நான்மறையவன் - அந்தணன்.

28 பேசிற்று மீசனே யெந்தா யெந்தை
பெருமானே யென்றென்றே பேசிப் பேசிப்
பூசிற்றுன் திருநீறே நிறையப் பூசிப்
போற்றியெம் பெருமானே யென்று பின்று
நேசத்தாற் பிறப்பிறப்பைக் கடந்தார் தம்மை
ஆண்டானே அவாவெள்ளக் கள்வ னேனை
மாசற்ற மணிக்குன்றே யெந்தா யந்தோ
என்னைநீ யாட்கொண்ட வண்ணந் தானே. 24

29 வண்ணந்தான் சேயதன்று வெளிதே யன்ற
நேகனேகன் அணுவணுவில் இறந்தா யென்றங்
கெண்ணந்தான் தடுமாறி யிமையோர் கூட்டம்
எய்துமா றறியாத எந்தா யுன்றன்
வண்ணந்தா னதுகாட்டி வடிவு காட்டி
மலர்க்கழல்க ளவைகாட்டி வழியற் றேனைத்
திண்ணந்தான் பிறவாமற் காத்தாட் கொண்டாய்
எம்பெருமா னென்சொல்லிச் சிந்திக் கேனே. 25

---

24. வாயளவில் அன்பனுன அடியேனை அவாவெள்ளக்கள்வ னென்றறிந்திருந்தும் ஆட்கொண்ட அருமைதான் என்னே என்று அருளுகின்றார். பேசில் தாம் - தாம் பேசில் எனமாறுக. பின்று - பின்னடையாத.

25. இமையோர்களின் எண்ணத்திற்கும் எட்டாத நீ அடியேனுக்கு வடிவுகாட்டி ஆட்கொண்ட பெரும்பேறு இருந்தபடி என்னே என்று வியந்தருளுகின்றார். சேயதன்று - சிவந்ததன்று. இறந்தாய் - கடந்தாய். திண்ணம் தான் பிறவாமல் - உறுதியாக அடியேன் பிறவி எடுக்காமல்.

30 சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே. 26

31 தனியனேன் பெரும்பிறவிப் பௌவத் தெவ்வத்
தடந்திரையா லெற்றுண்டு பற்றொன் றின்றிக்
கனியைநேர் துவர்வாயா ரென்னுங் காலால்
கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்
டினியென்னே யுய்யுமா றென்றென் றெண்ணி
அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லற்
கரைகாட்டி யாட்கொண்டாய்மூர்க்கனேற்கே 27

---

26. மனமொழிமெய்களைத் தன்வயப்படுத்தித் தன்னை வழங்கிய தகுதியை விளக்கிக்காட்டுகின்றார். வந்தனை - வழிபாடு. மணிவார்த்தை - அழகியவார்த்தை. வந்தனை - வந்தனையாய்; முற்றெச்சம். விச்சை - வித்தை. மாலமுதம் - தன்னையன்றி வேறொன்றையும் விரும்பச்செய்யாமையாகிய மயக்கத்தை அளிக்கும் அமுதம். இரண்டுமிலித் தனியனேற்கு - இரண்டுங்கெட்டானாகிய எனக்கு (துன்ப இன்பங்களை அறியும் ஆற்றலில்லாத எனக்கு).

27. உலகியல் இன்பத்து உலைப்புண்டு உய்யுமாறுதேடி அஞ்செழுத்து அரும்புணை பிடித்துக் கிடந்த தமக்குத் திருவடிகாட்டி

32 கேட்டாரு மறியா தான் கேடொன் றில்லான்
கிளையிலான் கேளாதே யெல்லாங் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத் துள்ளே
நாயினுக்குத் தவிசிட்டு நாயி னேற்கே
காட்டா தனவெல்லாங் காட்டிப் பின்னுங்
கேளா தனவெல்லாங் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமற் காத்தாட் கொண்டான்
எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே. 28

33 விச்சைதா னிதுவொப்ப துண்டோ கேட்கின்
மிகுகாத லடியார்தம் அடிய னாக்கி
அச்சந்தீர்த் தாட்கொண்டா னமுத மூறி
அகநெகவே புகுந்தாண்டான் அன்பு கூர

---

ஆட்கொண்டதை விளக்கியருளுகின்றார். பௌவம் - கடல். எவ்வம், துன்பம். கனி - கொவ்வைக்கனி. துவர் - சிவப்பு. கால் - காற்று; வான்சுறவு - பெரிய சுறாமீன். புணை - தெப்பம். மல்லல் - வளப்பம். கரை என்றது திருவடிக்கரையை.

28. நாய்க்குத் தவிசிட்டாற்போலத் தமக்கு அருள்செய்த அருமைப்பாட்டினை வியக்கின்றார். கேட்டு அறியாதான் - வண்ணங்களைப் பிறர்சொல்லக்கேட்டு முழுதும் உணரப்படாதவன். கிளை - சுற்றம். கேளாதே கேட்டான் - பொறிகளாலுணராது என்றும் எல்லாம் உணர்பவன். தவிசு - ஆசனம். காட்டாதன என்றது இறைவன் திருவுருவத்தை. கேளாதன என்றது ஞானநூற் பொருளையும் திருவைந்தெழுத்தையும்.

அச்சனாண் பெண்ணலியா காச மாகி
ஆரழலா யந்தமா யப்பா னின்ற
செச்சைமா மலர்புரையு மேனி யெங்கள்
சிவபெருமான் எம்பெருமான் தேவர்கோவே. 29

34 தேவர்கோ வறியாத தேவ தேவன்
செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை
மூவர்கோ னாய்நின்ற முதல்வன் மூர்த்தி
மூதாதை மாதாளும் பாகத் தெந்தை
யாவர்கோ னென்னையும்வந் தாண்டு கொண்டான்
யாமார்க்குங் குடியல்லோம் யாதும் அஞ்சோம்
மேவினோ மவனடியா ரடியா ரோடு
மேன்மேலுங் குடைந்தாடி யாடு வோமே. 30

திருச்சிற்றம்பலம்.

---

29. பெருமான் அச்சம் தீர்த்து ஆட்கொண்டதோடுமட்டு மன்றி, அன்பு ஒருகாலைக் கொருகால் ஓங்க, உள்ளம் புகுந்ததையும் உரைத்தருளுகின்றார். அச்சன் - தந்தை. செச்சை - வெட்சி.

30. அருள்வீரமேவி அடியாரோடுகலந்து அருள்வெள்ளத்துள் ஆடியதை அறிவித்தருளுகின்றார். தேவர்கோ - இந்திரன். பொழில் - உலகம். மூவர் - பிரம விஷ்ணு ருத்திரர். பயந்து - பெற்று. மூவர்கோனாய் நிற்றல் - மூவர்க்குந் தலைவனாக நிற்றல். மூவரும் தத்தந் தொழிலைச் செய்யச் சிவபெருமான் அந்நிலையில் இருக்கின்றார் என்பது கருத்து. சம்பந்தசுவாமிகளது சிவபுரம் தேவாரத்தானும் இதனை அறியலாம். யாவர்கோன் - யாவர்க்கும் கோன் என முற்றும்மையுங்குவ்வுருபும் விரிக்க.

## ௬. ஆத்துமசுத்தி

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

35 ஆடு கின்றிலை கூத்துடை யான்கழற்
கன்பிலை யென்புருகிப்
பாடு கின்றிலை பதைப்பதுஞ் செய்கிலை
பணிகிலை பாதமலர்
சூடு கின்றிலை சூட்டுகின் றதுமிலை
துணையிலி பிணநெஞ்சே
தேடு கின்றிலை தெருவுதோ றலறிலை
செய்வதொன் றறியேனே. 31

36 அறிவி லாத எனைப்புகுந் தாண்டுகொண்
டறிவதை யருளிமேல்
நெறியெ லாம்புல மாக்கிய எந்தையைப்
பந்தனை யறுப்பானைப்

---

31. பணியில் தவறிய தன்மனத்தைப் பார்த்துப் பரிந்து பேசுகின்றார். பிணநெஞ்சே என்றார் உயிர்த்தன்மையாகிய உணர்ச்சியை யிழந்தமையால். பாதமலர் - பாதமாகிய மலர், பாதத்தில் மலரை என விரித்து, சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை என்பனவற்றோடு இயைத்துப் பொருள்காண்க. துணையிலி பிணநெஞ்சே என்றார் பிணமாயினபின் துணைவருவார் யாருமில்லை என்பதுகருதி.

32. அருள்பெற்றும் அறிவற்று மாறுபட்ட நெஞ்சைப்பார்த்துக் கவன்றுரைக்கின்றார். மேல்நெறி - வீட்டுநெறி. புலமாக்கிய - அறிவகத்தே விளங்கச்செய்த. கிறி - பொய். என்னைக் கெடுமாறு கீழ்ப்படுத்தாய் எனக் கூட்டுக.

பிறிவி லாதவின் னருள்கள்பெற் றிருந்துமா
றாடுதி பிணநெஞ்சே
கிறியெ லாமிகக் கீழ்ப்படுத் தாய்கெடுத்
தாயென்னைக் கெடுமாறே. 32

37 மாறி நின்றெனைக் கெடக்கிடந் தனையெம்
மதியிலி மடநெஞ்சே
தேறு கின்றில மினியுனைச் சிக்கெனச்
சிவனவன் றிரடோண்மேல்
நீறு நின்றது கண்டனை யாயினும்
நெக்கிலை யிக்காயம்
கீறு கின்றிலை கெடுவதுன் பரிசிது
கேட்கவுங் கில்லேனே. 33

38 கிற்ற வாமன மேகெடு வாயுடை
யானடி நாயேனை
விற்றெ லாமிக வாள்வதற் குரியவன்
விரைமலர்த் திருப்பாதம்
முற்றி லாவிளந் தளிர்பிரிந் திருந்துநீ
யுண்டன வெல்லாமுன்
அற்ற வாறுநின் னறிவுநின் பெருமையும்
அளவறுக் கில்லேனே. 34

---

33. உறுதுணையாகாத மனத்தோடு' ஒத்துழையேன் என்கிறார். காயம் - உடல். சிக்கென - உறுதியாக.

34. இறைவன் திருப்பாதத்தளிரைப் பிரிந்து பெற்றபயன் என்னை? என நெஞ்சை வினவியருளுகின்றார். கிற்றவா கெடுவாய் - முடிந்தவரை கெடுவாய். விற்றெலாம் மிக ஆள்வதற் குரியவன்

39 அளவ றுப்பதற் கரியவன் இமையவர்க்
கடியவர்க் கெளியானங்
களவ றுத்துநின் றுண்டமை கருத்தினுட்
கசிந்துணர்ந் திருந்தேயும்
உளக றுத்துனை நினைந்துளம் பெருங்களன்
செய்தது மிலைநெஞ்சே
பளக றுத்துடை யான்கழல் பணிந்திலை
பரகதி புகுவானே. 35

40 புகுவ தாவதும் போதர வில்லதும்
பொன்னகர் புகப்போதற்
குகுவ தாவதும் எந்தையெம் பிரானென்னை
யாண்டவன் கழற்கன்பு
நெகுவ தாவதும் நித்தலு மமுதொடு
தேனொடு பால்கட்டி
மிகுவ தாவதும் இன்றெனின் மற்றிதற்
கென்செய்கேன் வினையேனே. 36

---

என்பதை எதிர் மொழியாகவிளக்குவது 'விற்றுக்கொள்வீர்; ஒற்றியல்லேன்; விரும்பியாட்பட்டேன்' என்ற சுந்தரர் வாக்கு. உண்டன நுகர்ந்தனவாகிய வினைகள். அளவறுக்கில்லேன் என்பது புகழ்வது போலப்பழித்தல்.

35. தேவர்க்கரியனாகிய தேவதேவன் அடியவர்க்கெளியனாய் ஆட்கொண்டதை அறிந்திருந்தும் நீ பணிந்திலை என நெஞ்சைச் சினந்து கூறுகின்றார். களவு - வஞ்சம்முதலிய களவு ஒழுக்கங்கள். உளகறுத்து - உள்ளனவற்றை வெறுத்து; அதாவது பொறிநுகர்ச்சிகளாகிய போகங்களை வெறுத்து. பெருங்களன் - இறைவன் தங்குதற்குரிய பெரிய இடம். பளகு - குற்றம்.

36. எனக்கு வினைவயத்தால் பேரின்ப நுகர்ச்சி இல்லையெனின் என்செய்வேன் என்றிரங்கியருளுகின்றார். போதரவு- மீட்சி. பொன்னகர் - சிவபுரி. உகுவது - கழலுவது. நெகுதல் - உருகுதல்.

41 வினையென் போலுடை யார்பிற ராருடை
யானடி நாயேனைத்
தினையின் பாகமும் பிறிவது திருக்குறிப்
பன்றுமற் றதனாலே
முனைவன் பாதநன் மலர்பிரிந் திருந்துநான்
முட்டிலேன் தலைகீறேன்
இனையன் பாவனை யிரும்புகன் மனஞ்செவி
யின்னதென் றறியேனே. 37

42 ஏனை யாவரு மெய்திட லுற்றுமற்
றின்னதென் றறியாத
தேனை ஆனெயைக் கரும்பினின் றேறலைச்
சிவனையென் சிவலோகக்
கோனை மானன நோக்கிதன் கூறனைக்
குறுகிலே னெடுங்காலம்
ஊனை யானிருந் தோம்புகின் றேன்கெடு
வேனுயி ரோயாதே. 38

---

37. இறைவன் திருவடியைப் பிரிந்திருக்கின்ற நிலைக்கு வருந்தி என்போலும் வினையுடையார் யாவருமில்லை யென்று எடுத்துக் காட்டுகிறார். தினையின்பாகம் - தினையளவு இடமும் தினையளவு காலமும். முட்டிலேன் - மோதிக்கொள்ளேன். தலைகீறேன் - தலையைப் பிளந்துகொள்ளேன். பாவனை - நினைவு.

38. ஊனையோம்பிக் காலத்தைக் கழிக்கின்ற யான் அம்மையப்பரை அணுகி அருள் அடையேன் எனக் கவன்றுரைக்கின்றார். திருமால் முதலிய தேவர்கட்கும், ஏனையோர்கட்கும் இன்னதென் றறியமுடியாத சிவன் தனக்குத் தேனாக - பசு நெய்யாக - கருப்பஞ்சாறாக நுகர்ச்சிக்கெளிமையாயிருந்ததை விளக்குகின்றனர்; தேனை முதலிய பகுதிகள்.

43 ஓய்வி லாதன வுவமனி லிறந்தன
 வொண்மலர்த் தாடந்து
நாயி லாகிய குலத்தினுங் கடைப்படும்
 என்னைநன் னெறிகாட்டித்
தாயி லாகிய இன்னருள் புரிந்தவென்
 தலைவனை நனிகாணேன்
தீயில் வீழ்கிலேன் திண்வரை யுருள்கிலேன்
 செழுங்கடல் புகுவேனே. 39

44 வேனில் வேள்கணை கிழித்திட மதிசுடு
 மதுதனை நினையாதே
மானி லாவிய நோக்கியர் படிறிடை
 மத்திடு தயிராகித்
தேனி லாவிய திருவருள் புரிந்தவென்
 சிவநகர் புகப்போகேன்
ஊனி லாவியை யோம்புதற் பொருட்டினும்
 உண்டுடுத் திருந்தேனே. 40

திருச்சிற்றம்பலம்

---

39. தாயிற் சிறந்த தண்ணருள் செய்த இறைவனைக் காணாத நாயிற் கடைப்பட்ட நான் என்ன செய்தாவது என் உயிரை மாய்த்துக்கொள்வேன் என்றுரைக்கின்றார். ஓய்வு - அழிவு. உவமனி லிறந்தன - உவமான உவமேயங்களுள் உவமேயத்தைக் காட்டிலும் உவமானம் தன்மையால் விஞ்சியிருக்கும்; அங்ஙனமாகவும் திருவடி யாகிய உவமேயம் உவமானங்களைக் காட்டிலும் சிறந்துள்ளதென் பதாம்.

40. உயிரோம்புதற்காக உண்டு, உடுத்து, சிவநகர் புகாது இருந்தேன் என்கின்றார். வேனில்வேள் - மன்மதன். மதிசுடும் - குளிர்ந்த மதியும் வெய்தாய்ச் சுடும். படிறு - வஞ்சகம்.

## ரு. கைம்மாறு கொடுத்தல்

### கலி விருத்தம்

திருச்சிற்றம்பலம்

45 இருகை யானையை யொத்திருந் தென்னுளக்
கருவை யான்கண்டி லேன்கண்ட தெவ்வமே
வருக வென்று பணித்தனை வானுளோர்க்
கொருவ னேகிற்றி லேன்கிற்ப னுண்ணவே. 41

46 உண்டொர் ஒண்பொரு ளென்றுணர் வார்க்கெலாம்
பெண்டிர் ஆணலி யென்றறி யொண்கிலை
தொண்ட னேற்குள்ள வாவந்து தோன்றினாய்
கண்டுங் கண்டிலேன் என்னகண் மாயமே. 42

---

41. ஆட்கொண்ட தேவரீர் அளித்த பேரின்பத்தை நுகர மாட்டேன்; ஊன்பருக்க உண்ணுவேன் என்று உவர்த்துரைக்கின்றார். இருகை யானை ஒத்திருந்தேன் - ஒருகையால் உண்டு போதாமையால் இருகையால் உண்ட யானையை ஒத்தேன். உள்ளம் - ஆன்மா. எவ்வம் - துன்பம். கிற்றிலேன் - ஆற்றலில்லேன்.

42. இறைவா! உள்ளவாறு வந்து காட்சியளித்தும் நான் காணவில்லை; என்மாயம் இருந்தபடி என்னே என்கிறார். உணர்வார் - தன் முனைப்பால் உணரத்தொடங்குகின்ற பாசபசு ஞானிகள். தொண்டனேற்கு - சிவஞானத்தைத் திருவருள் வாய்ப்பால் பெற்ற அடியேனுக்கு. கண் மாயம் என்ன - கண்ணைப்பற்றியிருக்கும் மயக்கம்தான் என்ன.

47 மேலை வானவ ரும்மறி யாததோர்
கோல மேயெனை யாட்கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேயிவை வந்துபோங்
கால மேயுனை யென்றுகொல் காண்பதே. 43

48 காண லாம்பர மேகட் கிறந்ததோர்
வாணி லாப்பொரு ளேயிங்கோர் பார்ப்பெனப்
பாண னேன்படிற் றாக்கையை விட்டுனைப்
பூணு மாறறி யேன்புலன் போற்றியே. 44

49 போற்றி யென்றும் புரண்டும் புகழ்ந்துநின்
றாற்றன் மிக்கவன் பாலமைக் கின்றிலேன்

---

43. ஆட்கொண்ட கூத்தனை இனிக்காண்பது என்று கொல் என்று அலமந்துரைக்கின்றார். மேலைவானவர்-மேற்பதவிகளிலுள்ள வானவர்கள். கோலம் - திருவுருவம். வானவர்கள் - குருவாக வந்து மலர்க்கும் உபதேசம் பெற்றிலாதலின் வானவரறியாத கோல மென்றார். ஞாலமே விசும்பே என்றதனால் இடைநின்ற பூதங்களும் கொள்ளப்பெறும்.

44. காணக்கூடிய கருணைவள்ளலை அடைதற்கு விரைதலை விளக்கியருளுகின்றார். வாள் நிலா - மிக்கவொளி. பார்ப்பு - குஞ்சு. படிற்றாக்கையைப் பார்ப்பெனவிட்டு என்றது 'குடம்பை தனித் தொழியப் புட்பறந்தற்றே' என்ற குறளை நினைவூட்டுவது. படிறு - பொய். பாழ்நன் என்பது பாணனென மரீஇயிற்று.

45. அன்பாலமையாத அடியேனையும் ஏற்றுக்கொள்ளவேண்டு மென வேண்டியருளுகின்றார். என்கொள்கை எதிரேற்றுவந்து தாள்

ஏற்று வந்தெதிர் தாமரைத் தாளுறுங்
கூற்ற மன்னதோர் கொள்கையென் கொள்கையே. 45

50 கொள்ளுங் கில்லெனை யன்பரிற் கூய்ப்பணி
கள்ளும் வண்டு மறாமலர்க் கொன்றையான்
நள்ளுங் கீழுளு மேலுளும் யாவுளும்
எள்ளும் எண்ணெயும் போனின்ற எந்தையே. 46

51 எந்தை யாயெம் பிரான்மற்று மியாவர்க்கும்
தந்தை தாய்தம் பிரான்றனக் கஃதிலான்
முந்தி யென்னுள் புகுந்தனன் யாவரும்
சிந்தை யாலும் அறிவருஞ் செல்வனே. 47

---

உறுங்கூற்ற மன்னதோர் கொள்கை எனக்கூட்டுக. உய்யவேண்டிய திருவடியில் உயிர்போகவந்து விழுந்த யமன் நிலையை ஒத்தது என் கொள்கை என்பதாம்.

46. ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்கின்ற இறைவன் அடியேனையும் அழைத்து அன்பர்கள் கூட்டத்தில் சேர்ப்பாரா என்றருளுகின்றார். நள் - நடு. எள்ளும் எண்ணெயும் போலென்றது எங்கும் வியாபித்திருத்தலைக் குறித்து. கில் எனைப் பணிகொள்ளும் எனக் கூட்டுக.

47. யாராலும் எண்ணுதற்கரிய இறைவன் தானே வலிய வந்து என் உள்ளத்துப் புகுந்தான் என்கிறார். பிறவியில்லாதான் இறைவனாதலின் தனக்கு அஃதில்லான் என்றார்.

52 செல்வ நல்குர வின்றிவிண் ணோர்புழுப்
புல்வ ரம்பின்றி யார்க்கு மரும்பொருள்
எல்லை யில்கழல் கண்டும் பிரிந்தனன்
கல்வ கைமனத் தேன்பட்ட கட்டமே. 48

53 கட்ட றுத்தெனை யாண்டுகண் ணாரநீ
றிட்ட அன்பரொ டியாவருங் காணவே
பட்டி மண்டப மேற்றினை யேற்றினை
எட்டி னோடிரண் டும்மறி யேனையே. 49

---

48. யாவர்க்கும் யாவைக்கும் ஒப்ப அருள்வழங்கும் இறைவனைக்கண்டிருந்தும் பிரிந்தேனே நான்பட்டதுன்பம் என்னே என்று இரங்கியருளுகின்றார். நல்குரவு - வறுமை. எல்லையில்கழல் - சொல்லெல்லையும் கருததெல்லையும் கடந்துநின்ற திருவடி. கட்டம் - துன்பம்.

49. அறிவற்ற என்னை வாதமண்டபத்து ஏற்றினாய் என்னே அதிசயமென்று வியந்தோதுகின்றார். பட்டிமண்டபம் - வாதசபை. ஏற்றினை - இடபவாகனத்தையுடையாய். எட்டினோடிரண்டுமறியேன் என்றது எட்டுமிரண்டும் கூட்டில் பத்தென்றுசொல்லும் எண்ணறிவற்றவன் என்றும்; எட்டென்னும் எண்ணின் தமிழ்வடிவு 'அ', இரண்டென்னு மெண்ணின் தமிழ்வடிவு 'உ' அ, உ தெரியாத எழுத்தறிவற்றவன் என்றும்; எட்டு 'அ', இரண்டு உகரமும் மகாரமுமாகிய எழுத்துக்கள் ஆக எட்டினோடிரண்டு அகார உகார மகாரமாகிய பிரணவ பஞ்சாக்கரம் இதனை அறியாதவன் என்றும் பொருள்கொள்ளக் கிடக்கின்றன. எட்டும் இரண்டும் பத்து, பத்து என்னும் தமிழெண்ணின் வடிவம் 'ய' என்பது. இவ்வெழுத்து யகரம் போன்றிருத்தலின் அதற்கு ஆன்மா எனப்பொருள்கொண்டு தன்னைத்தானே அறிந்துகொள்ளாதவன் என்ற பொருளும் கொள்ளலாம். திருமூலரும் 'எட்டு மிரண்டும் இனிதறிகின்றிலர்' என்று கூறுவர். 'அ, உ அறியா அறிவிலிடைமகனே' என்பதும் ஈண்டு நினைத்தற்குரியது.

54 அறிவ னேயமு தேயடி நாயினேன்
அறிவ னாகக்கொண் டோவெனை யாண்டது
அறிவி லாமையன் றேகண்ட தாண்டநாள்
அறிவ னோவல்ல னோவரு ளீசனே. 50

திருச்சிற்றம்பலம்.

## ௬. அநுபோகசுத்தி

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

55 ஈச னேயென் னெம்மானே
யெந்தை பெருமா னென்பிறவி
நாச னேநான் யாதுமொன்
றல்லாப் பொல்லா நாயான
நீச னேனை யாண்டாய்க்கு
நினைக்க மாட்டேன் கண்டாயே
தேச னேயம் பலவனே
செய்வ தொன்றும் அறியேனே. 51

---

50. அடியேனையாட்கொண்டகாலத்து, அறிவிலாதவனென்று கண்டே யாட்கொண்டீர்; அங்ஙனமாகவும் யான் அறிவேனோ அறிய மாட்டேனோ என்பதைத் தேவரீரே அருளவேண்டுமென்கின்றார். கொண்டோ என்றவினா 'அறிவிலாமை என்றே' கண்டது எனும் விடையைத் தழுவிநின்றது. அருள் என்றது தாமாக உணர முடியாமையைக் குறித்தவாறு.

51. இழிந்தஎன்னைஆட்கொண்ட உன்னைநினைக்கமாட்டேன்; ஆதலால் செய்வதொன்றும் அறியேனென்று வருந்துகின்றார். பிறவி நாசனே என்றார் எடுத்த இப்பிறவி கழிதலாகிய இறப்பை விரும்புகின்றாராதலின். தேசன் - ஒளியையுடையவன்.

56 செய்வ தறியாச் சிறுநாயேன்
செம்பொற் பாத மலர்காணப்
பொய்யர் பெறும்பே றத்தனையும்
பெறுதற் குரியேன் பொய்யிலா
மெய்யர் வெறியார் மலர்ப்பாதம்
மேவக் கண்டும் கேட்டிருந்தும்
பொய்ய னேனான் உண்டுடுத்திங்
கிருப்ப தானேன் போரேறே. 52

57 போரே றேநின் பொன்னகர்வாய்
நீபோந் தருளி யிருணீக்கி
வாரே றிளமென் முலையாளோ
டுடன்வந் தருள அருள்பெற்ற
சீரே றடியார் நின்பாதஞ்
சேரக் கண்டுங் கண்கெட்ட
ஊரே றாயிங் குழல்வேனோ
கொடியே னுயிர்தா னுலவாதே. 53

---

52. மெய்யர் வீடுமேவவும், பொய்யனாகிய யான் உண்டுடுத்து வாழ்கின்றேன் என்கின்றார். பொய்யிலாமெய்யர் என்றது 'பொய்மை யும் வாய்மையிடத்த' என்றாற்போன் றதல்லாத மெய்யினையுடையார் என்பதாம். வெறி - மணம்.

53. அடியார்கள் யாவரும் அம்மையப்பராகிய உமது அருள் பெற்றுத் திருவடிசேரவும், யான் கண்கெட்டகாளையாய் அலைவனோ என அவலப்படுகின்றார். ஊரேறு - ஆள்வாரில்லாத ஊர்க்காளை.

58 உலவாக் காலந் தவமெய்தி
யுறுப்பும் வெறுத்திங் குனைக்காண்பான்
பலமா முனிவர் நனிவாடப்
பாவி யேனைப் பணிகொண்டாய்
மலமாக் குரம்பை யிதுமாய்க்க
மாட்டேன் மணியே யுனைக்காண்பான்
அலவா நிற்கு மன்பிலேன்
என்கொண் டெழுகேன் எம்மானே. 54

59 மானேர் நோக்கி யுமையாள்
பங்கா வந்திங் காட்கொண்ட
தேனே யமுதே கரும்பின்
தெளிவே சிவனே தென்றில்லைக்
கோனே யுன்றன் திருக்குறிப்புக்
கூடு வார்நின் கழல்கூட
ஊனார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்ப தானேன் உடையானே. 55

---

54. பல்லாண்டு பல முனிவர் உன்னைக்காண உழைத்தும், வலியவந்து அடியேனை ஆட்கொண்டாய்; அங்ஙனமாகவும் யான் இவ்வுடலைப்போக்க ஒருப்படாமல் இருக்கின்றேன்; உய்வதெப்படி என்கின்றார். உலவாக்காலம் - எல்லையற்றகாலம். அலவா - வருந்தி. குரம்பை - குடிசை.

55. தேவரீர் திருக்குறிப்பின்படி திருவடி சேர்வார் சேரப் புழுக்கூட்டைக் காத்துப் பொழுதுகழிக்கின்றேனே யான் என்று வருந்துகின்றார். கூடுவார் என்றது உடன்பயின்ற கணநாதர்களாகிய அடியார்களை.

60 உடையா னேநின் றனையுள்கி
யுள்ள முருகும் பெருங்காதல்
உடையா ருடையாய் நின்பாதஞ்
சேரக் கண்டிங் கூர்நாயின்
கடையா னேனெஞ் சுருகாதேன்
கல்லா மனத்தேன் கசியாதேன்
முடையார் புழுக்கூ டிதுகாத்திங்
கிருப்ப தாக முடித்தாயே. 56

61 முடித்த வாறும் என்றனக்கே
தக்க தேமுன் னடியாரைப்
பிடித்த வாறுஞ் சோராமற்
சோர னேனிங் கொருத்திவாய்
துடித்த வாறுந் துகிலிறையே
சோர்ந்த வாறும் முகங்குறுவேர்
பொடித்த வாறும் இவையுணர்ந்து
கேடென் றனக்கே சூழ்ந்தேனே. 57

---

56. பேரன்புபூண்ட பெரியோர்கள் பலரும் திருவடியைச் சேரவும் என்னைமட்டும் ஊர்நாயைப்போல உடலைக் காக்கவைத்து விட்டாயே என்று இரங்கிக் கூறுகின்றார். முடை - நாற்றம்.

57. அங்ஙனம் என்னை அகற்றியதும் எனக்குவேண்டியதே; அடியேன் தாழ்ந்த காமத்தாழ்ந்து அவதிப்படுவேனேஎன்று அரற்றுகின்றார். சோராமல் - கைநழுவவிடாமல். குறுவேர் - சிறுவியர்வை. துகில் - ஆடை. இறை - சிறிது.

62 தேனைப் பாலைக் கன்னலின்
  தெளியை யொளியைத் தெளிந்தார் தம்
ஊனை யுருக்கு முடையானை
  உம்ப ரானை வம்பனேன்
நானின் னடியேன் நீயென்னை
  யாண்டா யென்றால் அடியேற்குத்
தா னுஞ் சிரித்தே யருளலாந்
  தன்மை யாமென் றன்மையே. 58

63 தன்மை பிறரா லறியாத
  தலைவா பொல்லா நாயான
புன்மை யேனை யாண்டையா
  புறமே போக விடுவாயோ
என்னை நோக்கு வார்யாரே
  யென்னான் செய்கேன் எம்பெருமான்
பொன்னே திகழுந் திருமேனி
  யெந்தாய் எங்குப் புகுவேனே. 59

---

58. **நான் அடியான் நீ ஆண்டவன்** என்றால் அது சிரிப்பிற்கு இடமாகுமே என்றருளிச்செய்கின்றார். கன்னல் - கரும்பு. **தெளிந்தார்** - அநுபவஞானிகள். ஊன் - ஊனாகியஉடல்.

59. ஆட்கொண்ட தேவரீர் என்னைப் புறம்போகவிட்டால் நான் எங்குப்புகுவேன்? அடைக்கலம் யார்? என்கின்றார். **தன்மை பிறரால் அறியாத தலைவா** - பலதிறப்பட்ட ஆன்மாக்களின் அறிவால் அறியப்பெறாத தன்மையையுடைய தலைவனே. **பொல்லா நாய்** என்று நீ புறம் போகவிட்டாலும், நாய் தன் நாயகனை விடமாட்டாமை போல நானும் விடகில்லேன் என்பதாம்.

64 புகுவே னெனதே நின்பாதம்
போற்றும் அடியா ருண்ணின்று
நகுவேன் பண்டு தோணோக்கி
நாண மில்லா நாயினேன்
நெகுமன் பில்லை நினைக்காண
நீயாண் டருள அடியேனுந்
தகுவ னேயென் றன்மையே
யெந்தா யந்தோ தரியேனே. 60

திருச்சிற்றம்பலம்

## எ. காருணியத்திரங்கல்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

65 தரிக்கிலேன் காய வாழ்க்கை
சங்கரா போற்றி வான
விருத்தனே போற்றி யெங்கள்
விடலையே போற்றி ஒப்பில்
ஒருத்தனே போற்றி உம்பர்
தம்பிரான் போற்றி தில்லை
நிருத்தனே போற்றி எங்கள்
நின்மலா போற்றி போற்றி 61

---

60. அடியேனிடம் கனிந்த அன்பின்மையால் தேவரீரால் ஆட்கொள்ளத்தக்கவன் ஆவேனோ என்கின்றார். நகுவேன் - சிரிப்பேன். பண்டு - உடல்வனப்பிலும் இளமையிலும் ஆசைவைத்த அன்றைக்கு.

61. தனது இழிதகைமை யெண்ணி இரங்கிய அடிகளார் தன்னையும் அன்பர்களுள் ஒருவனாக ஏற்றுக்கொண்ட கருணைக்கு

66 போற்றியோ நமச்சி வாய
புயங்கனே மயங்கு கின்றேன்
போற்றியோ நமச்சி வாய
புகலிடம் பிறிதொன் றில்லை
போற்றியோ நமச்சி வாய
புறமெனைப் போக்கல் கண்டாய்
போற்றியோ நமச்சி வாய
சயசய போற்றி போற்றி. 62

67 போற்றியென் போலும் பொய்யர்
தம்மையாட் கொள்ளும் வள்ளல்
போற்றிநின் பாதம் போற்றி
நாதனே போற்றி போற்றி
போற்றிநின் கருணை வெள்ளப்
புதுமதுப் புவன நீர்தீக்
காற்றிய மானன் வானம்
இருசுடர்க் கடவு ளானே. 63

---

இரங்கி ஏத்துகின்றார். வானம் - பரவெளி. ஒப்பில் ஒருத்தன் - ஒப்பில்லாமையால் தான் ஒருவனேயானவன்.

62. புகலிடம் வேறிடமின்மையினால் புறம்போகச் செய்ய வேண்டாமென்று வேண்டிக்கொள்ளுகின்றார். போக்கல் - போக்காதே; எதிர்மறை ஏவல் வினைமுற்று.

63. அட்டமூர்த்திவடிவாக இருக்கின்ற ஆண்டவனே போற்றி என்றருளுகின்றார். வள்ளல் - கைம்மாறுகருதாது உபகரிப்பவன். கருணைவெள்ளப் புதுமது - இதுவரையில் நுகர்ந்தறியாத கருணை வெள்ளமாகிய அமுதம்

68 கடவுளே போற்றி யென்னைக்
கண்டுகொண் டருளு போற்றி
விடவுளே யுருக்கி யென்னை
யாண்டிட வேண்டும் போற்றி
உடலிது களைந்திட் டொல்லை
யும்பர்தந் தருளு போற்றி
சடையுளே கங்கை வைத்த
சங்கரா போற்றி போற்றி. 64

69 சங்கரா போற்றி மற்றோர்
சரணிலேன் போற்றி கோலப்
பொங்கரா வல்குற் செவ்வாய்
வெண்ணகைக் கரிய வாட்கண்
மங்கையோர் பங்க போற்றி
மால்விடை யூர்தி போற்றி
இங்கிவாழ் வாற்ற கில்லேன்
எம்பிரா னிழித்திட் டேனே. 65

---

64. வினைவயத்தால்வந்த உடலை வீழ்த்தி வீடு அருளவேண்டுகின்றார். கண்டுகொண்டருளு - எப்பொழுதும் திருவருணோக்கம் செய். விட - இருவகைப்பற்றுக்களும் அகல. உள் - மனம். உம்பர் - வீட்டுலகம்.

65. இவ்வுலகவாழ்வை வெறுத்தேன் வாழகில்லேன் என்று அருளவேண்டுமென்று வேண்டியருளுகின்றார். சரண் - பாதுகாப்பு. கோலம் - அழகு. பொங்கு அரா - சினத்தாற் சீறியெழும் பாம்பு. செவ்வாய் வெண்ணகைக் கரிய என்பதில் முரணணி வந்தவாறு காண்க.

70 இழித்தன னென்னை யானே
　　யெம்பிரான் போற்றி போற்றி
பழித்திலே னுன்னை யென்னை
　　யாளுடைப் பாதம் போற்றி
பிழைத்தவை பொறுக்கை யெல்லாம்
　　பெரியவர் கடமை போற்றி
ஒழித்திடிவ் வாழ்வு போற்றி
　　உம்பர்நாட் டெம்பி ரானே. 66

71 எம்பிரான் போற்றி வானத்
　　தவரவ ரேறு போற்றி
கொம்பரார் மருங்குன் மங்கை
　　கூறவெண் ணீற போற்றி
செம்பிரான் போற்றி தில்லைத்
　　திருச்சிற்றம் பலவ போற்றி
உம்பரா போற்றி யென்னை
　　யாளுடை யொருவ போற்றி. 67

---

66. தேவதேவ! யான்செய்தபிழை பொறுத்தல் பெரியோராகிய தேவரீர்கடமை என்கிறார். உம்பர்நாடு - வீட்டுலகம். இவ்வாழ்வு என்றது ஊன் உடலோடு கூடிய வாழ்வினை.

67. இறைவனது தன்மைகளை விளக்கி வணங்குகின்றார். கொம்பர் ஆர் - பூங்கொம்பை ஒத்த. மருங்குல் - இடை. கூற - இடப்பாகத்தில் உடையவனே. நீற - நீற்றினை யுடையவனே. தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாது விளங்குபவன் இறைவன் ஆதலின் ஒருவன் என்றார்.

72 ஒருவனே போற்றி ஒப்பி
லப்பனே போற்றி வானோர்
குருவனே போற்றி யெங்கள்
கோமளக் கொழுந்து போற்றி
வருகவென் றென்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி
தருகநின் பாதம் போற்றி
தமியனேன் தனிமை தீர்த்தே. 68

73 தீர்ந்தஅன் பாய அன்பர்க்
கவரினும் அன்ப போற்றி
பேர்ந்துமென் பொய்மை யாட்கொண்
டருளிடும் பெருமை போற்றி
வார்ந்தநஞ் சயின்று வானோர்க்
கமுதமீ வள்ளல் போற்றி
ஆர்ந்தநின் பாத நாயேற்
கருளிட வேண்டும் போற்றி. 69

74 போற்றியிப் புவன நீர்தீக்
காலொடு வான மானாய்
போற்றியெவ் வுயிர்க்குந் தோற்ற
மாகிநீ தோற்ற மில்லாய்

---

68. தேவரீர்! அடியேனை வாவென்றழைத்துப் பாதமருள வேண்டும் என்று விண்ணப்பிக்கின்றார். **வானோர் குருவன் - தேவர்களின் ஆசாரியன்.**

69. அன்பருக்கன்பனாய் வள்ளலாய் இருக்கும்பெரும! அடியேனுக்கு அடியிணை அருளவேண்டும் என்கின்றார். **தீர்ந்த அன்பு - முறுகிவளர்ந்த தலையன்பு. வார்ந்த - ஒழுகிய.**

போற்றியெல் லாவு யிர்க்கும்
ஈறுயீ றின்மை யானாய்
போற்றியைம் புலன்கள் நின்னைப்
புணர்கிலாப் புணர்க்கை யானே. 70

திருச்சிற்றம்பலம்

## அ. ஆனந்தத்தழுந்தல்

### எழுசீர் ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

75 புணர்ப்ப தொக்க எந்தை யென்னை
யாண்டு பூண நோக்கினாய்
புணர்ப்ப தன்றி தென்ற போது
நின்னொ டென்னொ டென்னிதாம்
புணர்ப்ப தாக அன்றி தாக
அன்பு நின்க ழற்கணே
புணர்ப்ப தாக அங்க ணாள
புங்க மான போகமே. 71

---

70. எல்லாமாய் அல்லவுமாய் இருக்கின்றவனே! புலன்கள் பொருந்தமுடியாதவனே! வணக்கம் என்கின்றார். புலன்கள் புணர்கிலாப் புணர்க்கையான் - மாயையின் காரியமாகிய விஷயங்கள் சென்று பற்றாத சேர்க்கையுடையவன்.

71. இறைவா! நீர் சிவானந்தபோகத்தில் சேர்த்துக்கொள்ளவோ மறுக்கவோ செய்யினும் அடியேன் தேவரீர் திருவடியில் இடையறா அன்பு பூணவேணும்; அருள்பாலியும்; அதுவே அடியேன்

76 போகம் வேண்டி வேண்டி லேன்பு
ரந்த ராதி யின்பமும்
ஏக நின்க ழலி ணைய
லாதி லேனெ னெம்பிரான்
ஆகம் விண்டு கம்பம் வந்து
குஞ்சி யஞ்ச லிக்கணே
யாக என்கை கண்கள் தாரை
யாற தாக ஐயனே. 72

77 ஐய நின்ன தல்ல தில்லை
மற்றோர் பற்று வஞ்சனேன்
பொய்க லந்த தல்ல தில்லை
பொய்மை யேனெ னெம்பிரான்
மைக லந்த கண்ணி பங்க
வந்து நின்க ழற்கணே
மெய்க லந்த அன்ப ரன்பெ
னக்கு மாக வேண்டுமே. 73

---

விரும்பும் பெரும்போகம் என்றருளிச்செய்கின்றார். புணர்ப்பது - சேர்த்துக்கொள்வது. புங்கம் - உயர்வு.

72. இந்திராதிபோகத்தை யான் விரும்பேன்; அரனே! நின் திருவடிக்கண் செய்யும் அன்புப் போகத்தை விரும்புகின்றேன் என்றருள்கின்றார். புரந்தரன் - இந்திரன். ஆகம் - உடல். குஞ்சி - முடி. தாரை ஆறதாக - கண்ணீரே இடைவிடாத நீர்ப்பெருக்குடைய ஆறாக.

73. நின் அடிக்கண் மெய்யடியார்வைத்த அன்பு அடியேற்கும் ஆகவேண்டுமென்று அருளிச்செய்கின்றார்.

78 வேண்டு நின்க ழற்க ணன்பு
பொய்மை தீர்த்து மெய்மையே
ஆண்டு கொண்டு நாயி னேனை
யாவ வென்ற ருளுநீ
பூண்டுகொண் டடிய னேனும் போற்றி
போற்றி யென்று மென்று
மாண்டு மாண்டு வந்து வந்து
மன்ன நின்வ ணங்கவே. 74

79 வணங்கு நின்னை மண்ணும் விண்ணும்
வேத நான்கு மோலமிட்
டுணங்கு நின்னை யெய்த லுற்று
மற்றொ ருண்மை யின்மையின்
வணங்கி யாம்வி டேங்க ளென்ன
வந்து நின்ற ருளுதற்
கிணங்கு கொங்கை மங்கை பங்க
என்கொ லோநி னைப்பதே. 75

---

74. பல பிறவிகள் எடுத்தாலும் யான் வேண்டுவது நின் திருவடிக்கண்அன்பே என்கின்றார். ஆவ என்று - கருணைகாட்டி; இரக்கக் குறிப்பிடைச்சொல். ஆண்டு - வந்துபிறந்து.

75. வேதங்கள் ஓலமிட்டும் அறியப்படாதவரும், எல்லாராலும் வணங்கப்படும் தன்மையையுடையவரும் ஆகிய தேவரீரை யடைந்தும் நெருங்கத் தடையாயிருப்பது என்னோ என்கின்றார். உணங்கும் - நாவற்றும். விடேங்கள் - விடமாட்டோம். ஓலம் - அபயம்.

80 நினைப்ப தாக சிந்தை செல்லும்
எல்லை யேய வாக்கினால்
தினைத்த னையு மாவ தில்லை
சொல்ல லாவ கேட்பவே
அனைத் துலகு மாய நின்னை
யைம்பு லன்கள் காண்கிலா
எனைத்தெ னைத்த தெப்பு றத்த
தெந்தை பாதம் எய்தவே. 76

81 எய்த லாவ தென்று நின்னை
யெம்பி ரானிவ் வஞ்சனேற்
குய்த லாவ துன்க ணன்றி
மற்றொ ருண்மை யின்மையிற்
பைத லாவ தென்று பாது
காத்தி ரங்கு பாவியேற்
கீத லாது நின்க ணொன்றும்
வண்ண மில்லை யீசனே. 77

---

76. திருவடியைச்சேர்வதற்குத் திருவருளைத்துணைக்கொள்வதன்றி எம்மால் செய்யத்தக்கது ஒன்றுமில்லை என்கின்றார். புலன்கள் காண்கிலா என்றது மாயாகாரியமாகிய இந்திரியங்கள்சென்று இறைவனைப்பற்றா என்பது குறித்து. இறைவன் திருவடியடைய அதன் தன்மையும் நிலையும் அடியேனால் அறியப்பெற்றில என்பதாம்.

77. அடியேற்கு அருளும் பரிசாவது எப்பொழுதும் ஒன்றிய இன்பத்தை உதவுதலே என்கின்றார். உய்தல் - பிறவித் துன்பம் நீங்கித் திருவடிக்கண் இன்புறுதல். பைதல் - துன்பம். ஒன்றும் வண்ணம் - பொருந்தும்படியாக.

82 ஈச னேநீ யல்ல தில்லை
யிங்கு மங்கு மென்பதும்
பேசி னேனொர் பேத மின்மை
பேதை யேனெ னெம்பிரான்
நீச னேனை யாண்டு கொண்ட
நின்ம லாவொர் நின்னலால்
தேச னேயொர் தேவ ருண்மை
சிந்தி யாது சிந்தையே. 78

83 சிந்தை செய்கை கேள்வி வாக்குச்
சீரி லைம்பு லன்களான்
முந்தை யான கால நின்னை
யெய்தி டாத மூர்க்கனேன்
வெந்தை யாவி ழுந்தி லேனெ
னுள்ளம் வெள்கி விண்டிலேன்
எந்தை யாய நின்னை யின்னம்
எய்த லுற்றி ருப்பனே. 79

---

78. சிவனையன்றித் தெய்வமொன்றுளதாக என் சிந்தை சிந்தியாது என்றருளுகின்றார். பேதம் - வேறுபாடு. நீசன் - இழிந்தவன்.

79. முன்னமேயே தேவரீரையடையாத மூர்க்கனாகிய யான் இப்பொழுதேனும் உம்மையடையலாம் என எதிர்நோக்கியிருக்கின்றேன் என்கின்றார். முந்தை - முற்பிறவி. ஐயா வெந்து விழுந்திலேன் எனப்பிரிக்க. வெள்கி - வெட்கி. கடமையைத் தவறியவர்கள் வெட்கப்படுதல் இயற்கை.

84 இருப்பு நெஞ்ச வஞ்ச னேனை
யாண்டு கொண்ட நின்னதாட்
கருப்பு மட்டு வாய்ம டுத்தெ
னைக்க லந்து போகவும்
நெருப்பு முண்டி யானு முண்டி
ருந்த துண்ட தாயினும்
விருப்பு முண்டு நின்க ணென்க
ணென்ப தென்ன விச்சையே. 80

திருச்சிற்றம்பலம்

## ௯. ஆனந்தபரவசம்

### கலிநிலைத்துறை

திருச்சிற்றம்பலம்

85 விச்சுக் கேடு பொய்க்காகா
தென்றிங் கெனைவைத்தாய்
இச்சைக் கானா ரெல்லாரும்
வந்துன் றாள்சேர்ந்தார்
அச்சத் தாலே யாழ்ந்திடு
கின்றேன் ஆரூரெம்
பிச்சைத் தேவா என்னான்
செய்கேன் பேசாயே. 81

---

80. இரும்புமனத்தடியேனை ஆட்கொண்ட தேவரீர் சிவானந்தத்தை அளித்துப் பிரிந்துபோகவும் உயிருடனிருக்கின்றேன் என்றருளுகின்றார். கருப்பு மட்டு - கருப்பஞ்சாறு.

81. வித்தட்டுண்ணுதல் கூடாதென்று அடியேனை நிறுத்தி ஏனையோரைத் திருவடிக்கண் சேர்த்துக்கொண்டாய் யான் என்

86 பேசப் பட்டே னின்னடி
யாரிற் றிருநீறே
பூசப் பட்டேன் பூதல
ரா லுன் னடியானென்
றேசப் பட்டே னினிப்படு
கின்ற தமையா தால்
ஆசைப் பட்டே னாட்பட்
டேனுன் னடியேனே. 82

87 அடியே னல்லேன் கொல்லோ தானெனை
யாட்கொண் டிலைகொல்லோ
அடியா ராவா ரெல்லாரும்
வந்துன் றாள்சேர்ந்தார்
செடிசே ருடல மிதுநீக்கமாட்டே
னெங்கள் சிவலோகா
கடியே னுன்னைக் கண்ணாரக்
காணுமா று காணேனே. 83

---

செய்வேன் என்கின்றார். விச்சுக்கேடு - விதையினழிவு. இச்சைக் கானார் - கருணைக்கிலக்கானார்.

82. பெரியோரால் அடியாருள் ஒருவனாகக் கருதப்பட்ட யான் இனியும் அல்லற்படுதல் ஆகாது; ஆட்கொள்ளவேண்டுமென்கிறார். பூதலர் - பூமியிலுள்ள மக்கள். பேசப்பட்டேன் - புகழ்ந்து பேசப் பட்டேன்.

83. அடியார்களனைவரும் உன் திருவடியடைந்தமையால் யான் அடியவனல்லனோ நீ ஆட்கொள்ளவில்லையோ அருளுக என்கின்றார். செடி - முடைநாற்றம்; துன்பமுமாம். கடியேன் - கொடியவன்.

88 காணு மாறு காணேனுன்னை
யந்நாட் கண்டேனும்
பாணே பேசி யென்றன்னைப்
படுத்ததென்ன பரஞ்சோதி
ஆணே பெண்ணே யாரமுதே
யத்தாசெத்தே போயினேன்
ஏணா ணில்லா நாயினேன்
என்கொண்டெழுகேன் எம்மானே. 84

89 மானேர் நோக்கி யுடையாள்பங்கா
மறையீ றறியா மறையோனே
தேனே யமுதே சிந்தைக்கரியாய்
சிறியேன் பிழைபொறுக்குங்
கோனே சிறிதே கொடுமைபறைந்தேன்
சிவமா நகர்குறுகப்
போனா ரடியார் யானும்பொய்யும்
புறமே போந்தோமே. 85

---

84. குருந்தமரத்திற் கண்டகாலத்தும் கூடியிருந்த காலத்தும் காணுமாறு காணாது பாண்பேசிப் பாழாயினேன் என்றலமருகின்றார். பாண் - இச்சகம். ஏண் - ஆற்றல். நாண் - நாணம்.

85. அடியார்கள் சிவபுரம் சேர்ந்தார்கள்; யானும் என்னுடைய பொய்யுமே தனித்துப் புறம்போயினோம் என்கின்றார். மறையீறு - உபநிடதம். பிழைபொறுக்கும்கோன் என்றது ஒறுத்தலே அரசர்க்கு இலக்கணமன்று பொறுத்தலுமாமென ஏற்பித்தவாறு. பறைந்தேன் - சொன்னேன்.

90 புறமே போந்தோம் பொய்யும்
யானு மெய்யன்பு
பெறவே வல்லே னல்லா
வண்ணம் பெற்றேன்யான்
அறவே நின்னைச் சேர்ந்தவடியார்
மற்றொன் றறியா தார்
சிறவே செய்து வழிவந்துசிவனே
நின்றாள் சேர்ந்தாரே. 86

91 தாரா யுடையா யடியேற்
குன்றா ளிணையன்பு
பேரா வுலகம் புக்காரடியார்
புறமே போந்தேன்யான்
ஊரா மிலைக்கக் குருட்டா மிலைத்தாங்
குன்றா ளிணையன்புக்
காரா யடியே னயலே
மயல்கொண் டழுகேனே. 87

---

86. சிறப்புச் செய்தார் திருவடியடைந்தார்; யான் புறம்போந்தேன் அதனால் உண்மையன்புகூடப் பெறத்தகாதவன் ஆயினேன் என்கின்றார். சிறவு - சிறப்பு. மற்றொன்று - பொய்.

87. ஊர்ப்பசுகனைக்க, குருட்டுப்பசுவும் கூடக்கனைத்ததுபோல அடியாரோடு திருவடியடைதற்கு யானும் ஆசைப்படுகின்றேன் ஆட்கொள்ள வேண்டுமென்கின்றார். உடையாய் உன்தாளிணை யன்பு தாராய் எனக்கூட்டுக. மிலைக்க - கனைக்க. ஆரா - பொருந்தாத.

92 அழுதே னின்பா லன்பா
மனமா யழல்சேர்ந்த
மெழுகே யன்னார் மின்னார்
பொன்னார் கழல்கண்டு
தொழுதே யுன்னைத் தொடர்ந்தா
ரோடுந் தொடராதே
பழுதே பிறந்தே னென்கொண்
டுன்னைப் பணிகேனே. 88

93 பணிவார் பிணிதீர்த் தருளிப்
பழைய வடியார்க்குன்
அணியார் பாதங் கொடுத்தி
அதுவும் அரிதென்றால்
திணியார் மூங்கி லனையேன்
வினையைப் பொடியாக்கித்
தணியார் பாதம் வந்தொல்லைதாராய்
பொய்தீர் மெய்யானே. 89

---

88. போவாரோடு கூடப்போகாமல் புறம்போந்தேன்; எனைக் கொண்டு நின்னை வணங்குவேன் என்கின்றார். மின்னார் நிறல் பொன்னார் நிழல் எனத் தனித்தனிக் கூட்டுக. பழுதே பிறந்தேன - பயனின்றிப் பிறந்தேன்.

89. அடியார்களைத் திருவடியடைவித்தது ஒரு அருமையான தல்ல; வினைசூழ்ந்த அடியேனை வினைநீக்கி ஆட்கொள்ளுதலே நின் பெருமைக்குத் தக்கது என்றருளுகின்றார். அணியார்பாதம் - அழகியபாதம். திணியார் மூங்கில் - கல் மூங்கில் (வலிய மூங்கில்) கல்மூங்கில் முட்களால் யாரும் அணுக ஒட்டாமல் தடுப்பதுபோல என் வினை தடுக்கிறது. ஆதலின் அதனை வெட்டியெறிவது தேவரீர் கடமை என்கிறார். தணி - குளிர்ந்த.

94 யானே பொய்யென் னெஞ்சும்
பொய்யென் அன்பும்பொய்
யானால் வினையே னழுதா
னுன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின்
றெளிவே தித்திக்கு
மானே யருளா யடியே
னுனைவந் துறுமாறே. 90

திருச்சிற்றம்பலம்

## ௰. ஆனந்தாதீதம்

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

95 மாறி லாதமாக் கருணை வெள்ளமே
வந்து முந்திநின் மலர்கொ டாளினை
வேறி லாப்பதப் பரிசு பெற்றநின்
மெய்ம்மை யன்பருன் மெய்ம்மை மேவினார்
ஈறி லாதநீ யெளியை யாகிவந்
தொளிசெய் மானுட மாக நோக்கியும்
கீறி லாதநெஞ் சுடைய நாயினேன்
கடைய னாயினேன் பட்ட கீழ்மையே. 91

---

90. யானும் என் நெஞ்சும் என் அன்புமாய எல்லாம் பொய் ஆனாலும் அழுதால் உன்னையடையலாமல்லவா அல்லது உன்னை அடையும் உண்மையில்லை உரைத்தருள்கவென்று வேண்டுகின்றார். மானே - பெரியன யாவற்றிற்கும் பெரியவனே.

91. இறைவன் எளிவந்த கருணையால் மானுடச் சட்டை சாத்திவந்து உபதேசித்தும் கடைப்பட்டமைக்குக் கவல்கின்றார். கீறிலாத - பதிவு இலாத.

**96** மையி லங்குநற் கண்ணி பங்கனே
வந்தெ னைப்பணி கொண்ட பின்மழக்
கையி லங்குபொற் கிண்ண மென்றலால்
அரியை யென்றுனைக் கருது கின்றிலேன்
மெய்யி லங்குவெண் ணீற்று மேனியாய்
மெய்மை யன்பருன் மெய்மை மேவினார்
பொய்யி லங்கெனைப் புகுத விட்டுநீ
போவ தோசொலாய் பொருத்த மாவதே. 92

**97** பொருத்த மின்மையேன் பொய்மை யுண்மையேன்
போத வென்றெனைப் புரிந்து நோக்கவும்
வருத்த மின்மையேன் வஞ்ச முண்மையேன்
மாண்டி லேன்மலர்க் கமல பாதனே
அரத்த மேனியாய் அருள்செ யன்பரும்
நீயு மங்கெழுந் தருளி யிங்கெனை
இருத்தி னாய்முறை யோவெ னெம்பிரான்
வம்ப னேன்வினைக் கிறுதி யில்லையே. 93

---

92. நீ யாட்கொண்ட பிறகு குழந்தைகைப் பொற்கிண்ணம் போல மிகஎளியையாக உன்னை எண்ணினேன்; அதனால்என்னைவிட்டு நீ பிரிந்தாய் இது பொருத்தமோ எனப் புகல்கின்றார். மழக்கை - குழந்தையின்கை. அரியை - அருமையையுடையை.

93. என் வஞ்சம் காரணமாக என்னை இங்கேயேயிருத்தி இறைவா அடியாரோடு நீ பிரிந்தனை; அங்ஙனம் தடைசெய்த வினைக்கு இறுதியில்லையா என்கின்றார். பொருத்தம் - தகுதி. போத - வருக. அரத்தம் - சிவப்பு. வம்பனேன் - வீணன்.

98 இல்லை நின்கழற் கன்ப தென்கணே
ஏல மேலுநற் குழலி பங்கனே
கல்லை மென்கனி யாக்கும் விச்சைகொண்
டென்னை நின்கழற் கன்ப னாக்கினாய்
எல்லை யில்லைநின் கருணை யெம்பிரான்
ஏது கொண்டுநா னேது செய்யினும்
வல்லை யேயெனக் கின்னு முன்கழல்
காட்டி மீட்கவும் மறுவில் வானனே. 94

99 வான நாடரும் அறியொ ணாதநீ
மறையி லீறுமுன் தொடரொ ணாதநீ
ஏனை நாடருந் தெரியொ ணாதநீ
என்னை யின்னிதா யாண்டு கொண்டவா
ஊனை நாடக மாடு வித்தவா
உருகி நானுனைப் பருக வைத்தவா
ஞான நாடக மாடு வித்தவா
நைய வையகத் துடைய விச்சையே. 95

---

94. பெருங்கருணைக்கடலாகிய தேவரீர் ஆட்கொண்டு அன்பனாக்கிய வண்ணமே மீட்டும் கழல்காட்டிக் கருணைபுரியவேண்டுமென வேண்டுகின்றார். ஏலம்-மயிர்ச்சாந்து. கல்லைமென்கனியாக்கும் விச்சை - சுவையற்ற வலியதொன்றைச் சுவையுள்ளமெலியதாக்கும் வித்தை. மறுவில்வானன் - குற்றமில்லாத ஞானகாயவடிவினன்.

95. அரியனவற்றிற்கெல்லாம் அரிய பொருளாக இருக்கின்ற நீ இனிமையாக என்னை ஆட்கொண்டது எளிவந்தகருணையாலேயே என்று விண்ணப்பிக்கின்றவர் அநுபவ இன்பங்களை முறையே அறிவிக்கின்றார். ஏனைநாடர் - வானநாடு நீங்கிய ஏனைய நாட்டிலுள்ளவர்கள். இன்னிதாய் - இனிமையாய். ஊனை நாடகம் ஆடுவித்தவா - உடலைத் தந்து உலக அரங்கில் வினைக்கீடாக நடிக்கச்செய்த விதம். வையகத்துடைய இச்சை - உலக வித்தைகள். நையவே - அழிந்து இல்லையாம்படியே.

**100** விச்ச தின்றியே விளைவு செய்குவாய்
விண்ணு மண்ணக முழுதும் யாவையும்
வைச்சு வாங்குவாய் வஞ்ச கப்பெரும்
புலைய னேனையுன் கோயில் வாயிலிற்
பிச்ச னாக்கினாய் பெரிய அன்பருக்
குரிய னாக்கினாய் தாம்வ ளர்த்ததோர்
நச்சு மாமர மாயி னுங்கொலார்
நானும் அங்ஙனே யுடைய நாதனே. 96

**101** உடைய நாதனே போற்றி நின்னலாற்
பற்று மற்றெனக் காவ தொன்றினி
உடைய னேபணி போற்றி உம்பரார்
தம்ப ராபரா போற்றி யாரினும்
கடைய னாயினேன் போற்றி யென்பெருங்
கருணை யாளனே போற்றி யென்னைநின்
அடிய னாக்கினாய் போற்றி ஆதியும்
அந்த மாயினாய் போற்றி யப்பனே. 97

---

96. பெரியவர்கள் தாம் வளர்த்த நச்சுமரத்தையும் கொல்லார்கள்; அதுபோல அடியேனும் உம்மால் பாதுகாக்கப் பெற்றவன்; ஒதுக்கலாது என்றருள்கின்றார். விச்சு - வித்து. முதலுற்பவத்திற்கு பெரு நோக்காகக் கருதுமிடத்து அடியறியப்படாமையின் விச்ச தின்றியே விளைவு செய்குவாய் என்றார். சிவஞானபோதமாபாடியத்துள் சுவாமிகள் இறைவன் மாயையின்றியே திருமேனி கொள்ளும் முறை உணர்த்தியதாகவும், தன்னையே தாரகமாகக் கொண்டு வேறின்றி உடனிற்பதாகிய மாயையினின்றும் விளைவு செய்குவாயென்றும் கருத்தாகலாம் என்பர். வைச்சு வாங்குவாய்-நிலைபெறுத்தி அழிப்பாய்.

97. நீ புறக்கணித்தால் பற்றலாவதோர் மற்றிடம் எதுஎன்று விண்ணப்பித்தருளுகின்றார். பணி - கட்டளையிடு. உம்பரார் - தேவர்.

102 அப்ப னேயெனக் கமுத னேயா
னந்த னேயக நெகவள் ளூறுதேன்
ஒப்ப னேயுனக் குரிய அன்பரில்
உரிய னாயுனைப் பருக நின்றதோர்
துப்ப னேசுடர் முடிய னேதுணை
யாள னேதொழும் பாள ரெய்ப்பினில்
வைப்ப னேயெனை வைப்ப தோசொலாய்
நைய வையகத் தெங்கள் மன்னனே. 98

103 மன்ன வெம்பிரான் வருக வென்னெனை
மாலு நான்முகத் தொருவன் யாரினும்
முன்ன வெம்பிரான் வருக வென்னெனை
முழுதும் யாவையு மிறுதி யுற்றநாட்
பின்ன வெம்பிரான் வருக வென்னெனைப்
பெய்க ழற்கணன் பாயெ னாவினாற்
பன்ன வெம்பிரான் வருக வென்னெனைப்
பாவ நாசநின் சீர்கள் பாடவே. 99

---

98. அடியேனை இவ்வுலகத்து நையவைப்பது முறையாகுமா என்று விண்ணப்பித்தருளுகின்றார். துப்பன் - உணவாயுள்ளவன். தொழும்பாளர் - அடியார். எய்ப்பினில்வைப்பு - இளைத்த காலத்தில் உதவும் சேமநிதி.

99. எம்பிரான்! என்னை வருகவென் றழைத்து நின்கீர்த்திகளைப் பாடப் பணி என்று வேண்டிக்கொள்கின்றார். எனை வருக என் என மாறிக்கூட்டுக. முன்ன - முன்னவனே. பின்ன - பின்னவனே. பன்ன - பலகாலம் சொல்ல.

104 பாட வேண்டுநான் போற்றி நின்னையே
பாடி நைந்துநைந் துருகி நெக்குநெக்
காட வேண்டுநான் போற்றி யம்பலத்
தாடு நின்கழற் போது நாயினேன்
கூட வேண்டுநான் போற்றி யிப்புழுக்
கூடு நீக்கெனைப் போற்றி பொய்யெலாம்
வீட வேண்டுநான் போற்றி வீடுதந்
தருளு போற்றிநின் மெய்யர் மெய்யனே.

திருச்சிற்றம்பலம்

---

100. அடியேனது தொழிற்பாடு நின்னைப் பாடுதலும் உருகி ஆடுதலுமே ஆதலின் தேவரீர் வீடுதந்தருள வேண்டும் என்று வேண்டிக்கொள்கின்றார். வீட - அழிய. புழுக்கூடு - புழுக்களுக்கு உறைவிடமாகிய உடல்.

உ
சிவமயம்

# 6. நீத்தல்விண்ணப்பம்

[பிரபஞ்சவைராக்கியம்]

உத்தரகோசமங்கையில் அருளியது.

[அடிகளார் திருச் சதகத்தைத் திருப்பெருந்துறையில் அருளிச்செய்து தனித்திருந்தகாலத்து, இறைவன் தமக்கு அன்று அருளிச்செய்த ஆணையை அகத்துக்கொண்டனர். உத்தரகோச மங்கை அடைந்தார். கோயிலிற்புகுந்து அங்கே அடிமை கொண்ட ஆண்டவனைக் காணாது மயங்கினர். 'அடியேன் பெற்ற பேறு இவ்வளவுதானோ' என்று பெருமூச்சு விட்டார். செயலற்றுக் கீழே விழுந்தார். என்னை விட்டு விடுகின்றாயோ என இறைவனை நோக்கி நைந்தார். நீத்தல் விண்ணப்பமாகிய இப்பதிகத்தைப் பாடியருளுகின்றார். அப்போது இறைவன் கருப்பஞ்சாற்றையும் தேவாமிர்தத்தை யும் பாலையும் ஒத்து என்றும் இனிப்பருத தம்திருமேனியைக் காட்டியருளினார், கண்டு மகிழ்ந்த அடிகள் அத்தலத்திலேயே சிலநாள் எழுந்தருளியிருந்தனர்.]

கட்டளைக் கலித்துறை

திருச்சிற்றம்பலம்.

105 கடையவ னேனைக் கருணையி
னாற்கலந் தாண்டுகொண்ட
விடையவ னேவிட் டிடுதிகண்
டாய்விறல் வேங்கையின்றோல்

உடையவ னேமன்னு முத்தர
கோசமங் கைக்கரசே
சடையவ னேதளர்ந் தேனெம்பிரா
னென்னைத் தாங்கிக்கொள்ளே. 1

106 கொள்ளேர் பிளவக லாத்தடங்
கொங்கையர் கொவ்வைச்செவ்வாய்
விள்ளே னெனினும் விடுதிகண்
டாய்நின் விழுத்தொழும்பின்
உள்ளேன் புறமல்லேன் உத்தர
கோசமங் கைக்கரசே
கள்ளே னொழியவுங் கண்டுகொண்
டாண்டதெக் காரணமே. 2

---

1. கருணையினுற் கலந்து ஆண்டுகொண்டதுபோலத் தகுதி யின்மை கண்டு தள்ளிவிடாது தாங்கிக்கொள்ள வேண்டுகின்ருர். கலந்து - உயிரோடு உள்ளும் புறமும் கலந்து. விடையவன் - இடப வாகன முடையவன். தான் கருணைவேண்டுகின்ருராதலின் அறவடி வான இடபத்தின்மேலவராக அழைக்கின்ருர். விறல் வேங்கை - வலியபுலி. தளர்ந்தேன் - அடியேனை மலவாதனைதாக்கத் தளர்ந்தேன்.

2. பொறிவழிப்பட்டுப் போகத்துள் நான் அழுந்துவேனுயினும் புறமல்லாதவன்; நின் அடியானே; ஆதலின் தாங்கிக்கொள் என்கின் ருர். கொள் ஏர் பிளவு அகலாத் தடங்கொங்கை - கொள்ளின்பிளவு அளவுகூட அகலாத கொங்கை. கொள் ஏர்பு இளவு அகலா எனப் பிரித்து எழுச்சிகொண்ட இளமை நீங்காத கொங்கை என்றுரைப் பாரும் உளர். விள்ளேன் - விட்டுநீங்கேன். விழுத்தொழும்பு - பெருமைக்கு ஏதுவாகிய அடிமை. சிவனுக்குத்தொழும்பனென்று சொல்வதில் ஓர் சிறப்புண்டல்லவா அதனைக்குறித்து நின்றது. ஒழியவும் - பிரிந்திருக்கவும்.

107 காருறு கண்ணிய ளைம்புல
னாற்றங் கரைமரமாய்
வேருறு வேனை விடுதிகண்
டாய்விளங் குந்திருவா
ரூருறை வாய்மன் னும் உத்தர
கோசமங் கைக்கரசே
வாருறு பூண்முலை யாள்பங்க
வென்னை வளர்ப்பவனே. 3

108 வளர்கின்ற நின்கரு ணைக்கையில்
வாங்கவு நீங்கியிப்பான்
மிளிர்கின்ற வென்னை விடுதிகண்
டாய்வெண் மதிக்கொழுந்தொன்
றொளிர்கின்ற நீண்முடி யுத்தர
கோசமங் கைக்கரசே
தெளிகின்ற பொன்னுமின் னும்மன்ன
தோற்றச் செழுஞ்சுடரே. 4

---

3. ஆற்றங்கரை மரமாக வேரற்றிருக்கின்ற என்னை விடுதி கண்டாய் என்கின்றார். காருறு கண்ணியர் - கரிய கண்ணியர்; மேகம் போல நீர்துளிக்கும் கண்ணியர் என்று அவர்கள் சாகசத்தை விளக்கியவாறு என்பாருமுளர். தன்னை மரம் என்றதற்கேற்ப 'என்னைவளர்ப்பவனே' என்றார். மரத்திற்கு இடையூறுவர வளர்ப்பவன் வாளா இருத்தலாகாது என்பது குறிப்பு.

4. கருணையால் அடியேனைத் தாங்கவும் அப் பிடியிலிருந்து விலகிக் கீழ் நோக்குகின்றேன்; அந்நிலையிலிருந்து காக்கவேண்டும் என்கின்றார். வாங்கவும் - வளைத்துப் பிடிக்கவும். மிளிர்கின்ற - விளங்குகின்ற.

109 செழிகின்ற தீப்புகு விட்டிலிற்
சின்மொழி யாரிற்பன்னாள்
விழுகின்ற வென்னை விடுதிகண்
டாய்வெறி வாயறுகால்
உழுகின்ற பூமுடி யுத்தர
கோசமங் கைக்கரசே
வழிநின்று நின்னரு ளாரமு
தூட்ட மறுத்தனனே. 5

110 மறுத்தனன் யானுன் னருளறி
யாமையி லென்மணியே
வெறுத்தெனை நீவிட் டிடுதிகண்
டாய்வினை யின்றொகுதி
ஒறுத்தெனை யாண்டுகொள் உத்தர
கோசமங் கைக்கரசே
பொறுப்பரன் றேபெரி யோர்சிறு
நாய்கடம் பொய்யினையே. 6

---

5. விளக்கில் வீழும் விட்டிலைப் போலப் பொறியுணர்ச்சியில் பொருந்துகின்ற என்னை விடுதிகண்டாய்; அடியேன் அமுதமூட்டவும் வேண்டாமென்றுமறுத்தலின் பேரறிவிலன் என்பதைத் திருவுள்ளமறியுமே என்கின்றார். செழிகின்ற - வளர்கின்ற. சின்மொழியார் - சிலவாகிய சொற்களைப் பேசுகின்ற பெண்கள். வெறி - மணம். அறுகால் - வண்டு. ஊட்ட - உண்பிக்க. வழிநின்று ஊட்ட என்பது உணவை மறுக்கும் குழந்தைகளைப் பலர்போகும் வழிக்கரையில் வைத்து உண்பிக்கும் தாயினைப்போல உண்பித்த கருணைத்திறம் காட்டியவாறு.

6. சிறியோர் பிழையைப் பெரியோர் பொறுப்பது இயல்பாதலால் என்னை எற்றுக்கொள்ளத்தான் வேண்டும் என்கின்றார். வினையின் தொகுதி அறுத்து ஆண்டுகொள் என்றது அடியேன் உன் அருளை மறுத்ததும் என்வினைக் கூட்டத்தால்; என்பிழையன்று அவற்றை நீக்கின் அருளாரமுதத்தை மிக உண்பேன் என்ற குறிப்பொடு. ஒறுத்து - அடக்கி.

111 பொய்யவ னேனைப் பொருளென
வாண்டொன்று பொத்திக்கொண்ட
மெய்யவ னேவிட் டிடுதிகண்
டாய்விட முண்மிடற்று
மையவ னேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
செய்யவ னேசிவ னேசிறி
யேன்பவந் தீர்ப்பவனே. 7

112 தீர்க்கின்ற வாறென் பிழையைநின்
சீரரு ளென்கொலென்று
வேர்க்கின்ற வென்னை விடுதிகண்
டாய்விர வார்வெருவ
ஆர்க்கின்ற தார்விடை யுத்தர
கோசமங் கைக்கரசே
ஈர்க்கின்ற வஞ்சொடச் சம்வினை
யேனை யிருதலையே. 8

---

7. அடியேனை ஒருபொருளாகக்கொண்டு ஆண்ட மெய்யவனே என்னை விடுதி கண்டாய் என்கின்றார். பொத்திக்கொண்ட - மறைத்துக்கொண்ட. ஒன்று - முத்தி. பவம் - பிறவி. விடம் உண் மிடற்றவனே என்றது ஆகாத விடத்தையும் உண்டு கழுத்தில் அழ காகக்கொண்ட தேவரீருக்கு அடியேனை யேற்றுக்கொள்ளுதல் பிழை யாகாது என்ற கருத்துப்பற்றி.

8. தேவரீர் திருவருள் என்றைக்கு என்பிழை தீர்த்து ஏற்றுக் கொள்ளும் என்கின்றார். வேர்க்கின்ற - மனம் புழுங்குகின்ற. விரவார் - பகைவர். வினையேனை அஞ்சொடு அச்சம் இருதலை ஈர்க்கின்ற என மாறிக்கூட்டுக. தார் விடை - கிண்கிணிமாலை அணிந்த இடபம்.

113 இருதலைக் கொள்ளியி னுள்ளெறும்
பொத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண்
டாய்வியன் மூவுலகுக்
கொருதலை வாமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
பொருதலை மூவிலை வேல்வல
னேந்திப் பொலிபவனே. 9

114 பொலிகின்ற நின்றாள் புகுதப்பெற்
றாக்கையைப் போக்கப்பெற்று
மெலிகின்ற வென்னை விடுதிகண்
டாயளி தேர்விளரி
ஒலிநின்ற பூம்பொழி லுத்தர
கோசமங் கைக்கரசே
வலிநின்ற திண்சிலை யாலெரித்
தாய்புர மாறுபட்டே. 10

---

9. தலைவ! இருதலைக்கொள்ளிக்குள் இருக்கும் எறும்பினை ஒத்தஎன்னை விடுதிகண்டாய் என்கின்றார். இருதலைக்கொள்ளியின் உள் எறும்பு - இருபக்கமும் தீப்பிடித்த கட்டைக்குள் இருக்கும் எறும்பு. கடவுளைப் பிரிந்தகாலத்து மனம் ஒருமைப்பாட்டினின்றும் நீங்கிபொறிஉணர்ச்சிதோறும் சென்று பற்றுதலின் விரிந்த அறிவினை உடையேன் என்பார் விரிதலையேன் என்றார்.

10. திருவடிக்கண்பூண்டு மெலிகின்ற அடியேனையும் விடுதி கண்டாய் என்கிறார். அளி - வண்டு. விளரி - ஏழு இசையில் ஒன்று. வலிநின்றதிண் சிலை - வலித்தற்றொழில்நீங்கிய வலிய வில். வலித்த லாவது இழுத்துவளைத்தல். இறைவன் முப்புரங்களைச்சிரித்தெரித்தா ராதலின் வில் வளைக்கப்படவில்லை; கைக்கு அணியாயிற்று ஆதலால்.

115 மாறுபட் டஞ்சென்னை வஞ்சிப்ப
யானுன் மணிமலர்த்தாள்
வேறுபட் டேனை விடுதிகண்
டாய்வினை யேன்மனத்தே
ஊறுமட் டேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
நீறுபட் டேயொளி காட்டும்பொன்
மேனி நெடுந்தகையே. 11

116 நெடுந்தகை நீயென்னை யாட்கொள்ள
யானைம் புலன்கள் கொண்டு
விடுந்தகை யேனை விடுதிகண்
டாய்விர வார்வெருவ
அடுந்தகை வேல்வல்ல வுத்தர
கோசமங் கைக்கரசே
கடுந்தகை யேனுண் ணுந் தெண்ணீ
ரமுதப் பெருங்கடலே. 12

---

11. ஐம்புலன்களும் வஞ்சனைசெய்ய அவதிப்படுகின்ற அடியேனைக் கைவிட்டுவிடாதே என்கின்றார். அஞ்சு - பஞ்சேந்திரியங்கள். மட்டே - தேனே. நீறுபட்டு - திருநீற்றிற்பொருந்தி. வேறுபட்டேனை - பிரிந்த என்னை.

12. தீயவனுகிய யானும் உண்ணக்கிடைத்த தெள்ளமுதப் பெருங்கடலே! நீ என்னை ஆட்கொள்ள யான் புலன்களைக் கைக்கொண்டு நின்னைவிட்டேன்; நீ என்னைவிட்டாய்; அது கூடாதென்கிறார். விரவார் - பகைவர். அடுந்தகை - கொல்லுந்தன்மை. கடுந்தகையேன் - தீயகுணமுள்ள யான்.

117 கடலினுள் நாய்நக்கி யாங்குன்
கருணைக் கடலினுள்ளம்
விடலரி யேனை விடுதிகண்
டாய்விட லில்லடியார்
உடலில மேமன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
மடலின்மட் டேமணி யேயமு
தேயென் மதுவெள்ளமே. 13

118 வெள்ளத் துணுவற்றி யாங்குன்
அருள்பெற்றுத் துன்பத்தின்றும்
விள்ளக் கிலேனை விடுதிகண்
டாய்விரும் பும்மடியார்
உள்ளத்துள் ளாய்மன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
கள்ளத்து ளேற்கரு ளாய்களி
யாத களியெனக்கே. 14

---

13. கடலை நாய் நக்கியதுபோல அடியேன் உன் கருணைக் கடலில் மனம் செலுத்தினேன்; அத்தகைய என்னை விட்டுவிடாதே என்கிறார். உடல் இலமே மன்னும் - உடலை வீடாகக்கொண்டு நிலை பெற்ற, மடலின் மட்டு - பூவிதழிலுள்ள தேன்; குடித்த வில்லாத தேன் எனினும் ஆம். 'பருகா அமுதே' என்பதும் இக்கருத்தின தாதல் காண்க.

14. வெள்ளத்திலும் நாவறண்டாற்போல அருள்பெற்றும் துன்பம் தொலைந்திலதாதலின் என்னை விட்டிடாதே என்கின்றார் விள்ளக்கிலேன் - விலகும் ஆற்றலிலேன்.

119 களிவந்த சிந்தையொ டுன்கழல்
கண்டுங் கலந்தருள
வெளிவந்தி லேனை விடுதிகண்
டாய்மெய்ச் சுடருக்கெல்லாம்
ஒளிவந்த பூங்கழ லுத்தர
கோசமங் கைக்கரசே
எளிவந்த வெந்தைபி ரானென்னை
யாளுடை யென்னப்பனே. 15

120 என்னையப் பாவஞ்ச லென்பவ
ரின்றிநின் றெய்த்தலைந்தேன்
மின்னையொப் பாய்விட் டிடுதிகண்
டாயுவ மிக்கின்மெய்யே
உன்னையொப் பாய்மன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
அன்னையொப் பாயெனக் கத்தனொப்
பாயென் னரும்பொருளே. 16

---

15. திருவடிப்பேறு சித்தித்தும் இரண்டறக்கலக்கும் பேற்றினை இழந்தேன்; ஆயினும் என்னைவிடாதே அருள் என்கின்றார். ஒளிவந்த - ஒளிமிகுந்த; ஒளியைத் தந்த எனினுமாம்.

16. எனக்கு அடைக்கலம் அளிப்பார்யாருமின்றி அலைந்தேன்; அடியேனை விட்டுவிடாதே என்கின்றார். மின்னை ஒப்பாய் என்றார் உருமேனியைக்காட்டி மறைந்தமையின். உன்னையொப்பாய் என்றது 'தன்னொப்பார் பிறரில்லாத் தலைவன் தன்னை' என்றதை நினைக்கச் செய்யும்.

**121** பொருளே தமியேன் புகலிட
மேநின் புகழிகழ்வார்
வெருளே யெனைவிட் டிடுதிகண்
டாய்மெய்மை யார்விழுங்கும்
அருளே யணிபொழி லுத்தர
கோசமங் கைக்கரசே
இருளே வெளியே யிகபர
மாகி யிருந்தவனே. 17

**122** இருந்தென்னை யாண்டுகொள் விற்றுக்கொள்
ஒற்றிவை யென்னினல்லால்
விருந்தின னேனை விடுதிகண்
டாய்மிக்க நஞ்சமுதா
அருந்தின னேமன்னு முத்தர
கோசமங் கைக்கரசே
மருந்தின னேபிற விப்பிணிப்
பட்டு மடங்கினர்க்கே. 18

---

17. தமியேனுக்குப் பொருளாயும் புகலிடமாயும், இகழ்வார்க்கு வெருளாயுமிருக்கும் பெருமானே! என்னை விட்டுவிடாதே என்கின்றார். வெருள் - அச்சம். மெய்மையார் - ஞானிகள். இருள் - தன்னடி கூடாத வன்கணாளர்க்கு இருளாயிருப்பவன்.

18. ஆட்கொண்ட என்னை நீ எதுவும் செய்யலாம்; ஆனால் விட்டுவிடாதே என்கின்றார். ஒற்றி - முதலுக்கு ஈடாகவைக்கப்பட்ட சொத்து. மடங்கினர்க்கு - தாழ்ந்தவர்க்கு.

**123** மடங்கவென் வல்வினைக் காட்டைநின்
மன்னருட் டீக்கொளுவும்
விடங்கவென் றன்னை விடுதிகண்
டாயென் பிறவியைவே
ரொடுங்களைந் தாண்டுகொ ளுத்தர
கோசமங் கைக்கரசே
கொடுங்கரிக் குன்றுரித் தஞ்சுவித்
தாய்வஞ்சிக் கொம்பினையே. 19

**124** கொம்பரில் லாக்கொடி போலல
மந்தனன் கோமளமே
வெம்புகின் றேனை விடுதிகண்
டாய்விண்ணர் நண்ணுகில்லா
உம்பருள் ளாய்மன்னும் உத்தர
கோசமங் கைக்கரசே
அம்பர மேநில னேயனல்
காலொடப் பானவனே. 20

---

19. வினைக் காட்டை வேரோடு வெட்டிக் கொளுத்தும் விடங்கரே! என்னை விடலாகாது என்கிறார். மடங்க - எல்லாம். விடங்க - சுயம்புமூர்த்தியே. கொடுங் கரி என்றது தாருகாவனத் தெழுந்த யானையை.

20. கொழுகொம்பில்லாக் கொடிபோல வாடினேன் விட்டு விடாதே என்கிறார். அலமந்தனன் - கலங்கினேன். கோமளம் - அழகு. உம்பருள்ளாய் - மேலான இடத்துள்ளவனே. விண்ணர் - தேவர்கள். அம்பரம் - ஆகாயம். கால் - காற்று. அப்பு - நீர்.

125 ஆனைவெம் போரிற் குறுந்தூ
றெனப்புல னலைப்புண்
டேனையெந் தாய்விட் டிடுதிகண்
டாய்வினை யேன்மனத்துத்
தேனையும் பாலையுங் கன்னலை
யும்மமு தத்தையுமொத்
தூனையு மென்பினை யும்முருக்
காநின்ற வொண்மையனே. 21

126 ஒண்மைய னேதிரு நீற்றையுத்
தூளித் தொளிமிளிரும்
வெண்மைய னேவிட் டிடுதிகண்
டாய்மெய் யடியவர்கட்
கண்மைய னேயென்றுஞ் சேயாய்
பிறர்க்கறி தற்கரிதாம்
பெண்மைய னேதொன்மை யாண்மைய
னேயலிப் பெற்றியனே. 22

---

21. யானைச்சண்டையிலகப்பட்ட சிறுபுதர்போல புலன்களால் வருந்தினேன். விடேற்க என்கிறார். குறுந்தூறு - சிறுபுதர். கன்னல்- கருப்பஞ்சாறு. ஒண்மையன் - ஒளியையுடையவன்.

22. வெண்ணீறுசண்ணித்தமேனியனே! அடியேனை விடேற்க என்றருளுகின்றார். உத்தூளித்து - பொடியாகப்பூசி. பிறர்க்கு என்றும் சேயாய் எனக்கூட்டுக.

**127** பெற்றது கொண்டு பிழையே
பெருக்கிச் சுருக்குமன்பின்
வெற்றடி யேனை விடுதிகண்
டாய்விடி லோகெடுவேன்
மற்றடி யேன்றன்னைத் தாங்குந
ரில்லையென் வாழ்முதலே
உற்றடி யேன்மிகத் தேறிநின்
றேனெனக் குள்ளவனே. 23

**128** உள்ளன வேநிற்க இல்லன
செய்யுமை யற்றுழனி
வெள்ளன லேனை விடுதிகண்
டாய்வியன் மாத்தடக்கைப்
பொள்ளனல் வேழத் துரியாய்
புலனின்கட் போதலொட்டா
மெள்ளன வேமொய்க்கு நெய்க்குடந்
தன்னை யெறும்பெனவே. 24

---

23. பெற்றதைக்கொண்டு பிழையைப்பெருக்கி அன்பைச் சுருக்கும் அடியேனை விடாதே என வேண்டுகின்றார். பெற்றது - பிராரப்த கன்மத்தை நுகரும்பொருட்டு அளிக்கப்பெற்ற உடல். பிழை - ஆகாமிய வினைகள். வாழ்முதல் - வாழ்விற்கு முதலாயுள்ளவர். உற்று - திருவடியைப்பொருந்தி. எனக்குள்ளவன் - என்னை உரிமையாகவுடையவன்.

24. நெய்க்குடத்தை மொய்க்கும் எறும்புபோல என்புலன்கள் நின்னை அடைய ஒட்டாது தடைசெய்கின்றன; என்னைவிடாதருள்க என்கின்றார். மையல் - மயக்கம். துழனி வெள்ளன் - ஆரவார வெள்ளமுடையவன். வியன் - பெரிய. பொள்ளல் - ஓட்டை. நெய்க்குடம் தேன் குடமுமாம்.

129 எறும்பிடை நாங்கூ ழெனப்புல
னாலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண்
டாய்வெய்ய கூற்றொடுங்க
உறுங்கடிப் போதவை யேயுணர்
வுற்றவ ரும்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய
ராத பெருமையனே. 25

130 பெருநீ ரறச்சிறு மீன்றுவண்
டாங்கு நினைப்பிரிந்த
வெருநீர்மை யேனை விடுதிகண்
டாய்வியன் கங்கைபொங்கி
வருநீர் மடுவுண் மலைச்சிறு
தோணி வடிவின்வெள்ளைக்
குருநீர் மதிபொதி யுஞ்சடை
வானக் கொழுமணியே. 26

---

25. எறும்பிலகப்பட்ட நாகப்பூச்சிபோல ஐம்புலனாலரிக்கப் பட்ட அடியேனை விடாதே என்கிறார். நாங்கூழ் - நாகப்பூச்சி. அலந்த - வருந்திய. கூற்று ஒடுங்க உறும் கடிப்போது - எமன் ஒடுங்க உதைத்த திருவடிமலர். கடி - மணம். உம்பர் உம்பர் பெறும் பதமே - மேன்மேலும்பெறும் பதவியே.

26. நீரற்றகுளத்தில் சிறுமீன் துவண்டதுபோல, தேவரீரைப் பிரிந்து யான் வாடினேன்; என்னை விடாதீர் என வேண்டுகின்றார். வெருநீர்மையேன் - அஞ்சுந்தன்மையுடையேன். வெள்ளைக்குருநீர் - வெள்ளைநிறத் தன்மை. துவண்டாங்கு - வாடினாற்போல; என்றது மீட்டும் நீர்பெறின் மீன் களிப்பதுபோல யானும் அத்தகையேன் என விளக்கியவாறு.

**131** கொழுமணி யேர்நகை யார்கொங்கைக்
குன்றிடைச் சென்றுகுன்றி
விழுமடி யேனை விடுதிகண்
டாய்மெய்ம் முழுதுங்கம்பித்
தழுமடி யாரிடை யார்த்துவைத்
தாட்கொண் டருளியென்னைக்
கழுமணி யேயின்னுங் காட்டுகண்
டாய்நின் புலன்கழலே. 27

**132** புலன்கடி கைப்பிக்க யானுந்
திகைத்திங்கொர் பொய்ந்நெறிக்கே
விலங்குகின் றேனை விடுதிகண்
டாய்விண்ணு மண்ணுமெல்லாங்
கலங்கமுந் நீர்நஞ் சமுதுசெய்
தாய்கரு ணாகரனே
துலங்குகின் றேனடி யேனுடை
யாயென் றொழுகுலமே. 28

---

27. மகளிர் போகத்திடை அழுந்தும் என்னை அடியார் கூட்டத்திடையில்வைத்து ஆட்கொண்டு கழுவிய மணியே! என்னைக் கைவிடாதீர் என்கிறார். கொழுமணி - முத்து. குன்றி - குறைந்து. கம்பித்து - நடுங்கி. ஆர்த்துவைத்து - கட்டிவைத்து; என்றது தனக்கு விருப்பமின்மையும் இறைவன் ஆட்படுத்திய அருமைப்பாடும் அறிவித்துநிற்கிறது. புலன்கழல் - ஞானமாகிய திருவடி.

28. புலன்கள்மயக்க நான் மயங்குகின்றேன்; பொய்ந்நெறியிற் புக இருக்கும் என்னை விடுதலாகாது என்கின்றார். திகைப்பிக்க - மயக்க. தொழுகுலம் - தொழத்தக்க இனம். முந்நீர் - கடல். துலங்குகின்றேன் - நடுங்குகின்றேன்.

**133** குலங்களைந் தாய்களைந் தாயென்னைக்
குற்றங்கொற் றச்சிலையாம்
விலங்கலெந் தாய்விட் டிடுதிகண்
டாய்பொன்னின் மின்னுகொன்றை
அலங்கலந் தாமரை மேனியப்
பாவொப்பி லாதவனே
மலங்களைந் தாற்சுழல் வன்றயி
ரிற்பொரு மத்துறவே. 29

**134** மத்துறு தண்டயி ரிற்புலன்
தீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண்
டாய்வெண் டலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து
குடர்நெடு மாலைசுற்றித்
தத்துறு நீறுட னாரச்செஞ்
சாந்தணி சச்சையனே. 30

---

29. ஐம்மலங்களால் வருந்துகின்ற என்னை விடாதே என்று வேண்டுகின்றார். குலம் - குடிப்பிறப்பு; கூட்டம் என்பாரும் உளர். குற்றம் - அறியாமையால் யான் இயற்றும் குற்றங்கள். சிலை - வில். விலங்கல் - மலை. அலங்கல் - மாலை. மலங்கள் ஐந்து - ஆணவம், கன்மம், மாயை, வைந்தவம், திரோதாயி.

30. விஷய சுகங்களாகிற வெந்தீப்பற்ற வெதும்புகின்ற என்னை விடேற்க என்கின்றார். வித்துறுதல் - ஒளியடைதல்; அதாவது தீப்பற்றுதல். மிலைச்சி - சூடி. தத்துறு - தவழுகின்ற. ஆரம் - சந்தனக்கட்டை; சச்சையன் - நுட்பமானவன்.

135 சச்சைய னேமிக்க தண்புனல்
விண்கால் நிலநெருப்பாம்
விச்சைய னேவிட் டிடுதிகண்
டாய்வெளி யாய்கரியாய்
பச்சைய னேசெய்ய மேனிய
னேயொண் படவரவக்
கச்சைய னேகடந் தாய்தடந்
தாள அடற்கரியே. 31

136 அடற்கரி போலைம் புலன்களுக்
கஞ்சி யழிந்தவென்னை
விடற்கரி யாய்விட் டிடுதிகண்
டாய்விழுத் தொண்டர்க்கல்லால்
தொடற்கரி யாய்சுடர் மாமணி
யேசுடு தீச்சுழலக்
கடற்கரி தாயெழு நஞ்சமு
தாக்குங் கறைக்கண்டனே. 32

---

31. ஐம்பெரும்பூதங்களின் வடிவாய் அவைகளின் உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பவனே! அடியேனைக் கைவிடாதிருக்கவேண்டும் என்கின்றார். மிக்க - வெளிப்பட்ட. விச்சை - வித்தை. தடந் தாள் அடல் கரி - பருத்தகாலினையுடைய வலிய யானை.

32. யானையைப்போல வருத்தும் ஐம்புலன்களுக்கு அஞ்சி அழிந்திருக்கும் என்னைக் கைவிடாதீர் என்கின்றார். அடல் - வலிமை; கொல்லுந்தன்மையுமாம். நஞ்சு எழுந்தகாலத்துப் பாற் கடலும் வெண்மைமாறிக் கரிதாயிற்றுதலின் கடல் கரிதாயெழு நஞ்சு என்றார். கறை - விடம்.

137 கண்டது செய்து கருணைமட்
டுப்பரு கிக்களித்து
மிண்டுகின் றேனை விடுதிகண்
டாய்நின் விரைமலர்த்தாள்
பண்டுதந் தாற்போற் பணித்துப்
பணிசெயக் கூவித்தென்னைக்
கொண்டெனெந் தாய்களை யாய்களை
யாய குதுகுதுப்பே. 33

138 குதுகுதுப் பின்றிநின் றென்குறிப்
பேசெய்து நின்குறிப்பில்
விதுவிதுப் பேனை விடுதிகண்
டாய்விரை யார்ந்தினிய
மதுமதுப் போன்றென்னை வாழைப்
பழத்தின் மனங்கனிவித்
தெதிர்வதெப் போது பயில்விக்
கயிலைப் பரம்பரனே. 34

---

33. மனம்போனபடி வாழ்ந்த என்னை விடாதீர் என்கிறார் மட்டு - தேன். மிண்டுகின்றேனை - செருக்கால் துடிக்கின்ற என்னை குதுகுதுப்பு - மகிழ்ச்சி.

34. சிறிதும் குறிக்கோளின்றி விதிர்விதிர்க்கின்ற என்னை விட்டுவிடாதே அருளும் என்கின்றார். விதுவிதுத்தல் - விரைந்து ஆசைப்படுதல்.

139 பரம்பர னேநின் பழவடி
யாரொடு மென்படிறு
விரும்பர னேவிட் டிடுதிகண்
டாய்மென் முயற்கறையின்
அரும்பர நேர்வைத் தணிந்தாய்
பிறவியை வாயரவம்
பொரும்பெரு மான்வினை யேன்மன
மஞ்சிப் பொதும்புறவே. 35

140 பொதும்புறு தீப்போற் புகைந்தெரி
யப்புலன் தீக்கதுவ
வெதும்புறு வேனை விடுதிகண்
டாய்விரை யார்நறவந்
ததும்புமந் தாரத்திற் றாரம்
பயின்றுமந் தம்முரல்வண்
டதும்புங் கொழுந்தே னவிர்சடை
வானத் தடலரைசே. 36

---

35. தேவரீருடைய பழைய அடியாரோடு அடியேனுடைய வஞ்சகத்தையும் விரும்பிய நீர் விட்டிடுதலாகாது என வேண்டுகிறார். பரம்பரன் - மேலானவற்றிற்கெல்லாம் மேலானவன். படிறு - வஞ்சம். முயற்கறையினரும்பு - முயலாகிய களங்கத்தினையுடைய பிறைமதி. அர - பாம்பு. நேர்வைத்தணிந்தாய் என்றது பகைநீங்கத் தரித்தாய் என்பதுகுறித்து. ஐவாயரவம்-ஐந்தலைப்பாம்பு. பொதும்பு - மரச்செறிவு.

36. காட்டில் பிடித்த தீயினைப்போல, புலன்கள் பற்றலால் வெதும்பும் என்னை விடலாகாது என்கின்றார். நறவம் - தேன். தாரம் - ஓர்வகைப் பண். மந்தம் - தாழ்த்திப்பாடும்ஓசை. அதும்பும் - அழுந்தும்.

141 அரைசே யறியாச் சிறியேன்
பிழைக்கஞ்ச லென்னினல்லால்
விரைசேர் முடியாய் விடுதிகண்
டாய்வெண் ணகைக்கருங்கட்
டிரைசேர் மடந்தை மணந்த
திருப்பொற் பதப்புயங்கா
வரைசேர்ந் தடர்ந்தென்ன வல்வினை
தான்வந் தயர்வனவே. 37

142 அடர்புல னானிற் பிரிந்தஞ்சி
யஞ்சொனல் லாரவர்தம்
விடர்விட லேனை விடுதிகண்
டாய்விரிந் தேயெரியுஞ்
சுடரனை யாய்சுடு காட்டர
சேதொழும் பர்க்கமுதே
தொடர்வரி யாய்தமி யேன்றனி
நீக்குந் தனித்துணையே. 38

---

37. அரசே! அடியேற்கு அபயமளித்தலல்லது விடுதலாகாது என வேண்டுகின்றார். திரைசேர்மடந்தை - அலையில்வந்த திருமகள். புயங்கம் - பாம்பு. மணந்த - வணங்கிப்பொருந்திய. திருவாரூரில் திருமகள் இறைவனை வணங்கி மங்கலநாண் நெடிதுபெற்றாளாதலின் திருமகள்மணந்த திருவடி என்றார். அடர்ந்து - நெருக்கி.

38. இந்திரியசேட்டையினால் உன்னைப்பிரிந்து இளமகளிரை விடாது பற்றிநிற்கும் அடியேனை விடாதே என்கின்றார். நல்லார் - மகளிர். விடர் - பிளவு.

143 தனித்துணை நீநிற்க யான்தருக்
கித்தலை யானடந்த
வினைத்துணை யேனை விடுதிகண்
டாய்வினை யேனுடைய
மனத்துணை யேயென்றன் வாழ்முத
லேயெனக் கெய்ப்பில்வைப்பே
தினைத்துணை யேனும் பொறேனென் றுய
ராக்கையின் திண்வலையே. 39

144 வலைத்தலை மானன்ன நோக்கியர்
நோக்கின் வலையிற்பட்டு
மிலைத்தலைந் தேனை விடுதிகண்
டாய்வெண் மதியினொற்றைக்
கலைத்தலை யாய்கரு ணாகர
னேகயி லாயமென்னும்
மலைத்தலை வாமலை யாண்மண
வாளவென் வாழ்முதலே. 40

---

39. உற்றதுணையாகத் தேவரீரிருக்கவும் யான் செருக்கித் திரிந்தேன்; இவ்வுடல்தரும் துன்பம் தினைப்பொழுதும் பொறுக்க இயலாது என்றறிவிக்கின்றார். தருக்கி - செருக்குற்று. வினைத்துணையேன் - வினையைத் துணையாகக்கொண்ட யான்; அல்லது இரு வினையையுடைய யான் எனலுமாம்.

40. மகளிர் கண்வலைப்பட்டுக் கலங்கிய என்னை விடேற்க என்கின்றார். மிலைத்து - மருண்டு; கதறி எனவுமாம்.

145 முதலைச்செவ் வாய்ச்சியர் வேட்கைவெந்
நீரிற் கடிப்பமூழ்கி
விதலைச்செய் வேனை விடுதிகண்
டாய்விடக் கூன்மிடைந்த
சிதலைச்செய் காயம் பொறேன்சிவ
னேமுறை யோமுறையோ
திதலைச்செய் பூண்முலை மங்கைபங்
காவென் சிவகதியே. 41

146 கதியடி யேற்குன் கழறந்
தருளவு மூன்கழியா
விதியடி யேனை விடுதிகண்
டாய்வெண் டலைமுழையிற்
பதியுடை வாளரப் பார்த்திறை
பைத்துச் சுருங்கவஞ்சி
மதிநெடு நீரிற் குளித்தொளிக்
குஞ்சடை மன்னவனே. 42

---

41. மகளிராது காமநீரில்மூழ்கி நடுங்கிய என்னைக் கைவிடுதலாகாது என்கிறார். முதலைச் செவ்வாய்ச்சியர் - முதலைபோல கொண்டதைவிடாது பற்றிநிற்கும் மகளிர். முதலைக்கு ஏற்பப் பின்னரும் தன் உடலை விடக்கு ஊன் மிடைந்த சிதலைச் செய்காயமெனக் கூறுதல் காண்க. வேட்கை வெந்நீர் - காமநீர். வெந்நீர் என்றது அன்று இளமைவிருப்பத்திற்கும் இன்று வெறுப்பிற்கும் இடனாதல் பற்றிப் பொதுமையிற் கூறினார். வெம் - விருப்பம்; கொடுமை. கடிப்ப - இதுவும் அங்ஙனமே மணப்ப வெறுக்க என இருபொருள் தருதல் காண்க. விதலை - நடுக்கம். விடக்கு ஊன் - தசைத்திரள். சிதலை - நோய். காயம் - உடல். திதலை - தேமல்.

42. அடியேனுக்குக் கதியாகிற திருவடியைத் தரவேண்டி இருக்க உடம்பெடுத்துப் பற்றுக்கழியாத காரணத்தால் அடியேனை விடுதலாகாது என்கின்றார். ஊன் - உடல். வெண்டலை முழை - கபாலத்திலுள்ள ஓட்டைகள். பதியுடை வாளர - மறைந்திருக்கின்ற பெரும்பாம்பு. இறை பைத்து - சிறிது படமெடுத்து.

147 மன்னவ னேயொன்று மாறறி
யாச்சிறி யேன்மகிழ்ச்சி
மின்னவ னேவிட் டிடுதிகண்
டாய்மிக்க வேதமெய்ந்நூல்
சொன்னவ னேசொற் கழிந்தவ
னேகழி யாத்தொழும்பர்
முன்னவ னேபின்னு மானவ
னேயிம் முழுதையுமே. 43

148 முழுதயில் வேற்கண் ணியரென்னு
மூரித் தழன்முழுகும்
விழுதனை யேனை விடுதிகண்
டாய்நின் வெறிமலர்த்தாள்
தொழுதுசெல் வானத் தொழும்பரிற்
கூட்டிடு சோத்தெம்பிரான்
பழுதுசெய் வேனை விடேலுடை
யாயுன்னைப் பாடுவனே. 44

---

43. திருவடிக்கு ஒன்றுதலை அறியாத சிறியேனுக்குக் களிப்பைத் தருகிற சோதி! என்னைக் கைவிடாதே என்கின்றார். **ஒன்றுமாறறியா** - பொருந்துதலை அறியாத. **ஒன்றும் மாறு அறியா** - ஒன்றும் மாறுபடுதலை அறியாத எனினுமாம். **மகிழ்ச்சிமின்னவன் என்றார்** மகிழ்ச்சி மின்னலைப் போலத் தோன்றி மறைதலில். **சொல்**-சொல்லின் எல்லையை.

44. பெண்கள் என்னும் பெருந்தீயில் மூழ்கும் நெய்யானேன் அடியேன் ஆதலின் கைவிடாதே என்கின்றார். **மூரித்தழல்** - வலிய பெருந்தீ. **விழுது** - நெய். **சோத்து** - வணக்கம். தோத்திரம் சோத்திரமாகி, சோத்தமாகி அம்கெட்டு சோத்து என நின்றது.

149 பாடிற்றி லேன்பணி யேன்மணி
நீயொளித் தாய்க்குப்பச்சூன்
வீடிற்றி லேனை விடுதிகண்
டாய்வியந் தாங்கலறித்
தேடிற்றி லேன்சிவ னெவ்விடத்
தானெவர் கண்டனரென்
றோடிற்றி லேன்கிடந் துள்ளுரு
கேனின் றுழைத்தனனே. 45

150 உழைதரு நோக்கியர் கொங்கைப்
பலாப்பழத் தீயினொப்பாய்
விழைதரு வேனை விடுதிகண்
டாய்விடின் வேலைநஞ்சுண்
மழைதரு கண்டன் குணமிலி
மானிடன் தேய்மதியன்
பழைதரு மாபர னென்றென்
றறைவன் பழிப்பினையே. 46

---

45. பாடுதலும் பணிதலுமாகிய என் பணிகள் தவறினேன் ஆதலால் நீ ஒளித்தாய்; கைவிடாதே என்கிறார். பச்சூன் - பசிய ஊனாகிய உடல். உழைத்தனன் - வருந்தினேன்.

46. பலாப்பழத்தில் ஈ மொய்த்ததுபோல மகளிரை விழைகின்ற என்னைக் கைவிடாதே என்கிறார். உழை - மான். மழைதரு கண்டன் - மழைபோலக் கரியகண்டன். மானிடன் - மானை யிடப் பக்கமுடையான். தேய்மதி - பிறைமதி. பழைதரு மாபரன் - பழைமையைத் தருகின்ற பெரிய ஆண்டி. இவை இறைவனை வைதது போல வாழ்த்துதல்.

151 பழிப்பினின் பாதப் பழந்தொழும்
பெய்தி விழப்பழித்து
விழித்திருந் தேனை விடுதிகண்
டாய்வெண் மணிப்பணிலங்
கொழித்துமந் தாரமந் தாகினி
நுந்தும்பந் தப்பெருமை
தழிச்சிறை நீரிற் பிறைக்கலஞ்
சேர்தரு தாரவனே. 47

152 தாரகை போலுந் தலைத்தலை
மாலைத் தழலரப்பூண்
வீரவென் றன்னை விடுதிகண்
டாய்விடி லென்னைமிக்கார்
ஆரடி யானென்னி னுத்தர
கோசமங் கைக்கரசின்
சீரடி யாரடி யானென்று
நின்னைச் சிரிப்பிப்பனே. 48

---

47. திருவடிக்கு அநாதியே அடியேனான என்னை விடேற்க என்றருளுகின்றார். பணிலம் - சங்கு. வெண்மணி - முத்து. மந்தாகினி - கங்கை. நுந்தும் - செலுத்தும். தழிச்சிறைநீரில் - தழுவிய பக்கங்களையுடைய தேவகங்கையில். பிறைக்கலம் - பிறையாகிய தோணி. பழிப்பு இல் நின் பாதப் பழந் தொழும்பு - புகழப்படுகின்ற நின் திருவடிக்கு அடிமை.

48. தலைமாலையையும், பாம்பணியையும் பூண்ட வீரனே! என்னைவிடாதே என்கிறார். தாரகை - நக்ஷத்திரம். சிரிப்பிப்பன் - நகைக்கும்படி செய்வேன்.

153 சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத்
தொழும்பையு மீசற்கென்று
விரிப்பிப்ப னென்னை விடுதிகண்
டாய்விடின் வெங்கரியின்
உரிப்பிச்சன் றோலுடைப் பிச்சனஞ்
சூண்பிச்ச னூர்ச்சுடுகாட்
டெரிப்பிச்ச னென்னையு மாளுடைப்
பிச்சனென் றேசுவனே. 49

154 ஏசினும் யானுன்னை யேத்தினும்
என்பிழைக் கேகுழைந்து
வேசறு வேனை விடுதிகண்
டாய்செம் பவளவெற்பின்
தேசுடை யாயென்னை யாளுடை
யாய்சிற் றுயிர்க்கிரங்கிக்
காய்சின வாலமுண் டாயமு
துண்ணக் கடையவனே. 50

திருச்சிற்றம்பலம்.

---

49. அடியேனது பிழையும் அடிமையும் பெருமானுக்கென்றே விரிப்பேன் ஆதலால் என்னை விடுதலாகாது என்கிறார். கரியின் உரிப்பிச்சன் - யானைத்தோலைப் போர்த்திய பித்தன். தோலுடைப் பிச்சன் - புலித்தோலை உடுத்த பித்தன். நஞ்சு ஊண் - நஞ்சாகிய உணவு. இதுவும் பழிப்பதுபோலப் பரவுதலாம்.

50. வாழ்த்தினாலும் வைதாலும் என் தவறுகளுக்கு யானே வருந்துவன் ஆதலால் விட்டுவிடாதே என்கிறார். குழைந்து - இளகி. வேசறுவேன் - வருந்துவேன். தேசு - ஒளி. காய்சின ஆலம் - எல்லாரையும் வருத்திய கோபத்தையுடைய விஷம். கடையவன் - எல்லார்க்கும் இறுதியாக அழியாது கடைசியாக இருப்பவன். கடையவனே! சிற்றுயிர்க்கிரங்கி அவை அமுதுண்ண நீ ஆலமுண்டாய் எனக்கூட்டுக.

உ

சிவமயம்

# 7. திருவெம்பாவை

## [சத்தியை வியந்தது]

*திருவண்ணாமலையில் அருளியது.*

[அடிகளார், பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திரு அண்ணாமலைப்பக்கத்தை அடைந்தார். அவ் அணிநகர் மாட கூடங்களும், கோபுரமும், தோரணவாயிலும், மதிலும்மதிலைச் சுற்றிக் கமுகும், பொழிலுமாகக் காட்சி அளித்தது. 'இம்மலை தானே அன்று ஆனல்வடிவாயிருந்தது; திருமாலும் பிரமனும் தேடியடைய முடியாததாயிருந்தது; இன்றைக்கு மனம் நிறைந்த பெருவாழ்வாகக் காட்சியளிக்கின்றதே' என்று மகிழ்ந்தவராய் நகருட்புகுந்தார். ஆலயத்தைக் கண்டார். அதனுள், பனிமலை மருந்தாய்த் தம்மையாண்ட குருவுருவைக் கண்டார். பச்சைக்கொடிபடர்ந்த செம்பொற் குன்றமாக இறைவனை எண்ணினர். வாழ்த்தினர். அண்ணாமலையை அடைந்தகாலம் மார்கழிமாதம். திருவாதிரைக்கு முந்திய பத்துநாள். மாதர்கள்பலரும் விடியலில் எழுந்திருந்து கூட்டி மெழுகிக் கோலமிட்டு, வீட்டுத்தெய்வத்தை வரவழைத்து விளக்கம்கண்டு குளத்திற்கு நீராடச் செல்கின்றனர்கள். அவர்கள் வாயில் அரன் புகழ் இன்னிசையோடு தவழ்தலைக் கண்டார். அவை கவிதையாயிற்று. அவர்கள் வாய்மொழி யாக இத் திருவெம்பாவையை ஆக்கியருளினர்.]

## கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

155 ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன்வார்கழல்கள்வாழ்த்தியவாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதா ரமளியின்மே னின்றும் புரண்டிங்ஙன்
ஏதேனு மாகாள் கிடந்தாள் என்னேயென்னே
ஈதேயெந் தோழி பரிசேலோ ரெம்பாவாய். 1

156 பாசம் பரஞ்சோதிக் கென்பா யிராப்பகல்நாம்
பேசும்போ தெப்போதிப் போதா ரமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
சீசி யிவையுஞ் சிலவோ விளையாடி

---

1\. இப்பாடல் தோழியர்பலருள் ஒருத்தியை ஒருத்தி துயில் எழுப்புகின்ற முறையில் எழுந்தது. இது ஒன்பது சத்திகளுள் மனோன்மனி சர்வபூததமனி என்னும் சத்தியைத் துயிலெழுப்பியதாகச் சாத்திர அறிஞர்கள் கூறுவார்கள். வாட்டடங்கண் மாதே வளருதியோ என்றது ஒளிபடைத்த கண்களின் பயன் இறைவனைக் காணலா இருக்கவும் அங்ஙனம் செய்யாது வாளா தூங்குகின்றாய் என்ற கருத்துப்பற்றி. போதார் அமளி - பூப்படுக்கை. ஏதேனும் ஆகாள் - பயன்படாது கிடந்தாள். ஏல் ஓர் எம்பாவாய் - எம்முடைய பாவைபோல்பவளே இதனை ஏற்றுக்கொள் ஆராய்ந்துபார்.

ஏசு மிடமீதோ விண்ணோர்க ளேத்துதற்குக்
கூசு மலர்ப்பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் தில்லைச்சிற் றம்பலத்துள்
ஈசனார்க் கன்பார்யா மாரேலோ ரெம்பாவாய். 2

157 முத்தன்னவெண்ணகையாய்முன்வந்தெதிரெழுந்தென்
அத்தனா னந்தன் அமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீ ரீசன் பழவடியீர் பாங்குடையீர் [தோ
புத்தடியோம்புன்மைதீர்த் தாட்கொண்டாற்பொல்லா
எத்தோநின் னன்புடைமை யெல்லோ மறியோமோ
சித்த மழகியார் பாடாரோ நஞ்சிவனை
இத்தனையும் வேண்டு மெமக்கேலோ ரெம்பாவாய். 3

---

2. சர்வபூததமனி என்னும் சத்தி பலப்பிரமதனியை எழுப்பு முறையாக அமைந்தது இப்பாடல். இதில்பலர் ஒருத்தியை எழுப்புவதாகவும் அவள் ஏனையோரை ஏசி விளையாடுவதாகவுமான உரையாடல் முறை அமைந்துள்ளது. பாசம் - அன்பு. விண்ணோர்கள் ஏத்துதற்குக் கூசும் மலர்ப்பாதம் என்றது இறைவன் திருவடியை ஏத்துதற்கேற்ற நல்வினைவாய்ப்பு தமக்கின்மையால் கூசுகின்றார்கள் என்பதாம்.

3. இது பலப்பிரமதனி என்னும் சத்தியும் பிறரும் பலவிகரணி என்னும் சத்தியைத் துயிலெழுப்பியதாக அமைந்துள்ளது. அள்ளூறி - வாயூறி. கடை - வாயில். பத்துடையீர் - பற்று என்பது எதுகைநோக்கிப் பத்து என ஆயிற்று. பாங்கு - மேன்மை.

158 ஒண்ணித் திலநகையா யின்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ
எண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோ மவ்வளவும்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ளம்
உண்ணெக்கு நின்றுருக யாமாட்டோம் நீயேவந்
தெண்ணிக் குறையிற் றுயிலேலோ ரெம்பாவாய். 4

159 மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம்
போலறிவோ மென்றுள்ள பொக்கங்க ளேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே யறிவரியான்
கோலமு நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டுஞ்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்
றோல மிடினும் உணரா யுணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோ ரெம்பாவாய். 5

---

4. இது பலவிகரணி என்னும் சத்தி கலவிகரணி என்னும் சத்தியை எழுப்புவதாக அமைந்தது. நித்திலம் - முத்து. மருந்து - அமுதம். அவம் - வீண்.

5. இது கலவிகரணி என்னும் சத்தியும் பிறரும் காளி என்னும் சத்தியை எழுப்புவதாக உள்ளது. நாம் அறிவோம் போல் என்று - நாம் அறிந்துவிடுவோம்போல என்று. பொக்கம் - பொய். படிறீ - வஞ்சகீ. ஞாலமே விண்ணே பிறவே எண்ணேகாரம். ஏலம் - மயிர்ச்சாந்து.

160 மானேநீ நென்னலை நாளைவந் துங்களை
நானே யெழுப்புவ னென்றலு நாணாமே
போன திசைபகரா யின்னம் புலர்ந்தின்றோ
வானே நிலனே பிறவே யறிவரியான்
தானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவாய்
ஊனே யுருகா யுனக்கே யுறுமெமக்கும்
ஏனோர்க்குந் தங்கோனைப் பாடேலோரெம்பாவாய். 6

161 அன்னே யிவையுஞ் சிலவோ பலவமரர்
உன்னற் கரியா னொருவ னிருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்
தென்னாவென் னாமுன்னந் தீசேர் மெழுகொப்பாய்
என்னானை யென்னரைய னின்னமுதென் றெல்லோமும்
சொன்னோங்கேள் வெவ்வேறா யின்னந் துயிலுதியோ
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியால்
என்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய். 7

---

6. காளியும் பிறசத்திகளும் ரௌத்திரி என்னும் சத்தியை எழுப்புவதாக அமைந்தது இப்பாடல். நென்னல் - நேற்று. தலையளித்து - கருணைசெய்து.

7. ரௌத்திரி உள்ளிட்ட சத்திகள் சேட்டை என்னும் சத்தியைத் துயிலெழுப்புவதாக அமைந்தது இப்பாடல். சின்னங்கள் - சங்கு தாரை முதலிய விடியற்கால இசைக்கருவிகள். சிவனென்றே வாய்திறப்பாய் என்றார். விடியற்காலை முதன்முதல் வாயைத் திறக்கும்போது சிவா என்று சொல்லிக்கொண்டே வாய்திறத்தல் சைவமகளிர் மரபாதலால். தென்னா - அழகுடையவனே. தீ சேர்

162 கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்
ஏழி லியம்ப வியம்பும்வெண் சங்கெங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன வுறக்கமோ வாய்திறவாய்
ஆழியா னன்புடைமை யாமாறு மிவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற வொருவனை
ஏழைபங் காளனையே பாடேலோ ரெம்பாவாய். 8

163 முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம் [ம்
உன்னடியார் தாள்பணிவோ மாங்கவர்க்கேபாங்காவோ

---

மெழுநொத்தல் தன் தன்மைகெடல். இறைவன் புகழ்ச்சொற்களைக் கேட்டுத் தூங்குகின்றமையின் வன்னெஞ்சப்பேதை என்றாள். என் ஆனை - எனக்கு ஆனை போன்றவன். சுந்தரர் பெருமானும் 'ஆனாய் உனக்காளாயினி யல்லேனெனலாமே' எனக் கூறியிருப்பதும் காண்க. பெரியதிருமொழி 'என்னானை என்னப்பன் எந்நெஞ்சிலுளானே' (1, 10, 6) என்றதன் வியாக்கியானம் பார்க்க. மகளிர் தம்மைப் பிடி என்று கருதுகின்றார்களாதலின் இறைவனை ஆனையென்றார்கள்.

8. சேட்டை உள்ளிட்ட சத்திகள் வாமையை எழுப்புவதாக உள்ளது இப்பாட்டு. குருகு - நாரை; பறவைப் பொதுப் பெயருமாம். ஏழில் - ஏழு துளைகளையுடைய துளைக்கருவி. கேழ் - ஒப்பு. வாய் - வாயில். ஆழியான் - ஆக்ஞாசக்கரமுடைய இறைவன். ஏழை - உமை.

அன்னவரே யெங்கணவ ராவா ரவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்
இன்ன வகையே யெமக்கெங்கோ னல்குதியேல்
என்ன குறையு மிலோமேலோ ரெம்பாவாய். 9

164 பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே
பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்
வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலும்
ஓத வுலவா வொருதோழன் றொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற்பிணாப் பிள்ளைகாள்
ஏதவனூர் ஏதவன்பேர் ஆருற்றார் ஆரயலார்
ஏதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய். 10

---

9. இப்பாடல் கைத்திகள் ஒருங்குகூடி இறைவன் பெருமையையும் ஆட்கொண்ட பெருமையையும் பேசித் தங்கள் உறுதியையும் விண்ணப்பிப்பதாக அமைந்தது. பிரானே - தலைவனே. பாங்கு - உரிமை. தொழும்பு - அடிமை.

10. இதுவுமது. சொற்கழிவு - சொல்லெல்லையைக் கடந்த இடம். சொற்கழிவு பாதமலராகவும், பொருள் முடிவு திருமுடியாகவும் கூறப்பட்டிருத்தல் காண்க. திருமேனி ஒன்றல்லாமைக்குப் பேதை ஒருபால் ஏது. வேதமுதல் - பிரணவம். பிணாப்பிள்ளை - பெண்பிள்ளைகள்.

165 மொய்யார் தடம்பொய்கை புக்கு முகேரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
ஐயா வழியடியோம் வாழ்ந்தோங்காண் ஆரழல்போற்
செய்யாவெண் ணீருடி செல்வா சிறுமருங்குல்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
ஐயாநீ யாட்கொண் டருளும் விளையாட்டின்
உய்வார்க ளுய்யும் வகையெல்லாமுய்ந்தொழிந்தோம்
எய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பாவாய். 11

166 ஆர்த்த பிறவித் துயர்கெடநாம் ஆர்த்தாடுந்
தீர்த்தனற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங்
கூத்தனிவ் வானுங் குவலயமும் எல்லோமும்
காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைகள்
ஆர்ப்பரவஞ் செய்ய அணிகுழன்மேல் வண்டார்ப்பப்
பூத்திகழும்பொய்கை குடைந்துடையான் பொற்பாதம்
ஏத்தி யிருஞ்சுனைநீ ராடேலோ ரெம்பாவாய். 12

---

11. மொய் - (வண்டுகள்) மொய்க்கின்ற. முகேரென்னப் புக்கு என்றது குளிர் மிகுதியால் மெல்ல மெல்ல இறங்கி முழுகுதல் இயலாது என்பதுபற்றி. மருங்குல் - இடை. எய்யாமல் - இளைக்காமல். ஐயா உரிச்சொல்லடியாகப் பிறந்ததாகக்கொண்டு அழகா என்றும் பொருள்கொள்ளலாம்.

12. ஆர்த்த - கட்டிய. ஆர்த்து ஆடும் - ஆரவாரித்து ஆடுகின்ற. தீர்த்தன் - தூய்மையானவன். குவலயம் - உலகம். கரந்தும் - மறைந்தும். விளையாடி என்றது ஐந்தொழில் ஆற்றுதல் இறைவனுக்கு விளையாட்டு என்பதாம். விளையாடி - விளையாடுபவனே! அண்மைவிளி.

167 பைங்குவளைக் கார்மலரால் செங்கமலப் பைம்போதால்
அங்கங் குருகினத்தால் பின்னு மரவத்தால்
தங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினால்
எங்கள் பிராட்டியும் எங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். 13

168 காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி அப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
ஆதி திறம்பாடி அந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய். 14

---

13. முன் இரண்டடிகளில் மடு பெருமானையும் பெருமாட்டியையும்போல இருப்பதாகச் சிலேடைவகையாற் கூறுகின்றார். குருகு-நாரை; வளையல். அரவம் - பாம்பு; ஓசை. அங்கம்-அவயவம்; அழகு. பின்னும் - மேலும்; பின்னிக்கிடக்கு . மலம் - அழுக்கு; ஆணவமலம். சிலம்ப - ஒலிக்க.

14. குழை - காதணி. கலன் - அணி. கோதை - மாலை. அப்பொருள் ஆமாபாடி - இறைவன் அகாரப் பொருளாய் இருப்பதைப் பாடி; அந்த வேதத்தின் பொருளாயிருப்பதைப் பாடி எனலும் ஆம். அந்தம் ஆமாபாடி - இறுதியாயிருப்பதையும் பாடி. பேதித்து நம்மை வளர்த்து எடுத்த பெய்வளை - இரும்பைப் பொன்னாக்கினாற் போலச் சிவஞானத்தின்னமுதம் கூட்டி, பசுபோதக் கருமை நீக்கிச் சிவஞான ஒளிதந்து பொன்னாகச்செய்து அந்நிலையிலிருந்து தாழாமே வளர்த்தெடுத்த திருவருட்சிற்சத்தி.

169 ஓரொருகாலெம்பெருமானென்றென்றேநம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர
நீரொருகா லோவா நெடுந்தாரை கண்பனிப்பப் [யாள்
பாரொருகால் வந்தனையாள் விண்ணோரைத் தான்பணி
பேரரையற் கிங்ஙனே பித்தொருவ ராமாறும்
ஆரொருவ ரிவ்வண்ண மாட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
ஏருருவப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய். 15

170 முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையாள்
என்னத் திகழ்ந்தெம்மை யாளுடையாள் இட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவம்
என்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையாள்
தன்னிற் பிரிவிலா எங்கோமான் அன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கும் இன்னருளே
என்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய். 16

---

15. உலகியலில் ஒட்டாது சிவத்தைச் சார்ந்திருக்கும் ஆன்மாவின் தன்மைகள் இவை என்று உணர்த்துவாராய் ஒரு பெண்ணின் மேல் வைத்து உணர்த்துகின்றார். வாய் ஓவாள் - வாய் ஒழியாமல் பேசுவாள். ஓவா - இடைவிடாத. தாரை - நீர்த்துளி. பார் ஒருகால் வந்தனையாள் - பூமியின்கண் ஒரே முறையாக விழுந்து வணங்குதலையுடையவள். வார் - கச்சு. ஏர் - எழுச்சி.

16. இப்பாட்டு இறைவியின் கருணையைப்போல மழை பெய்கின்றது என்பதை விளக்குகிறது. சுருக்கி - வற்றச்செய்து. உடையாள் என்ன-எம்மை உடைய உமையம்மையின் திருமேனியின் நிறம் போல. இட்டிடை - மிகச்சிறிய இடை. இடுகு இடை இட்டிடையாயிற்று. 'இட்டிடையார் அடைந்தார்களே' என்னும் சீவகசிந்தாமணிப் பகுதியும் காண்க. பொன்னஞ் சிலம்பு - பொன்னாலாகிய சிலம்பு. சிலம்பி - ஒலித்து. சிலை குலவி - வில்லை வளைத்து.

171 செங்க ணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால்
எங்கு மிலாததோர் இன்பநம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
இங்குநம் மில்லங்க டோறு மெழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
அங்க ணரசை அடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோரெம்பாவாய். 17

172 அண்ணா மலையான் அடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போல்
கண்ணா ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணா ரொளிமழுங்கித் தாரகைகள் தாமகலப்
பெண்ணாகி யாணாய் அலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ
[ரெம்பாவாய்.

---

17. செங்கணவன் - திருமால். கொங்கு - மணம். சேவகன் - வீரன். ஆர் அமுது - நிறைந்த அமுது; கிடைத்தற்கரிய அமிர்தமுமாம்.

18. வீறு அற்றால் போல் - தனித்தனியாகச் சிதறியதுபோல. கண் ஆர் இரவி - இடங்கள்தோறும் நிறைந்திருக்கின்ற சூரியன். கரப்ப - மறைக்க. தாரகைகள் - நக்ஷத்திரங்கள். கண்ணாரமுதம் - அறிவில் நிறைந்த அமுதம். கண் - அறிவு; கண்ணால் பார்த்துப் பருகும் அமுதம் எனினுமாம்.

173 உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் அச்சத்தால்
எங்கள் பெருமான் உனக்கொன் றுரைப்போங்கேள்
எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க
எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல் பகலெங்கண் மற்றொன் றுங் காணற்க
இங்கிப் பரிசே யெமக்கெங்கோன் நல்குதியேல்
எங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய். 19

174 போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்
போற்றி யருளுகநின் அந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றி யெல்லாவுயிர்க்குந் தோற்றமாம்பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல் லாவுயிர்க்கும் ஈறாம் இணையடிகள்
போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியா முய்யவாட்கொண்டருளும்பொன்மலர்கள்
போற்றியா மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். 20

திருச்சிற்றம்பலம்.

---

19. பழஞ்சொல் - பழமொழி. கங்குல் - இரவு. எம்கொங்கை முதலியன நம் அன்பர்க்கே உரியனவாகுக என்றது உன் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்பதுபோல மிகைபட்ட வார்த்தையாகும்; ஆயினும் நீ நல்கவேண்டும் என்பதாம்.

20. போற்றி - போற்றப்படுபவனே. பாதமலர் அருளுக என முடிக்க. செந்தளிர்கள் - தளிர்போன்ற திருவடிகள். போகம் - பாது காப்பு. புண்டரிகம் - தாமரை.

உ

சிவமயம்

# 8. திருவம்மானை

## [ஆனந்தக்களிப்பு]

*திருவண்ணாமலையில் அருளியது.*

[அடிகளார் திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்குங் காலத்து ஒருநாள் கன்னிப்பெண்கள் தெருமுற்றத்திலிருந்து அம்மானை ஆடுதலைக்கண்டார். அவர்கள் கூற்றாக அண்ணாமலையார் புகழை அமைத்துத் திருவம்மானை என்ற இதனை அருளிச்செய்தார்.]

தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

175 செங்கணெடுமாலுஞ் சென்றிடந்துங் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கணன் அந்தணனா யறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 1

---

1. இடந்து - தோண்டியும். எம் தரம் - எங்கள் அளவு. தெங்கு - தென்னை. அங்கணன் - அழகிய நெற்றிக்கண்ணையுடையவன். அந்தணன் - குருவாக எழுந்தருளிய அந்தணன். அறைகூவி - வலிய அழைத்து. அம்மானை ஆய் என்பது அம்மானாய் என்றாயிற்று. அம்மானை ஆடும் பெண்ணே என்பது பொருள்

176 பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புறத்தார்
ஆராலுங் காண்டற் கரியான் எமக்கெளிய
பேராளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி
வாரா வழியருளி வந்தென் னுளம்புகுந்த
ஆரா அமுதாய் அலைகடல்வாய் மீன்விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதுங்காண் அம்மானாய். 2

177 இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்
பந்தம் பரியப் பரிமேற்கொண் டான்தந்த
அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய். 3

178 வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போற் றலையளித்திட்
டூன்வந்து ரோமங்கள் உள்ளே உயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் தெளிவி னொளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 4

---

2. பாரார் - மனிதர்கள். பேராளன் - பெருமையையாள்பவன். வாராவழி - முத்தி. பேராசை வாரியன் - பெரிய அன்புக்கடலாக உள்ளவன்.

3. அந்தரம் - ஆகாயம். அவனி - பூமி. எந்தரமும் - எமது நிலையிலும். சிந்தனை - கவலை. பந்தம் - கட்டு. பரிய - நீங்க. பரி - குதிரை.

4. கான் நின்று வற்றி - தவஞ்செய்வதாகக் காட்டிற்புகுந்து உடல்வற்றி. புற்று எழுந்து - உடல்முழுதும் புற்றால் மூடப்பெற்று.

179 கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்
தில்லை நகர்புக்குச் சிற்றம் பலமன்னும்
ஒல்லை விடையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 5

180 கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
தீட்டார் மதில்புடைசூழ் தென்னன்பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
ஆட்டான்கொண்டாண்டவா பாடுதுங்காணம்மானாய் 6

181 ஓயாதே யுள்குவார் உள்ளிருக்கு முள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்
மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை
நாயான நந்தம்மை யாட்கொண்ட நாயகனைத்

---

5. கல்லாமனம் - இறைவனது அருள்தன்மையைக் கல்லாத மனம். கல்லைப்பிசைந்து கனியாக்கல்-சுவையற்ற வலிய கல்போலும் மனத்தைச் சுவையுள்ள மென்மையான பழமாகச்செய்தல். கடிந்த - நீக்கிய. ஒல்லை விடையான் - விரைந்து செல்லும் இடபத்தை உடையவன்.

6. கிறி - மாயம். தீட்டு ஆர் மதில் - சுதை தீட்டப்பெற்ற மதில். காட்டாதன - காட்டத்தகாதனவாகிய உண்மைஞானங்கள்.

தாயான தத்துவனைத் தானே யுலகேழும்
ஆயானை யாள்வானைப் பாடுதுங்காண் அம்மானாய். 7

182 பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண் டலத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண் டக்கோவான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்காண் அம்மானாய். 8

183 துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்
கொண்ட புரிநூலான் கோலமா வூர்தியான்
கண்டங் கரியான்செம் மேனியான் வெண்ணீற்றான்
அண்டமுத லாயினான் அந்தமிலா ஆனந்தம்
பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளும்
அண்டம் வியப்புறுமா பாடுதுங்காண் அம்மானாய். 9

---

7. உள்குவார் - தியானிப்பவர்கள். உள்ளான் - உள்ளீடான வன். சேயான் - தூரத்திலுள்ளவன். தத்துவன் - உண்மைவடி வானவன். உலகு ஏழும் ஆயான் - ஏழுலகங்களும் ஆனவன்.

8. பண்சுமந்த பாடற்பரிசு - பண்ணைத்தாங்கிய பாடல்களை ஆக்கும் தன்மை. விண்சுமந்த கீர்த்தி - விண்ணுலகில் வியாபித்த புகழ். மொத்துண்டு - அடிபட்டு. கோ - அரிமர்த்தனபாண்டியன்.

9. கோலமா - அழகிய குதிரை. ஈந்தருளும் - கொடுத்தருளும் வகையை.

184 விண்ணாளுந் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணாளு மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்
கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
அண்ணா மலையானைப் பாடுதுங்காண் அம்மானாய். 10

185 செப்பார் முலைபங்கன் தென்னன் பெருந்துறையான்
தப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினான்
அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த
அப்பார் சடையப்பன் ஆனந்த வார்கழலே
ஒப்பாக வொப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கும்
அப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்காண் அம்மானாய். 11

186 மைப்பொலியுங் கண்ணிகேள் மாலயனோ டிந்திரனும்
எப்பிறவி யுந்தேட என்னையுந்தன் இன்னருளால்
இப்பிறவி யாட்கொண் டினிப்பிறவா மேகாத்து
மெய்ப்பொருட் கட்டோற்றமாய் மெய்யே நிலைபேறாய்

---

10. மாண்பு - மாட்சிமைதரும் பொருள். கண் ஆர் கழல் - யாரும் தியானித்தற்குரிய திருவடி. கண்ணுதல் - எண்ணுதல்.

11. செப்பு - சிமிழ். அப்பு - தண்ணீர். கழலே ஒப்பாக ஒப்புவித்த உள்ளத்தார் - கழல்களுக்கே தம்மை அடகாகக்கொடுத்த மனத்தினையுடைய அடியார்கள். அப்பாலைக்கு அப்பாலை - சுத்த மாயாபுவனங்களுக்கு அப்பாற்பட்டவரை.

எப்பொருட்குந் தானேயாய் யாவைக்கும் வீடாகும்
அப்பொருளாநஞ்சிவனைப்பாடுதுங்காணம்மானாய். 12

**187** கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை யெங்குஞ் செறிந்தானை யன்பர்க்கு
மெய்யானை யல்லாதார்க் கல்லாத வேதியனை
ஐயா றமர்ந்தானைப் பாடுதுங்காண் அம்மானாய். 13

**188** ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவராய்
ஏனைப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை
ஊனையும் நின்றுருக்கி யென்வினையை யோட்டுகந்து
தேனையும் பாலையுங் கன்னலையும் ஒத்தினிய
கோனவன்போல் வந்தென்னைத் தன்றொழும்பிற்
கொண்டருளும்
வானவன் பூங்கழலே பாடுதுங்காண் அம்மானாய். 14

---

12. எப்பிறவியும் தேட - எல்லாப்பிறவிகளிலும் தேட. **மெய்ப்பொருட்கண் தோற்றமாய்** - அழியாப்பொருளாகிய ஆன்மாவினிடத்து விளக்கமாய். **மெய்யே நிலைபேறாய்** - சத்துத் தன்மையே தமக்குநிலையான இடமாகக்கொண்டு. **எப்பொருட்குந் தானேயாய்** - எல்லாப்பொருளுக்கும் பற்றுக்கோடாய்.

13. **சேர்ந்து அறியாக் கையானை** - குவித்தறியாத கையினை உடையானை; தான்வணங்குந்தரத்தினர் பிறரின்மையால்.

14. **கீடம்** - புழு. **ஏனைப்பிறவாய்** - மற்றைய பிறவிகளாய். **கன்னல்** - கருப்பஞ்சாறு. **கோன்** - தலைவன். **தொழும்பு** - அடிமை.

189 சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்றன் வேள்வியினில்
இந்திரனைத் தோணெரித்திட் டெச்சன் தலையரிந்
தந்தரமே செல்லும் அலர்கதிரோன் பற்றகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை யோட்டுகந்த
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்காண் அம்மானாய். 15

190 ஊனா யுயிரா யுணர்வாயென் னுட்கலந்து
தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசேர்
ஆனா அறிவாய் அளவிறந்த பல்லுயிர்க்கும்
கோனாகி நின்றவா கூறுதுங்காண் அம்மானாய், 16

191 சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்றிரடோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்
றூடுவேன் செவ்வாய்க் குருகுவேன் உள்ளுருகித்
தேடுவேன் தேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வேன் அனலேந்தி
ஆடுவான் சேவடியே பாடுதுங்காண் அம்மானாய். 17

---

15. எச்சன் - யக்ஞபுருஷனாகிய தக்ஷன். அந்தரம் - ஆகாயம். சிந்தி - சிதறி. செந்தார் - சிவந்த மாலை.

16. ஊன் - உடல். வானோரறியாவழி - பேரின்பவழி. ஆனா அறிவு - அமையாத பேரறிவு.

17. முயங்கி - கலந்து. மயங்கி - இன்பமீதூர்ச்சியால் போகம் போதாதென்ற எண்ணம் பிறக்க மயங்கி.

192 கிளிவந்த மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை
வெளிவந்த மாலயனுங் காண்பரிய வித்தகனைத்
தெளிவந்த தேறலைச் சீரார் பெருந்துறையில்
எளிவந் திருந்திரங்கி யெண்ணரிய இன்னருளால்
ஒளிவந்தென் னுள்ளத்தி னுள்ளே யொளிதிகழ
அளிவந்த அந்தணனைப் பாடுதுங்காண் அம்மானாய். 18

193 முன்னானை மூவர்க்கு முற்றுமாய் முற்றுக்கும்
பின்னானைப் பிஞ்ஞகனைப் பேணு பெருந்துறையின்
மன்னானை வானவனை மாதியலும் பாதியனைத்
தென்னானைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
என்னானை யென்னப்பன் என்பார்கட் கின்னமுதை
அன்னானை யம்மானைப் பாடுதுங்காண் அம்மானாய். 19

194 பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார்
குற்றங்கள் நீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச்
சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் தொல்புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்காண் அம்மானாய். 20

திருச்சிற்றம்பலம்

---

18. கேழ் - நிறம். வெளிவந்தமாலயன் என்றது தேட வேண்டிய இடத்தைவிட்டுத் தேடுகின்றார்களென்றபடி. தேறல் - தேன். அளி - கருணை.

19. முற்றுக்கும் - அனைத்துப்பொருள்கட்கும். பிஞ்ஞகன் - தலைக்கோலமுடையவன்.

20. பெற்றி - தன்மை. பிறர் - அன்பரல்லாத பிறர். கோதாட்டி - சீராட்டி. பற்றி இப்பாசத்தைப் பற்றற - அநாதியே பற்றிநிற்கின்ற பாசத்தில் பற்றற்றுப்போகும்படி. நாம் பற்றுவான் பற்றிய பேரானந்தம் - நாம் சிவத்தைப் பற்றுவதற்காக நம்மை வந்து பற்றிய சிவானந்தம்.

உ
சிவமயம்.

# 9. திருப்பொற்சுண்ணம்

[ ஆனந்தமனோலயம் ]

*திருத்தில்லையில் அருளியது*

[கீர்த்தித்திருவகவல் முதலிய மூன்று திருவகவல்களை யும் அருளிச்செய்து அடிகளார் தில்லையில் எழுந்தருளி யிருக்கின்ற காலத்து ஒருநாள் மகளிர் சிலர் கைகளில் வளை ஒலிக்க, அரையில் கிண்கிணிமாலை ஒலிக்க, கூந்தலின்மேல் வண்டுகள் எழுந்து ஆரவாரிக்க, முகத்தில் குறுவெயர்வை பொடிப்ப, விழிபுரளச் சுண்ணமிடித்தார்கள். அப்பொழுது தில்லையானின் எல்லையில் புகழை உலக்கைப்பாட்டாக அவர் கள் பாடினார்கள். அதைக்கேட்ட அடிகளார் தெய்வத் திரு முழுதும் நிரம்பத் திருப்பொற்சுண்ணமாக இப்பதிகத்தை ஆக்கி அருளினார்.]

**அறுசீர் ஆசிரிய விருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**195** முத்துநற் றாமம்பூ மாலைதூக்கி
முளைக்குடந் தூபநற் றீபம்வைம்மின்
சத்தியுஞ் சோமியும் பார்மகளும்
நாமக ளோடுபல் லாண்டிசைமின்

சித்தியுங் கௌரியும் பார்ப்பதியும்
கங்கையும் வந்து கவரிகொண்மின்
அத்தனை யாறனம் மானைப்பாடி
யாடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 1

196 பூவியல் வார்சடை யெம்பிராற்குப்
பொற்றிருச் சுண்ணம் இடிக்கவேண்டும்
மாவின் வடுவகி ரன்னகண்ணீர்
வம்மின்கள் வந்துடன் பாடுமின்கள்
கூவுமின் தொண்டர் புறநிலாமே
குனிமின் தொழுமினெங் கோனெங்கூத்தன்
தேவியுந் தானும்வந் தெம்மையாளச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே. 2

197 சுந்தர நீறணிந் தும்மெழுகித்
தூயபொன் சிந்தி நிதிபரப்பி
இந்திரன் கற்பக நாட்டியெங்கும்
எழிற்சுடர் வைத்துக் கொடியெடுமின்
அந்தரர் கோனயன் றன்பெருமான்
ஆழியா னாதனல் வேலன்றாதை
எந்தர மாளுமை யாள்கொழுநற்
கேய்ந்தபொற் சுண்ணம் இடித்துநாமே. 3

---

1. தாமம் - மாலை. சோமி - திருமகள். சத்தி - ரௌத்திரி. சித்தி - கணபதியின் சத்தி. கௌரி - காளி. பார்ப்பதி - உமை.

2. வடு வகிர் - மாவடுவின் பிளவு. குனிமின் - ஆடுங்கள்.

3. சுந்தரம் - அழகு. நிதி பரப்பி - நவமணியும் பொன்னு மாகிய நிதிகளைப்பரப்பி. அந்தரர் - தேவர்கள். கோன் என்றது இறைவனை. ஆழியான் - திருமால்.

198 காசணி மின்க ளுலக்கையெல்லாம்
காம்பணி மின்கள் கறையுரலை
நேச முடைய அடியவர்கள்
நின்றுநி லாவுக என்றுவாழ்த்தித்
தேசமெல் லாம்புகழ்ந் தாடுங்கச்சித்
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடிப்
பாச வினையைப் பறித்துநின்று
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 4

199 அறுகெடுப் பாரய னும்மரியும்
அன்றிமற் றிந்திர னோடமரர்
நறுமுறு தேவர்க ணங்களெல்லாம்
நம்மிற்பின் பல்லதெ டுக்கவொட்டோம்
செறிவுடை மும்மதி லெய்தவில்லி
திருவேகம் பன்செம்பொற் கோயில்பாடி
முறுவற்செவ் வாயினீர் முக்கணப்பற்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 5

200 உலக்கை பலவோச்சு வார்பெரியர்
உலகமெ லாமுரல் போதாதென்றே
கலக்க அடியவர் வந்துநின்றார்
காணவு லகங்கள் போதாதென்றே

---

4. காசு - பொன்வடம். காம்பு - பட்டுத்துணி. கறையுரல் - கருங்காலியால் செய்யப்பட்ட உரல்.

5. அறகு - மங்கலதீபம். நம்மில் பின்பல்லது - நமக்குப் பின்னாலல்லது.

நலக்க அடியோமை யாண்டுகொண்டு
நாண்மலர்ப் பாதங்கள் சூடத்தந்த
மலைக்கு மருகனைப் பாடிப்பாடி
மகிழ்ந்துபொற் சுண்ணம் இடித்துநாமே. 6

201 சூடகம் தோள்வளை யார்ப்பவார்ப்பத்
தொண்டர்கு ழாமெழுந் தார்ப்பவார்ப்ப
நாடவர் நந்தம்மை யார்ப்பவார்ப்ப
நாமும் அவர்தம்மை யார்ப்பவார்ப்பப்
பாடக மெல்லடி யார்க்குமங்கை
பங்கினை னெங்கள் பராபரனுக்
காடக மாமலை யன்னகோவுக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 7

202 வாட்டடங் கண்மட மங்கைநல்லீர்
வரிவளை யார்ப்பவண் கொங்கைபொங்கத்
தோட்டிரு முண்டந் துதைந்திலங்கச்
சோத்தெம்பி ரானென்று சொல்லிச்சொல்லி
நாட்கொண்ட நாண்மலர்ப் பாதங்காட்டி
நாயிற்க டைப்பட்ட நம்மையிம்மை
ஆட்கொண்ட வண்ணங்கள் பாடிப்பாடி
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 8

---

6. உலகம் உரலானமையின் உலக்கை போதாதென்று பல வற்றை உயர்த்துவார்கள் என்பதாம். நலக்க - நன்மைமிக.

7. சூடகம் - கைவளை. பாடகம் - காலணி. ஆடகம் - பொன். பொன்மலை இறைவனுக்கு நிறம்பற்றி ஒப்பாயிற்று.

8. வாள் - ஒளி. வரி வளை - கீற்றுக்கோடு கூடிய வளையல். முண்டம் - நெற்றி. சோத்து - தோத்திரம்.

203 வையக மெல்லாம் உரலதாக
மாமேரு வென்னும் உலக்கைநாட்டி
மெய்யெனு மஞ்சள் நிறையவட்டி
மேதகு தென்னன் பெருந்துறையான்
செய்ய திருவடி பாடிப்பாடிச்
செம்பொன் உலக்கை வலக்கைபற்றி
ஐய னணிதில்லை வாணனுக்கே
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 9

204 முத்தணி கொங்கைக ளாடவாட
மொய்குழல் வண்டின மாடவாடச்
சித்தஞ் சிவனொடு மாடவாடச்
செங்கயற் கண்பனி யாடவாடப்
பித்தெம்பி ரானொடு மாடவாடப்
பிறவி பிறரொடு மாடவாட
அத்தன் கருணையொ டாடவாட
ஆடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 10

205 மாடு நகைவாள் நிலாவெறிப்ப
வாய்திறந் தம்பவ ளந்துடிப்பப்
பாடுமின் நந்தம்மை யாண்டவாறும்
பணிகொண்ட வண்ணமும் பாடிப்பாடித்

---

9. அட்டி - இட்டு. மெய் - உண்மை.

10. சுண்ணம் இடித்தலால் அணிமுதலியன ஆடுதலை அறிவிக்கின்றது இப்பாடல்.

தேடுமின் எம்பெரு மானைத்தேடிச்
சித்தங் களிப்பத் திகைத்துத்தேறி
ஆடுமின் அம்பலத் தாடினானுக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 11

206 மையமர் கண்டனை வானநாடர்
மருந்தினை மாணிக்கக் கூத்தன்றன்னை
ஐயனை யையர்பி ரானைநம்மை
யகப்படுத் தாட்கொண் டருமைகாட்டும்
பொய்யர்தம் பொய்யனை மெய்யர்மெய்யைப்
போதரிக் கண்ணிணைப் பொற்றொடித்தோட்
பையர வல்குன் மடந்தைநல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 12

207 மின்னிடைச் செந்துவர் வாய்க்கருங்கண்
வெண்ணகைப் பண்ணமர் மென்மொழியீர்
என்னுடை யாரமு தெங்களப்பன்
எம்பெரு மானிம வான்மகட்குத்
தன்னுடைக் கேள்வன் மகன்றகப்பன்
தமையனெம் மையன் தாள்கள்பாடிப்
பொன்னுடைப் பூண்முலை மங்கைநல்லீர்
பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. 13

---

11. மாடு - பக்கம். நகை - பல்.

12. மை - விடம். மருந்து - அமுதம். பிரான் - வள்ளல். போது அரிகண் - பூப்போலும் செவ்வரிபரந்த கண்கள்.

13. இமவான் மகட்குத் தன்னுடைக் கேள்வன் - உலகத்தைப் படைத்தற்காக இறைவன் சிவமும் சத்தியும் ஆனபோது கணவன்.

208 சங்க மரற்றச் சிலம்பொலிப்பத்
தாழ்குழல் சூழ்தரு மாலையாடச்
செங்கனி வாயித ழுந்துடிப்பச்
சேயிழை யீர்சிவ லோகம்பாடிக்
கங்கையி ரைப்பஅ ராவிரைக்கும்
கற்றைச் சடைமுடி யான்கழற்கே
பொங்கிய காதலிற் கொங்கைபொங்கப்
பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. 14

209 ஞானக் கரும்பின் தெளியைப்பாகை
நாடற் கரிய நலத்தைநந்தாத்
தேனைப் பழச்சுவை யாயினானைச்
சித்தம் புகுந்து தித்திக்கவல்ல
கோனைப் பிறப்பறுத் தாண்டுகொண்ட
கூத்தனை நாத்தழும் பேறவாழ்த்திப்
பானற் றடங்கண் மடந்தைநல்லீர்
பாடிப்பொற் சுண்ணம் இடித்துநாமே. 15

---

மகன் - சத்தியினின்று சதாசிவதத்துவம் தோன்றுதலின் மகன். தகப்பன் - சிவத்தினின்றே சத்திபிறத்தலால் சத்திக்குத் தகப்பன். தமையன் - சுத்தமாயையிலிருந்து இறைவனது ஞானசத்திஅதிஷ்டிக்கச் சிவதத்துவமும் கிரியாசத்தி அதிஷ்டிக்கச் சத்திதத்துவமும் தோன்றுதலின் சத்திக்குத் தமையன்.

14. சங்கம் - வளையல். அரா - பாம்பு.

15. ஞானக்கரும்பு - சிவம். நந்தா - கெடாத. கரும்பின் தெளிவு முதலியன வாயுள் தித்திக்கும்; ஞானக்கரும்பின் தெளிவு

210 ஆவகை நாமும்வந் தன்பர் தம்மோ
டாட்செயும் வண்ணங்கள் பாடிவிண்மேல்
தேவர்க னாவிலுங் கண்டறியாச்
செம்மலர்ப் பாதங்கள் காட்டுஞ்செல்வச்
சேவக மேந்திய வெல்கொடியான்
சிவபெரு மான்புரஞ் செற்றகொற்றச்
சேவக னாமங்கள் பாடிப்பாடிச்
செம்பொன்செய் சுண்ணம் இடித்துநாமே. 16

211 தேனக மாமலர்க் கொன்றைபாடிச்
சிவபுரம் பாடித் திருச்சடைமேல்
வானக மாமதிப் பிள்ளைபாடி
மால்விடை பாடி வலக்கையேந்தும்
ஊனக மாமழுச் சூலம்பாடி
உம்பரும் இம்பரும் உய்யவன்று
போனக மாகநஞ் சுண்டல்பாடிப்
பொற்றிருச் சுண்ணம் இடித்துநாமே. 17

---

முதலியன சித்தத்துள் தானே புகுந்து தித்திக்கும் என்கின்றார். பானல் - கருங்குவளை.

16. ஆகும்வகை - ஆவகை; பசுநிலையிற் பிரிந்து சிவஞானியாய் ஆகும்வகை. சே அகம் ஏந்திய கொடி - இடபத்தைத் தன்னகத்தே தாங்கியகொடி.

17. மதிப்பிள்ளை - பிறைமதி. போனகம் - உணவு.

212 அயன்றலை கொண்டுசெண் டாடல்பாடி
அருக்க னெயிறு பறித்தல்பாடிக்
கயந்தனைக் கொன்றுரி போர்த்தல்பாடிக்
காலனைக் காலா லுதைத்தல்பாடி
இயைந்தன முப்புர மெய்தல்பாடி
ஏழை யடியோமை யாண்டுகொண்ட
நயந்தனைப் பாடிநின் றாடியாடி
நாதற்குச் சுண்ணம் இடித்துநாமே. 18

213 வட்ட மலர்க்கொன்றை மாலைபாடி
மத்தமும் பாடி மதியும்பாடிச்
சிட்டர்கள் வாழுந்தென் றில்லைபாடிச்
சிற்றம்ப லத்தெங்கள் செல்வம்பாடிக்
கட்டிய மாசுணக் கச்சைபாடிக்
கங்கணம் பாடிக் கவித்தகைம்மேல்
இட்டுநின் றாடும் அரவம்பாடி
ஈசற்குச் சுண்ணம் இடித்துநாமே. 19

---

18. செண்டு - பூப்பந்து. பிரமன் தலையைக்கிள்ளிப் பூப்பந்து ஆடுதல்போல விளையாடிய வீரத்தைப்பாடி என்பதாம். இயைந்தன - தம்முள் பொருந்தியனவாகிய. அருக்கன் - பகன் என்னும் சூரியன். எயிறு - பல். கயம் - யானை. நயம் - மேன்மை.

19. வட்டமலர்-பிறைவடிவமான மலர். மத்தம்-ஊமத்தம்பூ. மாசுணம்-பாம்பு. கச்சை-அரைப்பட்டி. சிட்டர்கள்-மேலோர்கள்.

214 வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியு மாயிரு ளாயினார்க்குத்
துன்பமு மாயின்பம் ஆயினார்க்குப்
பாதியு மாய்முற்றும் ஆயினார்க்குப்
பந்தமு மாய்வீடும் ஆயினாருக்
காதியும் அந்தமும் ஆயினாருக்
காடப்பொற் சுண்ணம் இடித்துநாமே.

திருச்சிற்றம்பலம்.

---

20. ஒன்றோடொன்று மாறுபட்ட பொருள்களாக இறைவன் இருக்கின்ற நிலையை உணர்த்துகின்றார். பாதியுமாய் - ஒருபாதி உமையும் ஒருபாதி சிவமுமாகக் காட்சியளித்தல்.

உ

சிவமயம்

# 10. திருக்கோத்தும்பி

## [சிவனோடைக்கியம்]

*திருத்தில்லையில் அருளியது.*

[அடிகளார் தண் பொழிலில் பூக்களில் மொய்க்கின்ற வண்டுகளில் அரசவண்டைப்பார்த்து 'நீ இறைவன் திருவடிக்கண் சென்று வழுத்துக' என்று திருக்கோத்தும்பியான இதனைக் கூறியருளுகின்றார்.]

**தாவு கொச்சகக் கலிப்பா**

*திருச்சிற்றம்பலம்*

215 பூவேறு கோனும் புரந்தரனும் பொற்பமைந்த
நாவேறு செல்வியும் நாரணனும் நான்மறையும்
மாவேறு சோதியும் வானவருந் தாமறியாச்
சேவேறு சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 1

---

1. பூ ஏறு கோன் - பிரமன், புரந்தரன் - இந்திரன். நா ஏறு செல்வி - நாமகள். மா ஏறு சோதி - உருத்திரன். சே - இடபம். கோத்தும்பீ - அரசவண்டே.

216 நாஞரென்னுள்ளமார்ஞானங்களார்என்னையாரறிவார்
வானோர் பிரானென்னை யாண்டிலனேன் மதிமயங்கி
ஊஞ ருடைதலையில் உண்பலிதேர் அம்பலவன்
தேஞர் கமலமே சென்றூதாய் கோத்தும்பீ. 2

217 தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றேன் உண்ணுதே
நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தொறும்
[எப்போதும்
அனைத்தெலும் புண்ணெக ஆனந்தத் தேன்சொரியுங்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 3

218 கண்ணப்ப னொப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில்என்னையுமாட்கொண்டருளி

---

2. நான் யார் - ஆன்மாவாகிய நான் யார். உள்ளம் - ஆன்மாவிற்குச் சிறந்த கரணமாய் நன்மை தீமைகளை அறியச் செய்யும் மனம். பலி - பிச்சை. தேஞர் கமலம் - திருவடித்தாமரை. மதி மயங்கி - தாமும் ஐந்தலை பெற்றிருக்கின்றோமென்று அறிவு திரிந்த பிரமன். மயங்கி என்பது 'ஒடுங்கி' என்பதுபோலப் பெயராய் நின்றது. மயக்கியினுடைய தலை எனக்கூட்டுக.

3. தினைத்தனை தேனுள்ளதோர் பூ எனக் கூட்டுக. பறந்து சென்று தேன் உண்ணவேண்டாதே நினைத்தாலும் கண்டாலும் பேசினும் பருவம் முதலியன பாராது எப்பொழுதும் பேரின்பத் தேன் சொரியும் அரியமலர் அடிமலர் என்பதை விளக்குகின்றூர். குனிப்பு - திருநடனம்.

வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப்பொன் னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ

219 அத்தேவர் தேவர் அவர்தேவ ரென்றிங்ஙன்
பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
பத்தேது மில்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
மெய்த்தேவர் தேவர்க்கேசென்றூதாய்கோத்தும்பீ. 5

220 வைத்த நிதிபெண்டிர் மக்கள்குலம் கல்வியென்னும்
பித்த வுலகிற் பிறப்போ டிறப்பென்னுஞ்
சித்த விகாரக் கலக்கந் தெளிவித்த
வித்தகத் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ. 6

221 சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனைக்
கெட்டேன் மறப்பேனோ கேடுபடாத் திருவடியை
ஒட்டாத பாவித் தொழும்பரைநாம் உருவறியோம்
சிட்டாய சிட்டற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 7

---

4. என் ஒப்பில் - அடியேனுக்கு இருவினை ஒப்புவந்த காலத்து; அன்றி, இழிதகைமையால் எனக்கு ஒப்பார் யாருமில்லாத என்னை எனவுமாம். வணண - அழகாக. பணித்து - கட்டளையிட்டு.

5. பொய்த்தேவு - பொய்யான தெய்வங்களை. பத்து - பற்று.

6. உலகம் பித்தாவது நிதியும் பெண்டிரும் கல்வியும் குலமும் மக்களுமாகிய இவற்றால் என்பதை விளக்குகின்றார். சித்தவிகாரக் கலக்கம் - ஐயவிபரீதங்களால் உண்டாகும் மனமாறுபாடு. வித்தகம் - ஞானம்.

7. சட்டோ - விரைவாக; சற்று. சிட்டாய - அறிவுடைப் பொருளாகிய; நுட்பமாகிய என்றுமாம்.

222 ஒன்றாய் முளைத்தெழுந் தெத்தனையோ கவடுவிட்டு
நன்றாக வைத்தென்னை நாய்சிவிகை யேற்றுவித்த
என்றாதை தாதைக்கும் எம்மனைக்குந் தம்பெருமான்
குன்றாத செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 8

223 கரணங்க ளெல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்
சரணங்க ளேசென்று சார்தலுமே தானெனக்கு
மரணம் பிறப்பென் றிவையிரண்டின் மயக்கறுத்த
கருணைக் கடலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 9

224 நோயுற்று மூத்துநான் நுந்துகன்றா யிங்கிருந்து
நாயுற்ற செல்வ நயந்தறியா வண்ணமெல்லாம்
தாயுற்று வந்தென்னை யாண்டுகொண்ட தன்கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 10

---

8. ஒன்றாய் முளைத்தெழுந்து - சிவதத்துவமாக முதலிற் றோன்றி. எத்தனையோ கவடுவிட்டு - கலை புவனங்கள் தத்துவங்களாகிற கிளைகளாகவிரிந்து. நாய்சிவிகை ஏற்றுவித்த - நாயைப் பல்லக்கில் ஏற்றினாற்போல என்னை ஆட்கொண்ட.

9. கரணங்கள் - அந்தக்கரணங்களும் புறக்கரணங்களும். கறைமிடற்றன் - நீலகண்டன். மயக்கு - கலப்பு.

10. நுந்துகன்றாய் - தள்ளப்பட்டகாளையாய். நாயுற்ற செல்வம் - நாய்பெற்ற செல்வம் (போல). இக்கருத்துப்பட 'நாய்பெற்ற தெங்கம் பழம்' என்ற பழமொழி வழங்குவதும் கருதத்தக்கது. நாய் பெருஞ்செல்வம் பெற்றும் தானும் பயன்படுத்திக்கொள்ளாது பிறர்க்கும் பயன்படச் செய்யாதவாறுபோலக் கிடைத்தற்கரிய பேறு பெற்றும் பெற்றதன் பயனை இழந்தேன் என்பதாம். தேய் உற்ற - ஒளி பொருந்திய.

225 வன்னெஞ்சக் கள்வன் மனவலியன் என்னாதே
கன்னெஞ் சுருக்கிக் கருணையினால் ஆண்டுகொண்ட
அன்னந் திளைக்கும் அணிதில்லை அம்பலவன்
பொன்னங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 11

226 நாயேனைத் தன்னடிகள் பாடுவித்த நாயகனைப்
பேயேன துள்ளப் பிழைபொறுக்கும் பெருமையனைச்
சீயேது மில்லாதென் செய்பணிகள் கொண்டருளுந்
தாயான ஈசற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 12

227 நான்றனக் கன்பின்மை நானுந்தா னும்மறிவோம்
தானென்னை யாட்கொண்ட தெல்லாருந் தாமறிவார்
ஆன கருணையும் அங்குற்றே தானவனே
கோனென்னைக் கூடக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. 13

228 கருவாய் உலகினுக் கப்புறமா யிப்புறத்தே
மருவார் மலர்க்குழன் மாதினொடும் வந்தருளி

---

11. வல்நெஞ்சக் கள்வன் என்று கூறியவர் மீட்டும் மனம் வலியன் என்றது கள்ளத்தால் தன்நெஞ்சு வலிமையானதென்றும் அதனால் பற்றப்பட்ட உலக இச்சையிலிருந்து மீளாதவலிமை உடையதென்றும் விளக்கியவாறு.

12. சீ ஏதும் இல்லாது - வெறுப்புணர்ச்சி சிறிதும் இன்றி. உள்ளப்பிழை - தீயன சிந்தித்தலாகிய மனப்பிழை.

13. தனக்கு - இறைவனுக்கு. ஆன கருணை - அத்தகைய கருணை. தான் அசை. அவனே என் தலைவன் என்க.

அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட
திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பீ. 14

229 நானுமென் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் தையலுந் தாழ்சடையோன் ஆண்டிலனேல்
வானுந் திசைகளும் மாகடலும் ஆயபிரான்
தேனுந்து சேவடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 15

230 உள்ளப் படாத திருவுருவை யுள்ளுதலும்
கள்ளப் படாத களிவந்த வான்கருணை
வெள்ளப் பிரானெம்பி ரானென்னை வேறேயாட்
கொள்ளப் பிரானுக்கே சென்றூதாய்கோத்தும்பீ. 16

231 பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாடோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை யாட்கொண்ட
ஐயாவென் னாருயிரே அம்பலவா என்றவன்றன்
செய்யார் மலரடிக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 17

---

14. கருவாய் - படைப்பிற்கு மூலமாய். இப்புறத்தே - உலகிற்குள். மரு - மணம். திருவான தேவன் - அழகிய ஞானாகாச வடிவான தேவன்.

15. எவ்விடத்தோம் - எவ்வளவு தூரத்தில் இருப்போம். உந்து - வெளிப்படுக்கின்ற.

16. உள்ளப்படாத - கரணங்களால் அறியமுடியாத. கள்ளப்படாத - வெளிப்பட்ட; அன்றிக் கள்ளால் ஆக்கப்படாத. உலகில் களி கள்ளால் உண்டாவதாயிருக்க இஃது அங்ஙனமன்றாதலின் கள்ளப்படாத களியென்றார் எனினும் ஆம். ஆட்கொள் அப்பிரான் எனப்பிரிக்க.

17. பொய்யாய - அழிந்துவிடுவதாகிய. அழுந்தி - அதுவே நமக்கு எல்லாம் என்று எண்ணி.

232 தோலுந் துகிலுங் குழையுஞ் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமுந் தொக்க வளையும் உடைத்தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ. 18

233 கள்வன் கடியன் கலதியிவன் என்னாதே
வள்ளல் வரவர வந்தொழிந்தான் என்மனத்தே
உள்ளத் துறுதுயர் ஒன்றொழியா வண்ணமெல்லாம்
தெள்ளுங் கழலுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 19

234 பூமே லயனோடு மாலும் புகலரிதென்
றேமாறி நிற்க அடியேன் இறுமாக்க
நாய்மேற் றவிசிட்டு நன்றாப் பொருட்படுத்த
தீமேனி யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ. 20

திருச்சிற்றம்பலம்.

---

18. இடப்பாகத்துப் பட்டாடையும் தோடும் சந்தனமும் பச்சைக்கிளியும் வளையலடுக்கும் உடைய அம்மையும், வலப்பாகத்தில் தோலும் குண்டலமும் திருநீறும் சந்தனமும் சூலமும்பெற்ற இறைவனும் ஆக ஒரு திருமேனியிலேயே காணப்பெறும் சிறப்பை விளக்குகின்றார். பசுஞ்சாந்து இருமேனிக்கும் பொது. அன்றிச் சந்தனமும் கருஞ்சாந்தும் என்று பொருள்கொள்வாருமுளர். அர்த்தநாரீசுவரர் திருமேனி உலகத்தோற்றத்திற்கு மூலம் என்பதை விளக்கத் தொன்மைக்கோலம் என்றார்.

19. கடியன் - கொடியன். கலதி - கீழ்மகன். வரவரவந்து - மெதுவாகவந்து. ஒழிந்தான் - புறம்போதலை விட்டான். உறுதுயர் ஒன்று ஒழியாவண்ணம் - துன்பம் ஒன்றையும் தப்பவிடாமல.

20. ஏமாறிநிற்க - ஏமாந்துநிற்க. நன்றாக என்பது நன்றா எனக் குறைந்து நின்றது. பொருட்படுத்த - பொருளாகச்செய்த.

உ

சிவமயம்

# 11. திருத்தெள்ளேணம்

## [சிவனோடடைவு]

திருத்தில்லையில் அருளியது

[அடிகளார் தில்லையில் எழுந்தருளியிருக்குங்காலத்து ஒருநாள் சோலையினுட் புகுந்தார். அங்கே காதற்சிறுமியர் பலர் பொய்தல் விளையாடினர். அவர் வாயிலிருந்து வெறும் பொருள்விளங்கும்பாடல் பல வருவதைக் கேட்டார். உடனே அம்பலவாணனைப் பாடுங்கள் என்று பணிப்பார்போல அவர்கள் உரைப்பதாகத் திருத்தெள்ளேணம் என்பதனை ஆக்கியருளினர்.]

தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

235 திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநா மறியவோர் அந்தணனாய் ஆண்டுகொண்டான்
ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற் காயிரந்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 1

---

1. உரு-கடவுளின் சிறப்பியல்பு. அந்தணனாய்-வேதிய வடிவங் கொண்ட குருமூர்த்தியாய். தெள்ளேணம் கொட்டுதல் - பறை அடித்து விளையாடுதல். பாடிக் கொட்டாமோ என்பதனால் பாட்டுக்

236 திருவார் பெருந்துறை மேயபிரான் என்பிறவிக்
கருவே ரறுத்தபின் யாவரையுங் கண்டதில்லை
அருவாய் உருவமு மாயபிரான் அவன்மருவுந்
திருவாரூர் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 2

237 அரிக்கும் பிரமற்கும் அல்லாத தேவர்கட்கும்
தெரிக்கும் படித்தன்றி நின்றசிவம் வந்துநம்மை
உருக்கும்பணிகொள்ளும்என்பதுகேட் டுலகமெல்லாம்
சிரிக்குந் திறம்பாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 3

238 அவமாய தேவர் அவகதியி லழுந்தாமே
பவமாயங் காத்தென்னை யாண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாமொழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 4

---

கேற்பக் கொட்டப்படுகின்ற விளையாட்டாதலின் தெள்ளேணங் கொட்டுதல் தம்பட்டமடித்தல் அல்லது சோபனம் கொட்டுதலாகக் கூடும், ஆராய்க.

2. பிறவியின் மூலமாகிய வினையும், அதற்கு அடியாயுள்ள மலமும் அற்ற பிறகு சிவபோகம் பெருக, அவனும் தானுங்கூட அற்று அழுந்திநிற்றலின் யாவரையுங்கண்டதில்லை என்றார்.

3. தெரித்தல் - அறிவித்தல். இறைவன் ஆட்கொள்வான் என்பதைக்கேட்ட உலகம் அதன் உண்மையை அறியாமல் சிரிப்பதாயிற்று.

4. அவமாய - பயனற்ற. அவகதி - கீழ்நிலை. பவமாயம் - பிறவிக்கு ஏதுவாகிய வஞ்சனை. நவம் - புதுமை.

239 அருமந்த தேவர் அயன்திருமாற் கரியசிவம்
உருவந்து பூதலத்தோர் உகப்பெய்தக்கொண்டருளிக்
கருவெந்து வீழக் கடைக்கணித்தென் னுளம்புகுந்த
திருவந்த வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 5

240 அரையாடு நாகம் அசைத்தபிரான் அவனியின்மேல்
வரையாடு மங்கைதன் பங்கொடும்வந் தாண்டதிறம்
உரையாட உள்ளொளியாட ஒண்மாமலர்க்
[கண்களினீர்த்
திரையாடு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 6

241 ஆவா அரியயனிந் திரன்வானோர்க் கரியசிவன்
வாவாவென் றென்னையும் பூதலத்தே வலித்
[தாண்டுகொண்டான்
பூவா ரடிச்சுவ டென்றலைமேற் பொறித்தலுமே
தேவான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ. 7

---

5. உவப்பு - மகிழ்ச்சி. வெந்து - மீட்டும் முளையாதவாறு கருகி. திரு - சிவஞானத்திரு.

6. அசைத்த - கட்டிய. அவனி - பூமி. பங்கு - இடப்பாகம் இறைவன் ஆட்கொண்டதிறத்தைப் பேசப்பேச உள்ஒளி மிகும்; அதனால் கண்களில் நீர்பெருகும் என அன்புச்சுவையின் மெய்ப்பாடுகள் அறிவிக்கப்படுகின்றன.

7. ஆ ஆ என்பது வியப்பிடைச்சொல். வலித்து - வலிய. தேவானவா - தெய்வத்தன்மைபெற்ற விதத்தை.

242 கறங்கோலை போல்வதோர் காயப்பிறப்போ
[டிறப்பென்னும்
அறம்பாவ மென்றிரண் டச்சந்தவிர்த்தென்னை
[யாண்டுகொண்டான்
மறந்தேயுந் தன்கழலன் மறவாவண்ண நல்கியவத்
திறம்பாடல் பாடிநாம் தெள்ளேணங்கொட்டாமோ. 8

243 கன்னா ருரித்தென்ன என்னையுந்தன் கருணையினால்
பொன்னார் கழல்பணித் தாண்டபிரான் புகழ்பாடி
மின்னேர் நுடங்கிடைச்செந்துவர்வாய்வெண்ணகையீர்
தென்னாதென் னாவென்றுதெள்ளேணங்கொட்டாமோ

244 கனவேயுந் தேவர்கள் காண்பரிய கனைகழலோன்
புனவே யனவளைத் தோளியொடும் புகுந்தருளி
நனவே யெனைப்பிடித் தாட்கொண்டவா நயந்து
[நெஞ்சஞ்
சினவேற்கண் நீர்மல்கத் தெள்ளேணங்கொட்டாமோ.

---

8. கறங்கோலை - பனையோலைக் காற்றாடி. அறம் பாவம் என்றிரண்டு - புண்ணியம் பாவம் என்னும் இரண்டு.

9. கல் நார் உரித்தென்ன - கல்லில் நார் உரித்தாலொப்ப. பணித்து - பணிகொண்டு.

10. கனவேயும் - கனவிலும். புன வேய் அன்ன - காட்டு மூங்கிலையொத்த. நனவே - நல்லவிழிப்பு நிலையிலேயே. சின வேல் கண் - சிறிய வேல்போன்ற கண்கள். சின்ன என்பது சின என விகாரமாயிற்று.

245 கயன்மாண்ட கண்ணிதன் பங்கனெனைக் கலந்
[தாண்டலுமே
அயன்மாண் டருவினைச் சுற்றமுமாண்டவனியின்மேல்
மயன்மாண்டு மற்றுள்ள வாசகமாண் டென்னுடைய
செயன்மாண்டவா பாடித்தெள்ளேணங்கொட்டாமோ.

246 முத்திக் குழன்று முனிவர்குழா நனிவாட
அத்திக் கருளி யடியேனை யாண்டுகொண்டு
பத்திக் கடலுட் பதித்த பரஞ்சோதி
தித்திக்கு மாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.12

247 பார்பாடும் பாதாளர் பாடும்விண்ணோர் தம்பாடும்
ஆர்பாடுஞ் சாரா வகையருளி யாண்டுகொண்ட
நேர்பாடல் பாடி நினைப்பரிய தனிப்பெரியோன்
சீர்பாடல் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ.13

248 மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே
நூலே நுழைவரியான் நுண்ணியனாய் வந்தடியேன்

---

11. மாண்ட உவம உருபு. அயல் - பக்கம். மேல் மயல் மாண்டு - மேல் உள்ள பற்று அழிந்து. அருவினைச்சுற்றம் - அரிய இருவினைகளும் அவற்றால் உண்டாகிய சுற்றங்களும். மயல் - மயக்கம். வாசகம் - உரை.

12. உழன்று - வருந்தி. அத்தி - துர்வாசரால் சாபம்பெற்ற வெள்ளையானை. பதித்த - தாழ்த்திய.

13. பாடும் - பக்கமும், நேர்பாடல் - நேரிடுதல்; எதிர்ப்பாடு.

பாலே புகுந்து பரிந்துருக்கும் பாவகத்தால்
சேலேர்கண் ணீர்மல்கத் தெள்ளேணங்கொட்டாமோ.

249 உருகிப் பெருகி யுளங்குளிர முகந்துகொண்டு
பருகற் கினிய பரங்கருணைத் தடங்கடலை
மருவித் திகழ்தென்னன் வார்கழலே நினைந்தடியோம்
திருவைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 15

250 புத்தன் புரந்தராதியர் அயன்மால் போற்றிசெயும்
பித்தன் பெருந்துறை மேயபிரான் பிறப்பறுத்த
அத்தன் அணிதில்லை யம்பலவன் அருட்கழல்கள்
சித்தம் புகுந்தவா தெள்ளேணங் கொட்டாமோ. 16

251 உவலைச் சமயங்கள் ஒவ்வாத சாத்திரமாம்
சவலைக் கடலுளனாய்க் கிடந்து தடுமாறுங்
கவலைக் கெடுத்துக் கழலிணைகள் தந்தருளுஞ்
செயலைப் பரவிநாம் தெள்ளேணங் கொட்டாமோ. 17

---

14. நூலே நுழைவரியான் - நூல்களால் அறியமுடியாதவன். மால்முதலியோர் அறிவு பசு ஞானமாதலாலும், நூலறிவுபாசஞானம் ஆதலாலும் அறியமுடியாதவனுயினன். பாவகம் - முற்றியபாவனை. சேலேர் கண் - சேல்மீனை ஒத்தகண்.

15. பெருகி - உடல் பூரித்து. பருகற்கு இனிய கடல் என்றது ஏனையகடல் பருகமுடியாமலிருப்பதை எண்ணி. மருவி - சேர்ந்து.

16. புத்தன் - பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியன். புரந்தரன் - இந்திரன். அத்தன் - தலைவன்.

17. உவலை - பொய் - சவலைக்கடல் - திட்பமில்லாதகடல். சவலைப்பிள்ளை என்ற வழக்கிலும் சவலையின் பொருளாற்றல் காண்க. கவலை - பிளவுபட்ட எண்ணம்.

252 வான்கெட்டு மாருத மாய்ந்தழனீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்
கூன்கெட்டுயிர்கெட்டுணர்வுகெட்டென்னுள்ளமும்போய்
நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ.

253 விண்ணோர் முழுமுதல் பாதாளத் தார்வித்து
மண்ணோர் மருந்தயன் மாலுடைய வைப்படியோம்
கண்ணார வந்துநின்றான் கருணைக் கழல்பாடித்
தென்னாதென்னாவென்றுதெள்ளேணங்கொட்டாமோ.

254 குலம்பாடிக் கொக்கிறகும் பாடிக் கோல்வளையாள்
நலம்பாடி நஞ்சுண்ட வாபாடி நாடோறும்
அலம்பார் புனற்றில்லை யம்பலத்தே யாடுகின்ற
சிலம்பாடல் பாடிநாம் தெள்ளேணங்கொட்டாமோ. 20

திருச்சிற்றம்பலம்.

---

18. வான்கெட்டு - எல்லாப்பூதங்களும் நிலவ இடங்கொடுத்து நிற்கும் ஆகாயமும் ஒடுங்கி. தான் - சிவம். சலிப்பு - அசைதல். நான் - தற்போதம்.

19. வித்து - விதை. மருந்து என்றார் பிறவிநோய் தணித்தலின். வைப்பு - செல்வம்.

20. குலம் - சிறப்பு; அடியார்கூட்டம் என்றுமாம். கொக்கு இறகு - கொக்குவடிவமான அசுரனைக்கொன்று இறைவன் சூடிய இறகு. கோல்வளை - திரண்ட வளையல். அலம்பு ஆர்புனல் - அசைகின்ற நிறைந்தநீர்.

உ

சிவமயம்

# 12. திருச்சாழல்

## [சிவனுடைய காருணியம்]

*திருத்தில்லையில் அருளியது*

[ஈழநாட்டுப் புத்தர்கள், தில்லையின் எல்லையில் பெருமையையும் அந்தணர் சிறப்பையும் கேள்வியுற்றுப் பொருமைகொண்டு, அரசனையும் அவனது ஊமைப்பெண்ணையும் அழைத்துக்கொண்டு சிதம்பரத்துக்குவந்தனர். தில்லைவாழந்தணரை வாதுக்கு அழைத்தனர். அந்தணர்கள் அஞ்சி இறைவனை வழிபட்டனர். இறைவன் ஆணையின் வண்ணம் வாதவூரடிகளைப் புத்த நந்தியின் முன்பு கொண்டுவந்து விட்டனர். அடிகள் அவர்கள்கேட்ட குதர்க்க வினக்களுக்கு விடையருளியும், அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. மறக்கருணைகாட்டி ஆட்கொள்ள எண்ணி அவர்களை ஊமைகளாக்கினர். அதனைக்கண்டு வியந்த அரசன் ‘பேசவல்லார் ஊமையாயினமையின், ஊமை பேசவேண்டுமே; என்மகளைப் பேசச்செய்க’ என்று வேண்டிக்கொண்டான். அடிகளார் அப்பெண்மணியை அங்குவரவழைத்துப் புத்தர்கள் கேட்ட வினக்களுக்கு விடையளிக்கப் பணித்தார். அப்பெண்மணியும் புலவர்கள் வியக்க, மன்னன் மகிழ, புத்தர்கள் மயங்க விடையளித்தாள். அவ்விடையைத் திருச்சாழலாக அமைத்து அடிகளார் அருளிச்செய்தனர்.]

## தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்

255 பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதுந் திருவாயான் மறைபோலுங் காணேடீ
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ. 1

256 என்னப்பன் எம்பிரான் எல்லார்க்குந் தானீசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமதுஎன்னேடீ
மன்னுகலைதுன்னுபொருள்மறைநான்கேவான்சரடாத்
தன்னையேகோவணமாச்சாத்தினன்காண்சாழலோ. 2

257 கோயில் சுடுகாடு கொல்புலித்தோல் நல்லாடை
தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ

---

1. பொங்கு அரவம் - சீறுகின்ற பாம்பு. மறை - இரகசியம்; வேதம். பூசுவது கொண்டு நிலையாமையுணர்த்தியும், பேசுவது கொண்டு ஞானத்தின் நிலைமையுணர்த்தியும், பூண்பது கொண்டு தமது அளவில் ஆற்றலையுணர்த்தியும் இயல்பானான் என்க. சாழல் என்பது மகளிர் விளையாட்டில் ஒன்று.

2. துன்னம் - தைத்தல். மன்னு கலை - என்றும் அழியாது நிலை பெற்ற ஞானக்கலை; அது இறைவனுக்குக் கோவணம். மறை நான்கும் அரைஞாண். சரடு - அரைக்கயிறு.

தாயுமிலி தந்தையிலி தான்றனிய னாயிடினும்
காயி னுலகனைத்துங் கற்பொடிகாண் சாழலோ. 3

258 அயனை அநங்கனை அந்தகனைச் சந்திரனை
வயனங்கண் மாயா வடுச்செய்தான் காணேடீ
நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தால்
சயமன்றோ வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ. 4

259 தக்கனையும் எச்சனையும் தலையறுத்துத் தேவர்கணம்
தொக்கனவந் தவர்தம்மைத்தொலைத்ததுதானென்னேடீ
தொக்கனவந் தவர்தம்மைத் தொலைத்தருளி
[யருள்கொடுத்தங்
கெச்சனுக்குமிகைத்தலைமற்றருளினன்காண்சாழலோ.

260 அலரவனும் மாலவனும் அறியாமே யழலுருவாய்
நிலமுதற்கீ ழண்டமுற நின்றதுதா னென்னேடீ

---

3. சுடுகாடு - சர்வசங்கார காலத்து எல்லாம் ஒடுங்கிய இடம். காயில் - கோபித்தால். தாயுமிலி தந்தையிலி என்றார் உலகந் தோன்றுதற்குத் தானே காரணமாய்த் தனக்கு ஒரு தோற்றம் இல்லாதவனாயிருத்தலின்.

4. அயன் - பிரமன். அநங்கன் - மன்மதன். அந்தகன் - யமன். வயனம் - அடையாளம். நயனம் - கண்.

5. எச்சன் - யாகபுருஷன். மிகைத்தலை - இழிந்த ஆட்டுத் தலை. எச்சன் - தக்கன்.

நிலமுதற்கீ ழண்டமுற நின்றிலனேல் இருவருந்தம்
சலமுகத்தா லாங்காரந் தவிரார்காண் சாழலோ. 6

261 மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தா லவன்சடையிற் பாயுமது வென்னேடீ
சலமுகத்தா லவன்சடையிற் பாய்ந்திலளேற்
[றரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ்சாழலோ.

262 கோலால மாகிக் குரைகடல்வா யன்றெழுந்த
ஆலால முண்டான் அவன்சதுர்தா னென்னேடீ
ஆலால முண்டிலனேல் அன்றயன்மா லுள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர்காண் சாழலோ. 8

263 தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ. 9

---

6. கீழண்டம் - கீழே பாதளம்வரையிலும் உள்ள அண்டங்கள். சலம் - கோபம். ஆங்காரம் - செருக்கு. இருவர் - அயனும் திருமாலும்.

7. மற்றொருத்தி - கங்கை, பிலமுகம் - பாதாளம்.

8. கோலாலம் - கோலாகலம். குரை கடல் - ஒலிக்கின்ற கடல். ஆலாலம் - விஷம். சதுர் - சாமர்த்தியம். வீடுவர் - அழிவர்.

9. உகந்தான் - விரும்பினன். இருநிலத்தோர் - மக்கள். யோகு - யோகம். வீடுவர் - அழிவர். இறைவன் ஆதிசத்தியோடு

264 தானந்த மில்லான் தனையடைந்த நாயேனை
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்தான் காணேடீ
ஆனந்த வெள்ளத் தழுத்துவித்த திருவடிகள்
வானுந்து தேவர்கட்கோர் வான்பொருள்காண்
[சாழலோ. 10

265 நங்காயி தென்னதவம் நரம்போ டெலும்பணிந்து
கங்காளந் தோண்மேலே காதலித்தான் காணேடீ
கங்காள மாமாகேள் காலாந்த ரத்திருவர்
தங்காலஞ் செய்யத் தரித்தனன்காண் சாழலோ. 11

266 கானார் புலித்தோ லுடைதலையூண் காடுபதி
ஆனா லவனுக்கிங் காட்படுவா ராரேடீ
ஆனாலுங் கேளாய் அயனுந் திருமாலும்
வானாடர் கோவும் வழியடியார் சாழலோ. 12

---

பொருந்தாவிடின் மக்களும் யோகிகளாய் ஒழிவடைவர். ஆகவே போகியாய் இருந்து உயிர்கட்குப் போகத்தை நல்குகின்றான் என்பது.

10. அந்தம் - முடிவு. உந்து - உயர்ந்த.

11. கங்காளம் - முழு எலும்பு. தோள்மேலே காதலித்தான் - தண்டமாகத் தோள்மேலே சாத்தியவன். இருவர் - பிரம விஷ்ணுக்கள் என்ற இருவர்.

12. கான் ஆர் புலி - காட்டில்வசிக்கின்ற புலி; அடை சாதி அடை. ஊண் - உண்ணுங்கலம். பதி - உறைவிடம். வானாடர் கோ- இந்திரன்.

267 மலையரையன்பொற்பாவைவா ணுதலாள்பெண்டிருவை
உலகறியத் தீவேட்டான் என்னுமது வென்னேடீ
உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாங் கலங்கிடுங்காண்
[சாழலோ. 13

268 தேன்புக்க தண்பணைசூழ் தில்லைச்சிற் றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது வென்னேடீ
தான்புக்கு நட்டம் பயின்றிலனேல் தரணியெல்லாம்
ஊன்புக்க வேற்காளிக் கூட்டாங்காண் சாழலோ. 14

269 கடகரியும் பரிமாவும் தேருமுகந் தேறாதே
இடபமுகந் தேறியவா றெனக்கறிய இயம்பேடீ
தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த அந்நாளில்
இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண்
[சாழலோ. 15

---

13. வேட்டான் - மணந்தான். கலை நவின்ற பொருள்கள் - கலைகளை விரித்த நூல்கள்.

14. பணை - வயல். நட்டம் - நடனம். ஊட்டாம் - உண்ணப்படும் உணவாம்.

15. கடகரி - மதம் ஒழுகுகின்ற யானை. பரியா - குதிரை.

270 நன்றாக நால்வர்க்கும் நான்மறையி னுட்பொருளை
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தான் காணேடீ
அன்றாலின் கீழிருந்தங் கறமுரைத்தா னாயிடினும்
கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே
[சாழலோ. 16

271 அம்பலத்தே கூத்தாடி அமுதுசெயப் பலிதிரியும்
நம்பனையுந் தேவனென்று நண்ணுமது வென்னேடீ
நம்பனையு மாமாகேள் நான்மறைகள் தாமறியா
எம்பெருமான் ஈசாவென் றேத்தினகாண்
[சாழலோ. 17

272 சலமுடைய சலந்தரன்றன் உடல்தடிந்த நல்லாழி
நலமுடைய நாரணற்கன் றருளியவா றென்னேடீ
நலமுடைய நாரணன்றன் நயனமிடந் தரனடிக்கீழ்
அலராக இடவாழி யருளினன்காண் சாழலோ. 18

---

16. நால்வர் - சனகர், சனந்தனர், சனற்குமாரர், சனந்தனர். ஆல் - கல்லாலவிருக்ஷம். அறம் உரைத்தான் - ஞானோபதேசஞ் செய்தவன். கூட்டோடு - அடியோடு.

17. நம்பன் - நம்பப்படத்தக்கவன். தேவன் - கடவுள். பலி - பிச்சை.

18. சலம் - வஞ்சகம். தடிந்த - கொன்ற. ஆழி - சக்ராயுதம். நயனம் இடந்து - கண்ணைத் தோண்டி.

273 அம்பரமாம் புள்ளித்தோல் ஆலாலம் ஆரமுதம்
எம்பெருமா னுண்டசதுர் எனக்கறிய இயம்பேடீ
எம்பெருமா னேதுடுத்தங் கேதமுது செய்திடினும்
தம்பெருமை தானறியாத் தன்மையன்காண்
[சாழலோ. 19

274 அருந்தவருக் காலின்கீழ் அறமுதலா நான்கனையும்
இருந்தவருக் கருளுமது எனக்கறிய இயம்பேடீ
அருந்தவருக் கறமுதலான் கன்றருளிச் செய்திலனேல்
திருந்தவருக் குலகியற்கை தெரியாகாண் சாழலோ.20

திருச்சிற்றம்பலம்.

19. அம்பரம் - ஆடை. புள்ளித்தோல் - புள்ளிகளையுடைய புலித்தோல். சதுர் - சாமர்த்தியம். தம் பெருமை தான் அறியாத் தன்மையன் என்றது இறைவன் இயற்றுவன யாவும், அவன் பெருமையை வெளிப்படுக்க அன்று; ஆன்மாக்கள் மீது வைத்த கைம்மாறு கருதாத கருணையால் என்ற கருத்துப்பற்றி.

20. அருந்தவர் - சனகாதி நால்வர். அறம் முதலாநான்கு - அறம் பொருள் இன்பம் வீடு என்பன. திருந்த அவருக்கு என்றது விகாரத்தாற் றெக்கு திருந்தவருக்கு என்றாயிற்று.

உ

சிவமயம்

# 13. திருப்பூவல்லி

## [மாயாவிசய நீக்குதல்]

*திருத்தில்லையில் அருளியது*

**[இதுவும் அடிகளார் தில்லையில் எழுந்தருளியிருக்குங் காலத்து மகளிர் பூம்பொழிலில் பூக் கொய்வதைக் கண்டு அவர்கள் கூற்றுகத் திருப்பூவல்லி என்ற இதனை அருளிச் செய்கின்றார்.]**

**தரவு கொச்சகக்கலிப்பா**

*திருச்சிற்றம்பலம்*

**275** இணையார் திருவடி யென்றலைமேல் வைத்தலுமே
துணையான சுற்றங்க ளத்தனையுந் துறந்தொழிந்தேன்
அணையார் புனற்றில்லை யம்பலத்தே யாடுகின்ற
புணையாளன் சீர்பாடிப் பூவல்லி கொய்யாமோ. **1**

---

**1.** இணை - இரண்டு. இணையார் திருவடி என்றது இறைவன் திருவடிகள் தமக்கு ஒப்பு தாமேயாதல் கருதி. புணையாளன் - தெப்பம்போன்றவன்.

276 எந்தையெந் தாய்சுற்ற மற்றுமெல்லாம் என்னுடைய
பந்தமறுத் தென்னை யாண்டுகொண்ட பாண்டிப்பிரான்
அந்த இடைமருதில் ஆனந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ. 2

277 நாயிற் கடைப்பட்ட நம்மையுமோர் பொருட்படுத்துத்
தாயிற் பெரிதுந் தயாவுடைய தம்பெருமான்
மாயப் பிறப்பறுத் தாண்டானென் வல்வினையின்
வாயிற் பொடியட்டிப் பூவல்லி கொய்யாமோ. 3

278 பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
எண்பட்ட தக்கன் அருக்கனெச்சன் இந்துவனல்
விண்பட்ட பூதப் படைவீர பத்திரராற்
புண்பட்ட வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 4

---

2. பந்தம் அறுத்து - பாசங்களை நீக்கி. பொந்தைப் பரவி - பொந்தாகிய கோயிலை வணங்கி. இறைவனைத் தேன் என்றமைக்கு ஏற்ப, அவன் உறையும் இடத்தைப் பொந்து என்றார்.

3. வல்வினையின் வாயில் பொடி அட்டி - வலிய வினையின் வாயில் மண்ணைப்போட்டு. பொருள்படுத்து - பொருளாக எண்ணி.

4. பண்பட்ட - இசை உண்டான. எண்பட்ட - எண்ணத் தக்க. அருக்கன் - சூரியன். எச்சன் - யாகபுருஷன். இந்து - சந்திரன்.

279 தேனாடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான்
ஊனாடி நாடிவந் துள்புகுந்தான் உலகர்முன்னே
நானாடி யாடிநின் றோலமிட நடம்பயிலும்
வானாடர் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ. 5

280 எரிமூன்று தேவர்க் கிரங்கியருள் செய்தருளிச்
சிரமூன் றறத்தன் திருப்புருவ நெரித்தருளி
உருமூன்று மாகி யுணர்வரிதாம் ஒருவனுமே
புரமூன் றெரித்தவா பூவல்லி கொய்யாமோ. 6

281 வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்
திணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத்
[தெம்பெருமான்
அணங்கொ டணிதில்லை யம்பலத்தே யாடுகின்ற
குணங்கூரப் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 7

---

5. தேன் - வண்டு. ஊன் - உடல்; ஆகுபெயர். உள்புகுந்தான் என்றது வினைத்தூறு இறைவனை உட்புகவொட்டாது தடுத்த அருமையும், இறைவன் வலிய உட்புகுந்த கருணையும் காட்டி நிற்கின்றது. ஓலம் இட - உடன் அழைத்துச் செல்லாமையால் ஓலம் என்று கூவ.

6. மூன்று தேவர் - அக்கினி பிரமன் விஷ்ணு என்ற மூன்று தேவர். சிரம் மூன்று - தக்கன் எச்சன் இந்திரன் என மூவர் தலை. புருவம் நெரித்தல் சினத்தின் அறிகுறி. உரு மூன்றுமாகி - உருவம் அருவம் உபயம் என மூன்றுருவம் ஆகி; போகம் யோகம் கோரம் என்ற மூன்றாகி என்றுமாம். எரி மூன்று - காருகபத்நியம், ஆகவனீயம், தக்ஷிணாக்கினி என்னும் மூன்றும்.

7. இணங்க - பழக. அணங்கு - உமாதேவியார். கூர - மிக.

282 நெறிசெய் தருளித்தன் சீரடியார் பொன்னடிக்கே
குறிசெய்து கொண்டென்னை யாண்டபிரான்
[குணம்பரவி
முறிசெய்து நம்மை முழுதுடற்றும் பழவினையைக்
கிறிசெய்த வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 8

283 பன்னாட் பரவிப் பணிசெய்யப் பாதமலர்
என்னாகந் துன்னவைத்த பெரியோன் எழிற்சுடராய்க்
கன்னா ருரித்தென்னை யாண்டுகொண்டான்
[கழலிணைகள்
பொன்னான வாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 9

284 பேராசை யாமிந்தப் பிண்டமறப் பெருந்துறையான்
சீரார் திருவடி யென்றலைமேல் வைத்தபிரான்
காரார் கடல்நஞ்சை யுண்டுகந்த காபாலி
போரார் புரம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 10

285 பாலும் அமுதமும் தேனுடனாம் பராபரமாய்க்
கோலங்குளிர்ந்துள்ளங்கொண்டபிரான்குரைகழல்கள்

---

8. குறிசெய்து - இலக்காக்கி. முறிசெய்து - அடிமை ஓலை எழுதுவித்து. உடற்றும் - வருத்தும். கிறிசெய்தவா - பொய்யாக்கிய விதம்.

9. ஆகம் - உடல். துன்னவைத்த - சேரவைத்த. எழில் - எழுச்சி.

10. பிண்டம் - உடல். கார் ஆர் - கருமைநிறம் பொருந்திய.

ஞாலம் பரவுவார் நன்னெறியா மந்நெறியே
போனும் புகழ்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 11

286 வானவன் மாலயன் மற்றுமுள்ள தேவர்கட்கும்
கோனவனாய் நின்று கூடலிலாக் குணக்குறியோன்
ஆன நெடுங்கடல் ஆலால மமுதுசெய்யப்
போனக மானவா பூவல்லி கொய்யாமோ. 12

287 அன்றால நீழற்கீழ் அருமறைகள் தானருளி
நன்றாக வானவர் மாமுனிவர் நாடோறும்
நின்றார ஏத்தும் நிறைகழலோன் புனைகொன்றைப்
பொன்றாது பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 13

288 படமாக என்னுள்ளே தன்னிணைப்போ தவையளித்திங்
கிடமாகக் கொண்டிருந் தேகம்ப மேயபிரான்
தடமார் மதிற்றில்லை யம்பலமே தானிடமா
நடமாடு மாபாடிப் பூவல்லி கொய்யாமோ. 14

---

11. கோலம் - வடிவம். குரைகழல்கள் - ஒலிக்கின்ற வீரக் கழலையணிந்த திருவடி.

12. கூடல் இலாக் குணக் குறியோன் - பொருந்தாத குணமும் அடையாளமும் உடையவன். போனகம் - உணவு.

13. ஆர - நிரம்ப. தாது - மகரந்தம்.

14. படம் - சித்திரம். இணைப்போது - இரண்டு திருவடி மலர்கள்.

289 அங்கி யருக்கன் இராவணனந் தகன்கூற்றன்
செங்கண் ணரியயன் இந்திரனும் சந்திரனும்
பங்கமில் தக்கனும் எச்சனுந்தம் பரிசழியப்
பொங்கியசீர் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 15

290 திண்போர் விடையான் சிவபுரத்தார் போரேறு
மண்பால் மதுரையிற் பிட்டமுது செய்தருளித்
தண்டாலே பாண்டியன் றன்னைப் பணிகொண்ட
புண்பாடல் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 16

291 முன்னாய மாலயனும் வானவருந் தானவரும்
பொன்னார் திருவடி தாமறியார் போற்றுவதே
என்னாக முள்புகுந் தாண்டுகொண்டா னிலங்கணியாம்
பன்னாகம் பாடிநாம் பூவல்லி கொய்யாமோ. 17

---

15. இறைவனுடைய வீரத்தால் தன்மையிழந்த தேவர்கள் பதினொருவரைக் குறிக்கின்றார். அந்தகன் - இயமன். கூற்றன் - அவன் தூதன். ‘அந்தகற்காகவந்த கூற்றினைக் குமைப்பர்போலும் குறுக்கை வீரட்டனாரே’ என்னும் தேவாரமும் இருவரும் அழிந்தமையை எடுத்துக்காட்டும். அந்தகன் - அந்தகாசுரன் என்பாரும் உளர்.

16. போர் ஏறு - போரிற் சிங்கம்போன்றவன். தண்டாலே பணிகொண்ட - கைத்தடியால் அடிக்கப்பெற்ற.

17. முன் ஆய - எல்லாத் தேவர்களிலும் முதன்மை ஆய. தானவர் - அசுரர். இலங்கு அணியாம் பல் நாகம் - விளங்குகின்ற ஆபரணங்களாகிய பல பாம்புகளை.

292 சீரார் திருவடித் திண்சிலம்பு சிலம்பொலிக்கே
ஆராத வாசையதா யடியே னகமகிழத்
தேரார்ந்த வீதிப் பெருந்துறையான் திருநடஞ்செய்
பேரானந் தம்பாடிப் பூவல்லி கொய்யாமோ. 18

293 அத்தி யுரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்
பித்த வடிவுகொண் டிவ்வுலகிற் பிள்ளையுமாம்
முத்தி முழுமுதலுத் தரகோச மங்கைவள்ளல்
புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமோ. 19

திருச்சிற்றம்பலம்.

---

18. திண் சிலம்பு - ஆன்மாக்களது மலச் செறிவை உடைக்கும் வலிய சிலம்பு. ஆராத - அமையாத.

19. அத்தி - யானை. பிள்ளையுமாம் என்றது விருத்தகுமார பாலரான வரலாற்றைக் குறித்தது.

மாவார வேறி மதுரைநகர் புகுந்தருளித்
தேவார்ந்த கோலந் திகழப் பெருந்துறையான்
கோவாகி வந்தெம்மைக் குற்றேவல் கொண்டருளும்
பூவார் கழல்பரவிப் பூவல்லி கொய்யாமோ. 20

20. இப்பாடல் பழைய பதிப்புக்களில் காணப்பட்டிலது. மா - குதிரை. தேவார்ந்தகோலம் - தெய்வத்தன்மைநிறைந்த திருவுருவம். திகழ் அப்பெருந்துறை எனப் பிரிக்க.

உ
சிவமயம்

# 14. திருவுந்தியார்

## [ஞானவெற்றி]

*திருத்தில்லையில் அருளியது*

**[இதுவும் அடிகளார் தில்லையிலெழுந்தருளியிருக்கின்ற காலத்து மகளிர் உந்தி பறந்து விளையாடுதலைக் கண்டபோது அவர்கள் கூற்றாகக் கூறியது.]**

**கலித்தாழிசை**

*திருச்சிற்றம்பலம்*

**294** வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற. 1

**295** ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தங்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெருமிகை யுந்தீபற. 2

---

1. வில்லு - மேரு; உகரம் சாரியை. பூசல் - சண்டை. வில் தொழிற்பட்டிலது ஆனாலும் வெற்றி விளைந்தது என்பதாம்.

2. ஓரம்பு - திருமாலாகிய ஒரு அம்பு. முப்புரம் எரியக் கையில் ஓரம்பேயிருந்தது எனச் சிலசொல் வருவித்து முடிக்க. மிகை - மிகுதியாய்ப் பயன்படாதொழிந்தது என்பது.

296 தச்சு விடுத்தலுந் தாமடி யிட்டலும்
அச்சு முறிந்ததென் றுந்தீபற
அழிந்தன முப்புரம் உந்தீபற. 3

297 உய்யவல் லாரொரு மூவரைக் காவல்கொண்
டெய்யவல் லானுக்கே யுந்தீபற
இளமுலை பங்கனென் றுந்தீபற. 4

298 சாடிய வேள்வி சரிந்திடத் தேவர்கள்
ஓடிய வாபாடி யுந்தீபற
உருத்திர நாதனுக் குந்தீபற. 5

---

3. **தச்சுவிடுத்தலும்** - தேரினைத்தைத்து (செய்து) வெளியில் ஓடவிட்டதும். **அடியிட்டலும்** - அடிவைத்ததும். **அச்சு** - தேரச்சு. **முப்புரமழிந்தன** - முப்புரங்கள்வெந்து ஒழிந்தன. **தச்சுவிடுத்தலும்** - தச்சிருந்த கட்டுக்கள் நீங்குதலும் அதாவது மலம் பரிபக்குவமடைதலும். **தாமடியிட்டலும்** - திருவருட்பதிவு உண்டாதலும். **அச்சு முறிந்தது** - ஆன்மா தற்போதமழிந்தது. **முப்புரம் அழிந்தன** - முப்புரமென்பன மும்மலகாரியமாதலின் அவை தம்வலி தொலைந்தன எனவும் உரைப்ப.

4. **ஒருமூவர்** - தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்பார்.

5. **சாடிய** - வீரபத்திரர்தாக்கிய. **சரிந்திட** - அழிய. **உருத்திர நாதன்** - உருத்திரர்களுக்கெல்லாம் தலைவன்.

299 ஆவா திருமால் அவிப்பாகங் கொண்டன்று
சாவா திருந்தானென் றுந்தீபற
சதுர்முகன் தாதையென் றுந்தீபற. 6

300 வெய்யவன் அங்கி விழுங்கத் திரட்டிய
கையைத் தறித்தானென் றுந்தீபற
கலங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 7

301 பார்ப்பதி யைப்பகை சாற்றிய தக்கனைப்
பார்ப்பதென் னேயேடி யுந்தீபற
பணைமுலை பாகனுக் குந்தீபற. 8

302 புரந்தர னாரொரு பூங்குயி லாகி
மரந்தனி லேறினார் உந்தீபற
வானவர் கோனென்றே யுந்தீபற. 9

303 வெஞ்சின வேள்வி வியாத்திர னார்தலை
துஞ்சின வாபாடி யுந்தீபற
தொடர்ந்த பிறப்பற வுந்தீபற. 10

---

6. திருமால் அவிப்பாகம்கொண்டது தக்கன்யாகத்தில். சதுர்முகன் - பிரமன்.

7. வெய்யவன் - விரும்பத்தக்கவன்; கொடியவனென்றுமாம். வெய்யவனாகிய அங்கி என்க.

8. பகைசாற்றிய - பகைத்துப்பேசிய.

9. புரந்தரன் - இந்திரன்.

10. வியாத்திரன் - உறுதியாக உள்ளவன். துஞ்சினவா - இறந்ததை.

304 ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக்
கூட்டிய வாபாடி யுந்தீபற
கொங்கை குலுங்கநின் றுந்தீபற. 11

305 உண்ணப் புகுந்த பகனொளித் தோடாமே
கண்ணைப் பறித்தவா றுந்தீபற
கருக்கெட நாமெலாம் உந்தீபற. 12

306 நாமகள் நாசி சிரம்பிர மன்படச்
சோமன் முகனெரித் துந்தீபற
தொல்லை வினைகெட வுந்தீபற. 13

307 நான்மறை யோனு மகத்திய மான்படப்
போம்வழி தேடுமா றுந்தீபற
புரந்தரன் வேள்வியில் உந்தீபற. 14

308 சூரியனார் தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற
மயங்கிற்று வேள்வியென் றுந்தீபற. 15

---

11. விதி - சிறுவிதியாய தக்கன்.

12. பகன் - சூரியன். கருக்கெட - அநாதியே பற்றிவரும் வினைவயத்தாலுளதாகிய பிறவிகெட.

13. நாசி - மூக்கு. சோமன் - சந்திரன்.

14. மகத்து இயமான் - யாகத்தில் எஜமானனாயிருந்த தக்கன்.

15. மயங்கிற்று - கலங்கியது. சூரியனார் - பூஷா என்னும் சூரியன்.

309 தக்கனு ரன்றே தலையிழந் தார்தக்கன்
மக்களைச் சூழநின் றுந்தீபற
மடிந்தது வேள்வியென் றுந்தீபற. 16

310 பாலக னார்க்கன்று பாற்கடல் ஈந்திட்ட
கோலச் சடையற்கே யுந்தீபற
குமரன்றன் தாதைக்கே யுந்தீபற. 17

311 நல்ல மலரின்மேல் நான்முக னார்தலை
ஒல்லை யரிந்ததென் றுந்தீபற
உகிரால் அரிந்ததென் றுந்தீபற. 18

312 தேரை நிறுத்தி மலையெடுத் தான்சிரம்
ஈரைந்தும் இற்றவா றுந்தீபற
இருபதும் இற்றதென் றுந்தீபற. 19

திருச்சிற்றம்பலம்

---

16. மடிந்தது - அழிந்தது.

17. பாலகன் - உபமன்யு. கோலம் - அழகு.

18. உகிர் - நகம்.

19. மலையெடுத்தான் - கயிலையைப் பெயர்த்தெடுத்த இராவணன்.

ஏகாச மிட்ட இருடிகள் போகாமல்
ஆகாசங் காவலென் றுந்தீபற
அதற்கப்பா லுங்காவ லென் றுந்தீபற. 20

20. இப்பாடல் சிலபிரதிகளில் காணப்பட்டிலது. ஏகாசம் - உத்தரீயம். இருடிகள் - விண்செலல் மரபினராகிய வாலகில்யர்கள்.

உ

சிவமயம்.

# 15. திருத்தோணோக்கம்

## [பிரபஞ்சசுத்தி]

*திருத்தில்லையில் அருளியது.*

[அடிகளார் தில்லையில்வசிக்கின்றகாலத்து மகளிர் சிலர் ஒருவர்தோளை ஒருவர் தட்டிவிளையாடுதலாகிய விளையாட்டைச்செய்தனர். அதனைக்கண்ட அடிகளார், அவர்கள் கூறுவதாகத் திருத்தோணுக்கமென்ற இப் பதிகத்தைப் பாடியருளினர்.]

**தரவு கொச்சகக் கலிப்பா**

*திருச்சிற்றம்பலம்*

313 பூத்தாரும் பொய்கைப் புனலிதுவே யெனக்கருதிப்
பேய்த்தேர் முகக்குறும் பேதைகுண மாகாமே
தீர்த்தாய் திகழ்தில்லை யம்பலத்தே திருநடஞ்செய்
கூத்தாவுன் சேவடி கூடும்வண்ணந் தோணோக்கம். 1

---

**1.** பூத்து ஆரும் - பூத்து நிறைந்த. பேய்த்தேர் - கானல் நீர். முகக்குறும் - மொள்ளும். தோள்நோக்கமாடுதல் திருவடி கூடுதலுக்காக் என்று குறிக்கோள் அறிவிக்கப்படுகிறது.

314 என்றும் பிறந்திறந் தாழாமே யாண்டுகொண்டான்
கன்றால் விளவெறிந் தான்பிரமன் காண்பரிய
குன்றாத சீர்த்தில்லை யம்பலவன் குணம்பரவித்
துன்றார் குழலினீர் தோணோக்கம் ஆடாமோ. 2

315 பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல்விளங்கச்
செருப்புற்ற சீரடி வாய்க்கலசம் ஊனமுதம்
விருப்புற்று வேடனார் சேடறிய மெய்குளிர்ந்தங்
கருட்பெற்று நின்றவா தோணோக்கம் ஆடாமோ. 3

316 கற்போலு நெஞ்சங் கசிந்துருகக் கருணையினால்
நிற்பானைப் போலவென் னெஞ்சினுள்ளே புகுந்தருளி
நற்பாற் படுத்தென்னை நாடறியத் தானிங்ஙன்
சொற்பால தானவா தோணோக்கம் ஆடாமோ. 4

---

2. துன்றார் குழலினீர் - நெருங்கி அடர்ந்த கூந்தலை உடைய வர்களே. என்றும் என்றது அளவுபட்டாதே என்பதாம். கன்றால் விளவெறிந்தான் - கண்ணன். குன்றாதசீர் - என்றும் குறையாதபுகழ்.

3. பொருள் - சிவபூசைக்குரிய சாதனங்கள். செருப்பு - கண்ணப்பரின் காற்செருப்பு. வாய்க்கலசம் - அவருடைய திருவாயா கிய கலசம். வேடனார் - கண்ணப்பர். சேடு - பெருமை; அழகு.

4. கல் போலும் நெஞ்சம் - கல்லைப்போல் வலிய நெஞ்சம். நெஞ்சமும் என்று இருக்கவேண்டிய இழிவுசிறப்பும்மை விகாரத் தாற்றொக்கது. நிற்பானைப்போல - என்கண்ணெதிர் நிற்பவனைப் போல. நற்பாற்படுத்து - நன்னெறியில்செலுத்தி; நல்லாரோடுகூட்டி என்றுமாம். சொற்பாலது ஆனவா - புகழ்ந்துபேசும் தன்மையில் ஆனவிதத்தை.

317 நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப்
[புணர்ந்துநின்றான்
உலகே ழெனத்திசை பத்தெனத்தா னொருவனுமே
பலவாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ. 5

318 புத்தன் முதலாய புல்லறிவிற் பல்சமயம்
தத்தம் மதங்களில் தட்டுளுப்புப் பட்டுநிற்கச்
சித்தஞ் சிவமாக்கிச் செய்தனவே தவமாக்கும்
அத்தன் கருணையினால் தோணோக்கம் ஆடாமோ. 6

319 தீதில்லை மாணி சிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் தாதைதனைத் தாளிரண்டும்

---

5. இறைவனது அஷ்டமூர்த்தி சொரூபம் பேசப்படுகிறது. பகலோன் - சூரியன். புலனாய மைந்தன் - அறிவு உடையவனாகிய இயமானன் அல்லது ஆன்மா. திசைபத்து - நேர்த்திசையும் கோணத்திசையுமாகிய எட்டோடுமண்ணும் விண்ணுமாகிய இரண்டும் கூட்டத் திசை பத்து.

6. புல்லறிவின் - சிற்றறிவினையுடைய. தட்டுளுப்புப்பட்டு - தடுமாற்றமடைந்து. சித்தம் சிவமாக்கி செய்தனவே தவமாக்கும் அத்தன் - தற்போதங்கெட்டுச் சிவபோதம் அடைந்த ஆன்மாக்கள் செய்த செயல்கள் எல்லாவற்றையும் தவமாக்கலின் இங்ஙனம் கூறினார்.

சேதிப்ப ஈசன் திருவருளால் தேவர்தொழப்
பாதகமேசோறு பற்றினவா தோணோக்கம். 7

320 மான மழிந்தோம் மதிமறந்தோம் மங்கைநல்லீர்
வானந்தொழுந்தென்னன்வார்கழலேநினைந்தடியோம்
ஆனந்தக் கூத்தன் அருள்பெறினும் அவ்வணமே
ஆனந்த மாகிநின் றாடாமோ தோணோக்கம். 8

321 எண்ணுடை மூவர் இராக்கதர்கள் எரிபிழைத்துக்
கண்ணுத லெந்தை கடைத்தலைமுன் நின்றதற்பின்
எண்ணிலி யிந்திரர் எத்தனையோ பிரமர்களும்
மண்மிசைமால்பலர்மாண்டனர்காண்தோணோக்கம். 9

322 பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்கண் இடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே

---

7. தீது இல் ஐ - தீதில்லாத் தலைவன். மாணி - பிரமசாரி யாகிய சண்டேசுவரர். சிவகருமம் - சிவபூசை. சிதைத்தான் - கெடுத்தவனாகிய எச்சதத்தன். சேதிப்ப - வெட்ட. சோறு - சாரமான பகுதி.

8. மானம் - அபிமானம். மதிமறந்தோம் - தற்போதம் கழலப் பெற்றோம். வானம் - விண்ணுலகம்.

9. மூவர் இராக்கதர்கள் - தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன் மாலி என்பார். இவர்கள் முப்புரத்திலிருந்தும் தப்பி இறைவன் திருக்கோவிலில் துவாரபாலகர்களாக இருக்கும் பேறுபெற்றனர் என்பது வரலாறு.

சங்கரன் எம்பிரான் சக்கரமாற் கருளியவா
றெங்கும் பரவிநாம் தோணோக்கம் ஆடாமோ. 10

323 காம னுடலுயிர் காலன்பற் காய்கதிரோன்
நாமகள் நாசிசிரம் பிரமன் கரமெரியைச்
சோமன் கலைதலை தக்கனையும் எச்சனையும்
தூய்மைகள் செய்தவா தோணோக்கம் ஆடாமோ. 11

324 பிரம னரியென் றிருவருந்தம் பேதைமையால்
பரம மியாம்பரம மென்றவர்கள் பதைப்பொடுங்க
அரனார் அழலுருவா யங்கே யளவிறந்து
பரமாகி நின்றவா தோணோக்கம் ஆடாமோ. 12

---

10. முதல் இரண்டடிகளில் திருமால் ஆயிரம்பூக்கொண்டு அரனை அர்ச்சித்துச் சக்கரம்பெற்ற வரலாறு காட்டப்படுகின்றது. இடந்து - தோண்டி. சங்கரன் என்பது ஈண்டு சுகத்தைச் செய்பவன் என்ற பொருள்கருதி நின்றது.

11. தக்கயாகம் முதலியவற்றில் இறைவன் வீரபத்திரராக எழுந்தருளி, கண்ட வெற்றிகளைத் தெரிவிக்கிறது. தூய்மைகள் செய்தவா - அவரவர்கள்செய்த சிவாபராதத்தைப் போக்கி புண்ணிய மேவச்செய்தது. இதனால் இறைவன் தீயனசெய்தாரைத்தண்டித்தல் மறக்கருணைகாட்டி ஆட்கொள்ளும்பொருட்டே என்பது அறியத் தக்கது.

12. இது இறைவன் அழலுருவாய் எழுந்து பிரம விஷ்ணுக்களுடைய அகந்தையை அடக்கியது அறிவிக்கிறது. பேதைமை - அறி

325 ஏழைத் தொழும்பனேன் எத்தனையோ காலமெல்லாம்
பாழுக் கிறைத்தேன் பரம்பரனைப் பணியாதே
ஊழிமுதற் சிந்தாத நன்மணிவந் தென்பிறவித்
தாழைப் பறித்தவா தோணோக்கம் ஆடாமோ. 13

326 உரைமாண்ட வுள்ளொளி யுத்தமன்வந் துளம்புகலும்
கரைமாண்ட காமப் பெருங்கடலைக் கடத்தலுமே
இரைமாண்ட இந்திரியப் பறவை யிரிந்தோடத்
துரைமாண்டவா பாடித்தோணோக்கம்ஆடாமோ. 14

திருச்சிற்றம்பலம்

---

யாமை; பரமம், பரம் - மேலானது. அளவிறந்து - எல்லை கடந்து. ஆகவே, மால் அயனுடைய பரம் அளவுக்கு உட்பட்டது என்பதும் இறைவன் பரம் எல்லைகடந்தது என்பதும் அறியத்தக்கது.

13. நெடுங்காலம் பரம்பரனைப் பணியாது பாழுக்கிறைத்த தற்குப் பரிதவிக்கின்றார். ஏழை - அறிவிலி. பாழுக்கு இறைத்தேன் என்றது காலத்தை நீராகச் சொன்னது. சிந்தாத - அழியாத. பிறவித்தாழ் - பிறவியின் தாட்பாள்.

14. இறைவன் தம் உள்ளத்துப் புகுந்த உடன் அடைந்த இன்பநிலை உணர்த்துகின்றார். உரைமாண்ட - இப்படியன் இவ் வண்ணத்தன் என்று சொல்லமுடியாமையால் வாக்கின் எல்லையைக் கடந்த. கரைமாண்ட - எல்லையற்ற. இரைமாண்ட - புலனுகர்ச்சி யாகிய உணவு அற்றுப்போக, இரிந்து - கேட்டு. துரை - இடம்; எதுகைநோக்கி துறை துரையாயிற்று.

உ

சிவமயம்

# 16. திருப்பொன்னூசல்

[அருட்சுத்தி]

திருத்தில்லையில் அருளியது.

[இதுவும் அடிகளார் தில்லையம்பதியில் எழுந்தருளி இருக்கும்போது அருளிச்செய்யப்பெற்றது. மகளிர் தண்ணிழல் தவழும் பொழிலூடு இருந்து பொன்னூசல் ஆடுவதைக்கண்ட அடிகளார், அம்மகளிர் வாய்ச்சொல்லாக ஊஞ்சல் பாட்டாகிய இதனை உரைத்தருளுகின்றார்.]

தரவு கொச்சகக் கலிப்பா

திருச்சிற்றம்பலம்.

327 சீரார் பவளங்கால் முத்தங் கயிறாக
ஏராரும் பொற்பலகை யேறி யினிதமர்ந்து
நாரா யணனறியா நாண்மலர்த்தாள் நாயடியேற்
கூராகத் தந்தருளும் உத்தர கோசமங்கை
ஆரா வமுதின் அருட்டா ளிணைபாடிப்
போரார்வேற்கண்மடவீர்பொன்னூசல்ஆடாமோ. 1

---

1. ஏர் - அழகு. தாள் ஊராகத் தந்தருளுமென்றது திருவடியை இடைவிடாது வசிக்கும் இடமாகத் தந்தருளும் என்பதாம். போரார் வேற்கண் மடவீர் - எதிர்த்தாரைப் பொருது வெற்றிகாணும்

328 மூன்றங் கிலங்கு நயனத்தன் மூவாத
வான்றங்கு தேவர்களும் காணா மலரடிகள்
தேன்றங்கித் தித்தித் தமுதூறித் தான்றெளிந்தங்
கூன்றங்கி நின்றுருக்கும் உத்தர கோசமங்கைக்
கோன்றங் கிடைமருது பாடிக் குலமஞ்ஞை
போன்றங் கனநடையீர் பொன்னூசல் ஆடாமோ. 2

329 முன்னீறு மாதியும் இல்லான் முனிவர்குழாம்
பன்னூறு கோடி யிமையோர்கள் தாநிற்பத்
தன்னீ றெனக்கருளித் தன்கருணை வெள்ளத்து
மன்னூற மன்னுமணி உத்தர கோசமங்கை
மின்னேறு மாட வியன்மா ளிகைபாடிப்
பொன்னேறு பூண்முலையீர் பொன்னூசல்ஆடாமோ.3

330 நஞ்சமர் கண்டத்தன் அண்டத் தவர்நாதன்
மஞ்சுதோய் மாடமணி யுத்தர கோசமங்கை
அஞ்சொலாள் தன்னோடுங் கூடி யடியவர்கள்

---

வேல்போன்ற கண்களையுடைய பெண்களே! என்றது, ஆண்களை வசீகரிக்கும் பெண்மையின் பெருமை கண்ணால் அமைந்தது என்பதாம்.

2. நயனம் - கண். மூவாத - மூப்படையாத. குலமஞ்ஞை போன்று - சாயலால் மயிலைப்போன்று. அனநடையீர் - நடையால் அன்னத்தை ஒத்த பெண்களே!.

3. முன் - எண்ணப்படுகின்ற. ஈறும் ஆதியும் இல்லான் - முதலும் இறுதியும் இல்லாத முதல்வன். நீறு - அருள். மன் ஊற - நிலைபெற.

நெஞ்சுளே நின்றமுத மூறிக் கருணைசெய்து
துஞ்சல் பிறப்பறுப்பான் தூய புகழ்பாடிப்
புஞ்சமார் வெள்வளையீர் பொன்னூசல் ஆடாமோ. 4

331 ஆணோ அலியோ அரிவையோ என்றிருவர்
காணாக் கடவுள் கருணையினால் தேவர்குழாம்
நாணாமே யுய்யஆட் கொண்டருளி நஞ்சுதனை
ஊணாக வுண்டருளும் உத்தர கோசமங்கைக்
கோணார் பிறைச்சென்னிக் கூத்தன் குணம்பரவிப்
பூணார் வனமுலையீர் பொன்னூசல் ஆடாமோ. 5

332 மாதாடு பாகத்தன் உத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டிநாயேனை யாட்கொண்டென் தொல்பிறவித்
தீதோடா வண்ணந் திகழப் பிறப்பறுப்பான்
காதாடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன்பால்
போதாடு பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ. 6

---

4. மஞ்சு - மேகம். துஞ்சல் - இறத்தல். புஞ்சம் - திரட்சி. வெள்வளை - சங்கின் வளை.

5. இருவர் - பிரம விஷ்ணுக்கள். அரிவை - பெண். தாம் தேவர்களாயிருந்தும் நஞ்சின்வேகத்தைப் பொறுக்கமாட்டாமையால் அவர்களுக்கு நாணம்மிக, அவர்கள் நாணாதபடி நஞ்சை உண்டார் என்பதாம். கோணார் பிறை - வளைந்த பிறை.

6. மாதாடுபாகத்தன் - உமாதேவி எழுந்தருளிய இடப் பாகத்தன். தாது - மகரந்தம். கோதாட்டி - சீராட்டி. தொல்பிறவித்

333 உன்னற் கரியதிரு வுத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி ஆடு மணிமயில்போல்
என்னத்தன் என்னையுமாட் கொண்டான் எழில்பாடிப்
பொன்னொத்தபூண்முலையீர்பொன்னூசல்ஆடாமோ. 7

334 கோல வரைக்குடுமி வந்து குவலயத்துச்
சால அமுதுண்டு தாழ்கடலின் மீதெழுந்து
ஞால மிகப்பரிமேற் கொண்டு நமையாண்டான்
சீலந் திகழுந் திருவுத்தர கோசமங்கை
மாலுக் கரியானை வாயார நாம்பாடிப்
பூலித் தகங்குழைந்து பொன்னூசல் ஆடாமோ. 8

---

தீது - பழமையாகிய பிறவியால்விளைந்த சஞ்சிதவினைகள். ஓடாவண்ணந்திகழ - வேறு எவற்றாலும் ஓடாதவண்ணம் விளங்கவும். பிறப்பு அறுப்பான் - அவ்வினையின் காரியமாகவந்த பிறவியை அறுப்பவன்.

7. அன்னத்தின்மேலேறி ஆடும் அணிமயில் பொற்பலகையின் மீது இருந்து ஆடுகின்ற மகளிருக்கு உவமை.

8. கோலவரைக் குடுமிவந்து - அழகிய கைலையுச்சியினின்றும் குருமேனிதாங்கிவந்து. அமுதுண்டு - உணவை உண்டு. தாழ்கடலின் மீதெழுந்து - தாழ்ந்த கடலலையைப்போல மேலெழுந்துதாவி. ஞால மிக - உலகம் உயர. பரிமேற்கொண்டு - குதிரைமீது ஏறி, என்றது கடலலையைப்போலத் தாவிவருகின்ற குதிரையின்மேல் உலகம் உயரப் பெருமான் எழுந்தருளியதை விளக்கியவாறு. பூலித்து - பூரித்து; ரகர லகரப்போலி.

335 தெங்குலவு சோலைத் திருவுத்தர கோசமங்கை
தங்குலவு சோதித் தனியுருவம் வந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமும் ஆட்கொள்வான்
பங்குலவு கோதையும் தானும் பணிகொண்ட
கொங்குலவு கொன்றைச் சடையான் குணம்பரவிப்
பொங்குலவுபூண்முலையீர்பொன்னூசல்ஆடாமோ. 9

திருச்சிற்றம்பலம்.

---

9. தெங்கு - தென்னை. எந்தரமும் - எத்தகைய நிலையிலும்; எங்கள் நிலையிலும் எனினுமாம். பங்கு - பாதி. கோதை - கோதை போன்றாராகிய உமாதேவியார். கொங்கு - தேன்.

# 18. அன்னைப்பத்து

## [ஆத்துமபூரணம்]

*திருத்தில்லையில் அருளியது*

[அடிகளார் தில்லையில் எழுந்தருளியிருக்கின்றகாலத்து, ஒருநாள் சிறுமியொருத்தி தன் தாயைநோக்கி இறைவன் தன்மையாகத் தான்கண்டவைகளைக் கூறினாள். அதனைச் செவிமடுத்த அடிகளார் சிறுமி கூற்றாகவே இதனை ஆக்கி அருளினார்.]

**கலிவிருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**336** வேத மொழியர்வெண் ணீற்றர்செம் மேனியர்
நாதப் பறையினர் அன்னே யென்னும்
நாதப் பறையினர் நான்முகன் மா லுக்கும்
நாதரிந் நாதனார் அன்னே யென்னும். 1

---

1. நாதப்பறையினர் - நாததத்வத்தில் விளங்கும் ஓங்காரத்தைப் பறையாகக்கொண்டவர். இந்நாதனார் என்று சிறுமி கூறினாள் அன்னைக்கு. இதனால் அன்னை ஆண்டில் முதிர்ந்தும் அருண்முதிர்வுற்றிலள் என்பதும், சிறுமி அஃதுற்று, நாதப்பறையினரே நான்முகனுக்கும் மாலுக்கும் தலைவர் என்றும் உண்மையுணர்த்தினாள் என்பதாம்.

337 கண்ணஞ் சனத்தர் கருணைக் கடலினர்
உண்ணின் றுருக்குவர் அன்னே யென்னும்
உண்ணின் றுருக்கி யுலப்பிலா வானந்தக்
கண்ணீர் தருவரால் அன்னே யென்னும். 2

338 நித்த மணாளர் நிரம்ப வழகியர்
சித்தத் திருப்பரால் அன்னே யென்னும்
சித்தத் திருப்பவர் தென்னன் பெருந்துறை
அத்தரா னந்தரால் அன்னே யென்னும்.

339 ஆடரப் பூணுடைத் தோல்பொடிப் பூசிற்றோர்
வேடமி ருந்தவா றன்னே யென்னும்
வேடமி ருந்தவா கண்டுகண் டென்னுள்ளம்
வாடுமிது வென்னே அன்னே யென்னும். 4

---

2. அஞ்சனம் - மை. உலப்பிலா - அழியாத. உள் நின்று உருக்கி, அதன் விளைவாக வற்றாத ஆனந்தக்கண்ணீரைத் தருவர் என்கின்றாள்.

3. நித்தமணாளர் - நித்யகல்யாணர், ஆனந்தர் - ஆனந்தமே வடிவானவர்.

4. ஆடு அர பூண் - ஆடுகின்ற பாம்பாகிய ஆபரணம். உடை தோல் - உடுத்த உடை புலித்தோல். உள்ளம் வாடும் என்றது பிறர்க்கு இல்லாத பெருஞ் செல்வமும் தன்மையும் பெற்றிருந்தும் பொன், பட்டு, களபகத்தூரியின்றி இவற்றைக் கொண்டமையின் என்பது. அன்றி இவைகளும் பேரழகு செய்கின்றமையின் அழகி லீடுபட்டு மிகவாடுகின்றது என்றுமாம்.

340 நீண்ட கரத்தர் நெறிதரு குஞ்சியர்
பாண்டிநன் னாடரால் அன்னே யென்னும்
பாண்டிநன் னாடர் பரந்தெழு சிந்தையை
ஆண்டன்பு செய்வரால் அன்னே யென்னும். 5

341 உன்னற் கரியசீர் உத்தர மங்கையர்
மன்னுவ தென்னெஞ்சில் அன்னே யென்னும்
மன்னுவ தென்னெஞ்சில் மாலயன் காண்கிலார்
என்ன அதிசயம் அன்னே யென்னும். 6

342 வெள்ளைக் கலிங்கத்தர் வெண்டிரு முண்டத்தர்
பள்ளிக் குப்பாயத்தர் அன்னே யென்னும்
பள்ளிக் குப்பாயத்தர் பாய்பரி மேல்கொண்டென்
உள்ளங் கவர்வரால் அன்னே யென்னும். 7

---

5. நெறிதருகுஞ்சியர் - சுருண்டுநெறிந்த மயிரினை உடையர். பரந்து - எங்கும் வியாபித்து.

6. உன்னற்கு அரிய சீர் - நினைத்தற்கு அரிய புகழ். மன்னுவது - நிலைபெறுவது.

7. கலிங்கம் - ஆடை. முண்டத்தர் - நெற்றியையுடையவர். பள்ளிகுப்பாயத்தர் - பள்ளிக்கு ஏற்ற சட்டையையுடையவர். பள்ளி - அறச்சாலை.

343 தாளி யறுகினர் சந்தனச் சாந்தினர்
ஆளெம்மை யாள்வரால் அன்னே யென்னும்
ஆளெம்மை யாளும் அடிகளார் தங்கையில்
தாள மிருந்தவா றன்னே யென்னும். 8

344 தையலோர் பங்கினர் தாபத வேடத்தர்
ஐயம் புகுவரால் அன்னே யென்னும்
ஐயம் புகுந்தவர் போதலும் என்னுள்ளம்
நையும் இதுவென்னே அன்னே யென்னும். 9

345 கொன்றை மதியமும் கூவிள மத்தமும்
துன்றிய சென்னியர் அன்னே யென்னும்
துன்றிய சென்னியின் மத்தம்உன் மத்தமே
இன்றெனக் கானவா றன்னே யென்னும். 10

திருச்சிற்றம்பலம்

---

8. தாளி யறுகினர் - தாளிக்கொடியையும் அறுகையும் உடையவர். இறைவன் திருக்கையில் தாளம்வைத்திருக்கின்றார் என்பது நினைத்தற்குரியது.

9. தையல் - உமாதேவி; பெண்பாதியாயிருந்தும் தவவேடத்தர் என்பது வியப்பு. ஐயம் - பிச்சை. ஐயம்புகுந்து அவர்போதலும் என் உள்ளம் நையும் எனப் பிரித்துக் காண்க.

10. கூவிளம் - வில்வம். மத்தம் - ஊமத்தம். உன்மத்தம் - பைத்தியம்.

உ

சிவமயம்

# 18. குயிற்பத்து

## ஆத்தும விரக்கம்

*திருத்தில்லையில் அருளியது*

**[தில்லையில் எழுந்தருளியிருந்தகாலத்து வசந்தகாலம்வர பொழில்கள் பூத்துக்குலுங்கின. தேமா தளிர்த்தன. மாங்குயில் கள் அழகாகக் கூவத்தொடங்கின. அந்நிலை அடிகளார்க்கு இறையுணர்ச்சியைப் பெருக்கிற்று. அதனால் அடிகளார் தலை வனைப்பிரிந்த தலைவியானார். பிரிவு பெரிதும் வருத்துவதா யிற்று. அதனால் 'குயிலே! அவன்வரக் கூவுக' என இந்தக் குயிற்பத்தை யருளுகின்றார்.]**

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

*திருச்சிற்றம்பலம்*

**346** கீத மினிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்
பாத மிரண்டும் வினவிற் பாதாள மேழினுக் கப்பாற்
சோதி மணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற
[தொன்மை
ஆதி குணமொன்று மில்லான் அந்தமி லான்வரக்
[கூவாய். **1**

---

**1.** *கீதம் - இசை. பாதாளம் ஏழு - ஏழாவதாகிய பாதாளம்.* **சொல்** *இறந்து* **-** *சொல்லின்* **எல்லையைக்** *கடந்து.* **தொன்மை ஆதி -** *பழமையும் முதலும்.*

347 ஏர்தரு மேழுல கேத்த எவ்வுரு வுந்தன் னுருவாய்
ஆர்கலி சூழ்தென் னிலங்கை யழகமர் வண்டோ
[தரிக்குப்
பேரரு ளின்ப மளித்த பெருந்துறை மேயபி ரானைச்
சீரியவாயாற்குயிலேதென்பாண்டிநாடனைக்கூவாய். 2

348 நீல வுருவிற் குயிலே நீண்மணி மாட நிலாவும்
கோல வழகிற் றிகழும் கொடிமங்கையுள்ளுறைகோயில்
சீலம் பெரிது மினிய திருவுத் தரகோச மங்கை
ஞாலம் விளங்க விருந்த நாயக னைவரக் கூவாய். 3

349 தேன்பழச் சோலை பயிலுஞ் சிறுகுயி லேயிது கேள்நீ
வான்பழித் திம்மண் புகுந்து மனிதரை யாட்கொண்ட
[வள்ளல்
ஊன்பழித் துள்ளம் புகுந்தென் உணர்வது
[வாயவொ ருத்தன்
மான்பழித் தாண்டமென் னோக்கி மணாளனை நீவரக்
[கூவாய். 4

---

2. ஏர் தரும் - அழகிய. ஆர்கலி - கடல். வண்டோதரிக்குப் பேரருள் அளித்த பிரான் என்றது, இராவணன் மனைவியாகிய வண்டோதரியின் அன்புக்கு இரங்கி, பெருமான் இலங்கைசென்று அருள்புரிந்துவந்தார் என்ற பெருந்துறைப்புராண வரலாற்றைக் குறிப்பது.

3. கோலம் - அழகு. கொடிமங்கை - கொடிபோன்ற உமா தேவியார். சீலம் - எளியனாயிருக்குந்தன்மை.

4. பயிலும் - இடைவிடாது தங்கும். வான் பழித்து - போக பூமியாகிய வானைப்பழித்து. மண் புகுந்து - ஞானபூமியாகிய மண்ணுலகத்தில் எழுந்தருளி. ஊன் - உடல்.

350 சுந்தரத் தின்பக் குயிலே சூழ்சுடர் ஞாயிறு போல
அந்தரத் தேநின் றிழிந்திங் கடியவ ராசைய றுப்பான்
முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்
சிந்துரச் சேவடி யானைச் சேவக னைவரக் கூவாய். 5

351 இன்பந் தருவன் குயிலே ஏழுல கும்முழு தாளி
அன்ப னமுதளித் தூறும்ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரிமேல்வருவானைக்
கொம்பின் மிழற்றுங்குயிலேகோகழிநாதனைக் கூவாய்.

352 உன்னையுகப்பன் குயிலே உன்றுணைத் தோழியு மாவன்
பொன்னை யழித்தநன் மேனிப் புகழிற் றிகழு மழகன்
மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறை மேய
தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங்
[கன்வரக் கூவாய். 7

---

5. சுந்தரம் - அழகு. சூழ்சுடர் ஞாயிறு - கிரணங்கள் சூழ்ந்த சூரியன். அந்தரம் - ஆகாயம். சிந்துரம் - பொடி.

6. சுவடு - தழும்பு. சுவடு ஒத்த பரி எனவும் ஒத்த வருவான் எனவும் கூட்டிப் பொருள்காண்பர். கோகழிநாதன் - திருவாவடு துறைப் பெருமான்.

7. உகப்பன் - விரும்புவன். பரிமிசை வந்தவள்ளல் - குதிரை மேல்வந்த அருள்வள்ளல். புயங்கன் - பாம்புநடனத்தையுடையவன்.

353 வாவிங்கே நீகுயிற் பிள்ளாய் மாலொடு நான்முகன் தேடி
ஓவி யவருன்னி நிற்ப ஒண்டழல் விண்பிளந் தோங்கி
மேவியன் றண்டங் கடந்து விரிசுட ராய்நின்ற மெய்யன்
தாவிவரும்பரிப் பாகன் தாழ்சடை யோன்வரக் கூவாய்.

354 காருடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில் வாழுங் குயிலே
சீருடைச் செங்கம லத்திற் றிகழுரு வாகிய செல்வன்
பாரிடைப்பா தங்கள்காட்டிப்பாசம றுத்தெனை யாண்ட
ஆருடை யம்பொனின் மேனி அமுதினை நீவரக் கூவாய்.

355 கொந்தணவும்பொழிற்சோலைக்கூங்குயிலேயிதுகேள்நீ
அந்தண னாகிவந் திங்கே அழகிய சேவடி காட்டி
எந்தம ராமிவ னென்றிங் கென்னையு மாட்கொண் டருளும்
செந்தழல்போற்றிரு மேனித் தேவர்பி ரான்வரக் கூவாய். 10

திருச்சிற்றம்பலம்.

---

8. ஓவி - களைத்தொழிந்து. தாவி வரும்பரி - பாய்ந்து வரும் குதிரை.

9. கார் - கருமை. பொன்திகழ் மேனி - ஒளிவிளங்குகின்ற உடல். ஆர் - ஆத்திமாலை.

10. கொந்து - கொத்து. அணவும் - நெருங்கிய. எம் தமர் - எங்களைச் சேர்ந்தவர்.

உ

சிவமயம்

# 19. திருத்தசாங்கம்

## [அடிமைகொண்ட முறைமை]

திருத்தில்லையில் அருளியது

[சோலையில் இருக்கின்ற கிளியைப்பார்த்து, 'கிளியே! நீ பெருமான் பெயரைச்சொல்; நாட்டைச்சொல்; ஆற்றைச் சொல்; ஊரைச்சொல்' எனச்சொல்விப்பதாகத் திருத்தசாங்கம் என்னும் இதனைப் பாடியருளினர். இது தலைவியின் நிலையிலிருந்து தலைவனது பத்து உறுப்புக்களையும் அவற்றினது சிறப்புக்களையும் அடிகளார், கிளிக்குப் பயிற்றுவிப்பதாக அமைந்துள்ளது.]

நேரிசை வெண்பா

திருச்சிற்றம்பலம்

356 ஏரா ரிளங்கிளியே யெங்கள் பெருந்துறைக்கோன்
சீரார் திருநாமம் தேர்ந்துரையாய்—ஆரூரன்
செம்பெருமான் வெண்மலரான் பாற்கடலான்
[செப்புவபோல்
எம்பெருமான் தேவர்பிரான் என்று. 1

---

1. ஏர் - அழகு. தேர்ந்து - ஆராய்ந்து. வெண்மலரான் - பிரமன். பாற்கடலான் - திருமால். கிளியே! பிரமனும் திருமாலும் சொல்வதுபோல ஆரூரன் என்று, செம்பெருமான் என்று, தேவர் பிரான் என்று உரையாய் என்றார்.

257 ஏதமிலா இன்சொல் மரகதமே யேழ்பொழிற்கும்
நாதனமை யாளுடையான் நாடுரையாய்— காதலவர்க்
கன்பாண்டு மீளா அருள்புரிவான் நாடென்றும்
தென்பாண்டி நாடே தெளி. 2

358 தாதாடு பூஞ்சோலைத் தத்தாய் நமையாளும்
மாதாடும் பாகத்தன் வாழ்பதியென்—கோதாட்டிப்
பத்தரெல்லாம்பார்மேற் சிவபுரம்போற் கொண்டாடும்
உத்தர கோசமங்கை யூர். 3

359 செய்யவாய்ப் பைஞ்சிறகிற் செல்வீநஞ் சிந்தைசேர்
ஐயன் பெருந்துறையான் ஆறுரையாய்—தையலாய்
வான்வந்த சிந்தை மலங்கழுவ வந்திழியும்
ஆனந்தங் காணுடையான் ஆறு. 4

---

2. மரகதம் - பச்சை. கிளியை மரகதமே என்றது அன்பும் நிறமும்பற்றி. அன்பு ஆண்டு - அன்பினால் ஆட்கொண்டு. மீளா அருள் - மீண்டுவாராமைக்கு ஏதுவாகிய அருளை. தெளி - அறி.

3. தத்தாய் - கிளியே. கோதாட்டி - பாராட்டி.

4. கிளியைச் செல்வீ என்றது, காதன்மைபற்றிவந்த திணை வழுவமைதி; செல்லுகின்றபறவையே எனினுமாம். தையலாய் - பெண்ணே; வான் - பெருமை.

360 கிஞ்சுகவா யஞ்சுகமே கேடில் பெருந்துறைக்கோன்
மஞ்சன் மருவு மலைபகராய்—நெஞ்சத்
திருளகல வாள்வீசி இன்பமரு முத்தி
அருளுமலை யென்பதுகாண் ஆய்ந்து. 5

361 இப்பாடே வந்தியம்பு கூடுபுகல் என்கிளியே
ஒப்பாடாச் சீருடையான் ஊர்வதென்னே
—எப்போதும்
தேன்புரையுஞ் சிந்தையராய்த் தெய்வப்பெண்
[ணேத்திசைப்ப
வான்புரவி யூரு மகிழ்ந்து. 6

362 கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்
[துறைக்கோன்
மாற்றாரை வெல்லும் படைபகராய்—ஏற்றார்
அழுக்கடையா நெஞ்சுருக மும்மலங்கள் பாயுங்
கழுக்கடைகாண் கைக்கொள் படை. 7

---

5. கிஞ்சுகம் - முருக்கம்பூ. அம்சுகம் - அழகியகிளி. மஞ்சன் - மைந்தன் என்பதன் மரூஉ; அழகன் எனினுமாம். இருள் - அஞ்ஞானம். வாள் - ஞானவாள்.

6. இப்பாடு - இந்தப்பக்கம். கூடு புகல் - கூட்டிற் புகாதே. ஒப்பு ஆடா - ஒப்பில்லாத. வான்புரவி - ஞானகாயமாகிய குதிரை.

7. கோல் தேன் - கொம்புத்தேன். கிள்ளாய் - கிளியே. மாற்றார் - பகைவர். ஏற்றார் - உம்மால் ஆட்கொள்ளப்பெற்றவர். அழுக்கு - மலம். கழுக்கடை - சூலம்.

363 இன்பான் மொழிக்கிள்ளாய் எங்கள் பெருந்துறைக்
[கோன்
முன்பான் முழங்கு முரசியம்பாய்—அன்பாற்
பிறவிப் பகைகலங்கப் பேரின்பத் தோங்கும்
பருமிக்க நாதப் பறை. 8

364 ஆய மொழிக்கிள்ளாய் அள்ளூறும் அன்பர்பால்
மேய பெருந்துறையான் மெய்த்தாரென்—தீயவினை
நாளுமணு காவண்ணம் நாயேனை யாளுடையான்
தாளியறு காமுவந்த தார். 9

365 சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக்கோன்
கோலம் பொலியுங் கொடிகூறாய்—சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி யேர்காட்டுங்
கோதிலா வேறுங் கொடி. 10

திருச்சிற்றம்பலம்

---

8. முன்பால் - முன்பாக. பருமிக்க - பெரிய.

9. அள்ளூறும் - மிகுதியாக ஊறுகின்ற. தாளி அறுகு - கொடி அறுகு.

10. ஏதிலார் - பகைவர். ஏர் - அழகு. ஏறு - இடபம்.

உ
சிவமயம்

# 20 திருப்பள்ளியெழுச்சி

## [ திரோதான சுத்தி ]

*திருப்பெருந்துறையில் அருளியது*

[அடிகளார், திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கின்றபொழுது, விடியற்காலத்தில் இறைவனைத் துயில் எழுப்புவதாகத் திருப்பள்ளியெழுச்சி என்னும் இதனை அருளிச் செய்தார். வைகறையில் இருள்நீங்க ஒளி எழுவதுபோல ஆன்மாக்களுடைய திரோதானமலம் அகல ஞானவொளி வெளிப்படுகின்ற முறைமையை விளக்கியருளுகிறார்.]

**எண்சீர் ஆசிரிய விருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

366 போற்றியென் வாழ்முத லாகிய பொருளே
புலர்ந்தது பூங்கழற் கிணைதுணை மலர்கொண்
டேற்றிநின் திருமுகத் தெமக்கருள் மலரும்
எழினகை கொண்டுநின் திருவடி தொழுகோம்
சேற்றிதழ்க் கமலங்கண் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
ஏற்றுயர் கொடியுடை யாயெனை யுடையாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 1

---

1. வாழ் முதல் - வாழ்வுக்கு அடிப்படை. ஏற்றி - தூவி. எழில் - அழகு. ஏறு - இடபம். எனை உடையாய் - அநாதியாகவே என்னை ஆளாக உடையவனே. பள்ளி - படுக்கை.

367 அருணனிந் திரன்றிசை யணுகினன் இருள்போய்
அகன்றது வுதயநின் மலர்த்திரு முகத்தின்
கருணையின் சூரியன் எழவெழ நயனக்
கடிமலர் மலரமற் றண்ணலங் கண்ணாந்
திரணிரை யறுபத முரல்வன இவையோர்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
அருணிதி தரவரும் ஆனந்த மலையே
அலைகட லேபள்ளி யெழுந்தரு ளாயே. 2

368 கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
ஓவின தாரகை யொளியொளி யுதயத்
தொருப்படு கின்றது விருப்பொடு நமக்குத்
தேவநற் செறிகழற் றாளிணை காட்டாய்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
யாவரும் அறிவரி யாயெமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 3

---

2. அருணன் - சூரியன் சாரதி. இந்திரன் திசை - கீழ்த்திசை. கடிமலர் - மணமுள்ள மலர். அறுபதம் - வண்டு. இறைவன் அலை கடல்போல் அறியப்படாதவர் என்றதைவிளக்க அலைகடலே என்றார்.

3. குருகுகள் - பறவைகள். தாரகை - நக்ஷத்திரம். ஓவின - ஒழிந்தன; நீங்கின. யாவரும் அறிவரியாய் - சிவஞானம் மேவப் பெற்றவர்களல்லாத பிறரால் அறியமுடியாதவனே.

369 இன்னிசை வீணைய ரியாழினர் ஒருபால்
இருக்கொடு தோத்திரம் இயம்பினர் ஒருபால்
துன்னிய பிணைமலர்க் கையினர் ஒருபால்
தொழுகைய ரழுகையர் துவள்கையர் ஒருபால்
சென்னியி லஞ்சலி கூப்பினர் ஒருபால்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
என்னையும் ஆண்டுகொண் டின்னருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 4

370 பூதங்க டோறுநின் றாயெனி னல்லால்
போக்கிலன் வரவிலன் எனநினைப் புலவோர்
கீதங்கள் பாடுதல் ஆடுத லல்லால்
கேட்டறி யோமுனைக் கண்டறி வாரைச்
சீதங்கொள் வயற்றிருப் பெருந்துறை மன்னா
சிந்தனைக் கும்மரி யாயெங்கண் முன்வந்
தேதங்கள் அறுத்தெம்மை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 5

371 பப்பற வீட்டிருந் துணருநின் னடியார்
பந்தனை வந்தறுத் தாரவர் பலரும்
மைப்புறு கண்ணியர் மானுடத் தியல்பின்
வணங்குகின் றாரணங் கின்மண வாளா

---

4. இருக்கு - ருக்வேதமந்திரம். பிணைமலர் - பிணைக்கப்பட்ட மலராகிய மாலை. துவள்கை - சிவானந்தமேலீட்டால் துவளுதல். அஞ்சலி - கைகுவித்த வணக்கம்.

5. போக்கு வரவு - இறப்பும் பிறப்பும். புலவோர் - அறிஞர். ஏதம் - குற்றம்.

செப்புறு கமலங்கண் மலருந்தண் வயல்சூழ்
திருப்பெருந் துறையுறை சிவபெரு மானே
இப்பிறப் பறுத்தெமை யாண்டருள் புரியும்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 6

372 அதுபழச் சுவையென அமுதென அறிதற்
கரிதென வெளிதென அமரரும் அறியார்
இதுவவன் திருவுரு இவனவன் எனவே
எங்களை யாண்டுகொண் டிங்கெழுந் தருளும்
மதுவளர் பொழிற்றிரு வுத்தர கோச
மங்கையுள் ளாய்திருப் பெருந்துறை மன்னா
எதுவெமைப் பணிகொளு மாறது கேட்போம்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 7

373 முந்திய முதனடு விறுதியும் ஆனாய்
மூவரும் அறிகில ரியாவர்மற் றறிவார்
பந்தணை விரலியும் நீயுநின் னடியார்
பழங்குடி லொறுதொறுமெழுந் தருளிய பரனே
செந்தழல் புரைதிரு மேனியுங் காட்டித்
திருப்பெருந் துறையுறை கோயிலுங் காட்டி
அந்தண னாவதுங் காட்டிவந் தாண்டாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 8

---

6. பப்பு - பரப்பு என்பதன் இடைக்குறை. மைப்பு உறு கண்ணியர் - கருமையுற்ற கண்ணினையுடையார். அணங்கு - உமா தேவியார்.

7. அமரரும் உம்மை உயர்வு சிறப்பு. பணிகொள்ளும் ஆறு எது அது கேட்போம் என்று பிரித்துக் கூட்டுக.

8. பந்தணை விரலி - பந்துகள்வந்து சாருகின்ற விரலினை உடைய உமாதேவி. பழங்குடில் - பழங்குடிசையாகிய உடம்பு.

374 விண்ணகத் தேவரு நண்ணவு மாட்டா
விழுப்பொரு ளேயுன தொழுப்படி யோங்கள்
மண்ணகத் தேவந்து வாழச்செய் தானே
வண்டிருப் பெருந்துறை யாய்வழி யடியோம்
கண்ணகத் தேநின்று களிதரு தேனே
கடலமு தேகரும் பேவிரும் படியார்
எண்ணகத் தாயுல குக்குயி ரானாய்
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே. 9

375 புவனியிற் போய்ப்பிற வாமையி னாணும்
போக்குகின் றோமவ மேயிந்தப் பூமி
சிவனுய்யக் கொள்கின்ற வாறென்று நோக்கித்
திருப்பெருந் துறையுறை வாய்திரு மாலாம்
அவன்விருப் பெய்தவும் மலரவன் ஆசைப்
படவுநின் னலர்ந்தமெய்க் கருணையும் நீயும்
அவனியிற் புகுந்தெமை யாட்கொள்ள வல்லாய்
ஆரமு தேபள்ளி யெழுந்தரு ளாயே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. நண்ணவும் - அணுகவும். கண்ணகத்தேநின்று களிதருதல்- கண்ணுட்பாவையாய் மகிழ்ச்சிவிளைவித்தல். எண் - எண்ணம்.

10. புவனி - பூமி. நாள் நாம் நாணும் எனப்புணர்ந்தது. அவமே - வீணாக.

உ
சிவமயம்

# 21. கோயின்மூத்ததிருப்பதிகம்

[அநாதியாகிய சற்காரியம்]

*திருத்தில்லையில் அருளியது.*

[மணிவாசகப்பெருந்தகையார், தில்லையில் எழுந்தருளியிருக்கின்றகாலத்து ஆனந்த நடராஜப்பெருமான் தன்னை ஆட்கொண்ட பேரருட்டிறத்தை நினைந்து கோயில் மூத்த திருப்பதிகமும், கோயிற்பதிகமும் ஆகிய இரண்டினையும் அருளிச்செய்தார்.]

அறுசீர் ஆசிரியவிருத்தம்

*திருச்சிற்றம்பலம்.*

**376** உடையாள் உன்றன் நடுவிருக்கும்
உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவுள் இருவீரும்
இருப்ப தானால் அடியேனுன்
அடியார் நடுவுள் இருக்குமரு
ளைப்புரி யாய்பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து
முடியும் வண்ணம் முன்னின்றே. 1

---

1. உடையாள் உன்றன் நடு இருக்கும் - அம்மை சிவமாகிய உனக்குள் எழுந்தருளியிருக்கும் என்றது ஐந்தொழில் ஆற்றலின் விருந்தும் நீங்கிப் புறப்பொருளை நோக்காது, அறிவே வடிவாய்

377 முன்னின் றாண்டா யெனைமுன்ன
மியானும் அதுவே முயல்வுற்றுப்
பின்னின் றேவல் செய்கின்றேன்
பிற்பட் டொழிந்தேன் பெம்மானே
என்னின் றருளி வரநின்று
போந்தி டென்ன விடிலடியார்
உன்னின் றிவனார் என்னாரோ
பொன்னம் பலக்கூத் துகந்தானே. 2

---

இருக்கும் உண்மைநிலையில் சத்தி சிவத்தின்வசமாக இருப்பதை விளக்கியவாறு. உடையாள் நடுவுள் நீ இருத்தி - அம்மையின் நடுவில் நீ இருக்கின்றாய் என்றது புறத்தைநோக்கி, உலகெல்லாமாய் வேறாய் உடனாய் நிற்கும் தடத்தநிலையில் சத்தியின்வசமாய்ச் சிவன் நிற்பதை விளக்கியவாறு. அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால் என்றது அருள்வகைப்பட்டுநிற்கும் அடியேன் மனத்து இருவரும் எழுந்தருள்வது ஆனால் என்றவாறு. இத்திருப்பாடல் இத் திருவாசகநூலுக்கு இதயமந்திரமாகப் பாராட்டப்பெறுவது. இதில் ஆன்மா இரண்டுபக்கமும் சிவசத்திகள் பொருந்த சிவயசிவ என இருக்கும் இருதலைமாணிக்கம் விளக்கப்பெற்றுள்ளது. முடியா முதல் - ஈறு இல்லாத முதல்வன்.

2. முன் நின்று ஆண்டாய் - உருவாக எழுந்தருளி ஆட்கொண்டாய். அதுவே முயலுற்று - அதனையே திரும்பவும்பெற முயன்று. முன் நின்று ஆண்டாய் என்பதற்கு, சிகாரத்தை முதலாகக் கொண்டோதும் திருவைந்தெழுத்தை உபதேசித்தாண்டாய் என்றும், அதுவே முயல் உற்று ஏவல்செய்கின்றேன் என்றது அதனையே இடைவிடாது தியானித்து நமஸ்கரிக்கின்றேன் என்றும் உரைப்பாரும் உளர். இவர நின்று - மேற்படத் தான் அதனுள் அடங்கியிருந்து.

378 உகந்தா னேயன் புடையடிமைக்
குருகா வுள்ளத் துணர்விலியேன்
சகந்தான் அறிய முறையிட்டால்
தக்க வாறன் றென்னரோ
மகந்தான் செய்து வழிவந்தார்
வாழ வாழ்ந்தாய் அடியேற்குன்
முகந்தான் தாரா விடின்முடிவேன்
பொன்னம் பலத்தெம் முழுமுதலே. 3

379 முழுமுத லேயைம் புலனுக்கும்
மூவர்க் குமென் றனக்கும்
வழிமுத லேநின் பழவடியார்
திரள்வான் குழுமிக்
கெழுமுத லேயருள் தந்திருக்க
இரங்குங் கொல்லோவென்
றழுமது வேயன் றிமற்றென்
செய்கேன் பொன்னம் பலத்தரைசே. 4

380 அரைசே பொன்னம் பலத்தாடும்
அமுதே யென்றுன் அருணோக்கி
இரைதேர் கொக்கொத் திரவுபகல்
ஏசற் றிருந்தே வேசற்றேன்

---

3. சகம் - உலகம். தக்கவாறு - தக்கநெறி. மகம் - யாகம். முகந்தாராவிடின் - கருணைசெய்யாவிடின்.

4. முழுமுதல் - முதற்காரணனே. வழி முதல் - நிமித்த காரணன். கெழுமுதல் - பொருந்துகின்ற முதல்வனே. வான்குழுமி - பெரிதாகக்கூடி.

கரைசேர் அடியார் களிசிறப்பக்
காட்சி கொடுத்துன் அடியேன்பாற்
பிரைசேர் பாலின் நெய்போலப்
பேசா திருந்தால் ஏசாரோ. 5

381 ஏசா நிற்பர் என்னையுனக்
கடியா னென்று பிறரெல்லாம்
பேசா நிற்ப ரியான்றானும்
பேணா நிற்பேன் நின்னருளே
தேசா நேசர் சூழ்ந்திருக்குந்
திருவோ லக்கஞ் சேவிக்க
ஈசா பொன்னம் பலத்தாடும்
எந்தாய் இனித்தான் இரங்காயே. 6

382 இரங்கு நமக்கம் பலக்கூத்தன்
என்றென் றேமாந் திருப்பேனை
அருங்கற் பனைகற் பித்தாண்டாய்
ஆள்வா ரிலிமா டாவேனோ

---

5. ஏசற்று - வருந்தி. வேசற்றேன் - வாடினேன். கரை - முத்தி. பிரைசேர் பாலில் நெய் என்றது வெளிப்பட்டும் வெளிப்படா திருக்கும் நிலையை.

6. பேணாநிற்பேன் - விரும்புவேன். தேசா - ஒளியுடைய வனே. நேசர் - அன்பர்.

நெருங்கும் அடியார் களுநீயும்
நின்று நிலாவி விளையாடும்
மருங்கே சார்ந்து வரவெங்கள்
வாழ்வே வாவென் றருளாயே. 7

383 அருளா தொழிந்தால் அடியேனை
அஞ்சேல் என்பார் ஆரிங்குப்
பொருளா என்னைப் புகுந்தாண்ட
பொன்னே பொன்னம் பலக்கூத்தா
மருளார் மனத்தோ டுனைப்பிரிந்து
வருந்து வேனை வாவென்றுன்
தெருளார் கூட்டங் காட்டாயேல்
செத்தே போனாற் சிரியாரோ. 8

384 சிரிப்பார் களிப்பார் தேனிப்பார்
திரண்டு திரண்டுன் திருவார்த்தை
விரிப்பார் கேட்பார் மெச்சுவார்
வெவ்வே றிருந்துன் திருநாமம்

---

7. என்றென்று - பலகாலும் எண்ணி. அருங் கற்பனை - இல்லாத கற்பனை. ஆன்வார் இலி மாடு - உடையவன் அற்ற ஊர் மாடு. நிலாவி - விளங்கி.

8. மருள் - வாசனையால் விளைந்த மயக்கம். தெருள் ஆர் கூட்டம் - தெளிவுடைய அன்பர்கள் கூட்டம்.

தரிப்பார் பொன்னம் பலத்தாடுந்
தலைவா என்பார் அவர்முன்னே
நரிப்பாய் நாயேன் இருப்பேனோ
நம்பி யினித்தான் நல்காயே. 9

385 நல்கா தொழியான் நமக்கென்றுன்
நாமம் பிதற்றி நயனநீர்
மல்கா வாழ்த்தா வாய்குழறா
வணங்கா மனத்தான் நினைந்துருகிப்
பல்கால் உன்னைப் பாவித்துப்
பரவிப் பொன்னம் பலமென்றே
ஒல்கா நிற்கும் உயிர்க்கிரங்கி
அருளா யென்னை யுடையானே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. தேனிப்பார் - தியானிப்பார்கள். வெவ்வேறு இருந்து உன் திருநாமம் தரிப்பார் - திருவைந்தெழுத்தை ஓதுவார்கள். நரிப்பாய் - இகழ்தற்குரியவனாய்.

10. நல்காது - அருளைக்கொடாது. ஒல்கா - தளர்ந்து.

உ

சிவமயம்

# 22. கோயிற் றிருப்பதிகம்

## [அநுபோக இலக்கணம்]

*திருத்தில்லையில் அருளியது.**

**எழுசீர் ஆசிரியவிருத்தம்**

[திருச்சிற்றம்பலம்]

**386** மாறிநின் றென்னை மயக்கிடும் வஞ்சப்
புலனைந்தின் வழியடைத் தமுதே
ஊறிநின் றென்னுள் எழுபரஞ் சோதி
யுள்ளவா காணவந் தருளாய்
தேறலின் தெளிவே சிவபெரு மானே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஈறிலாப் பதங்க ளியாவையுங் கடந்த
இன்பமே யென்னுடை யன்பே. 1

---

* வரலாறு முற்பதிகத்தில் கூறப்பட்டுள்ளது.

1. மாறிநின்று - ஒன்றுபோனவழி ஒன்றுபோகாமல் மாறுபட்டு நின்று. ஐந்தின்வழி - புலன்கள் ஐந்தின் வழியாகிய பொறி. உள்ளவாகாண - சொரூபநிலையை யான் அறிய. தேறல் - தேன்.

387 அன்பினு லடியேன் ஆவியோ டாக்கை
ஆனந்த மாய்க்கசிந் துருக
என்பர மல்லா இன்னருள் தந்தாய்
யானிதற் கிலனோர்கைம் மாறு
முன்புமாய்ப் பின்பு முழுதுமாய்ப் பரந்த
முத்தனே முடிவிலா முதலே
தென்பெருந் துறையாய் சிவபெரு மானே
சீருடைச் சிவபுரத் தரைசே. 2

388 அரைசனே யன்பருக் கடியனே னுடைய
அப்பனே யாவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின் றுணர்வதோர் உணர்வே
யானுன்னை யுரைக்குமா றுணர்த்தே. 3

---

2. என்பரம் - என்பொறுப்பு. கைம்மாறு - பிரதியுபகாரம்.

3. புரை புரை கனிய - மயிர்க்கால்கள்தோறும் நெகிழ. திரை பொரா மன்னும் - அலைமோதாமல் நிலைபெற்ற. உரையுணர்வு - ஆகமப்பிரமாணங்களால் ஆகும் அறிவு; அது பாச அறிவாம். திருவருள் கூடின் உரைக்கலாம் என்பார் உரைக்குமாறு உணர்த்து என்றார்.

389 உணர்ந்தமா முனிவர் உம்பரோ டொழிந்தார்
உணர்வுக்குந் தெரிவரும் பொருளே
இணங்கிலி யெல்லா வுயிர்கட்கும் உயிரே
எனைப்பிறப் பறுக்குமெம் மருந்தே
திணிந்ததோர் இருளில் தெளிந்தது வெளியே
திருப்பெருந் துறையுறை சிவனே
குணங்கடாம் இல்லா இன்பமே யுன்னைக்
குறுகினேற் கினியென்ன குறையே. 4

390 குறைவிலா நிறைவே கோதிலா அமுதே
ஈறிலாக் கொழுஞ்சுடர்க் குன்றே
மறையுமாய் மறையின் பொருளுமாய் வந்தென்
மனத்திடை மன்னிய மன்னே
சிறைபெறு நீர்போற் சிந்தைவாய்ப் பாயுந்
திருப்பெருந் துறையுறை சிவனே
இறைவனே நீயென் னுடலிடங் கொண்டாய்
இனியுன்னை யென்னிரக் கேனே. 5

---

4. உம்பரோடு - தேவர்களோடு. இணங்கிலி - ஒப்பில்லாதவனே. திணிந்ததோர் இருள் - ஆணவமலம். குணங்கள் - சாத்துவிகம் இராசதம் தாமதம் என்பன.

5. குறைவிலாநிறைவே - என்றும் எங்கும் பரிபூரணமாயிருப்பவனே. கோது இலா அமுதே - நஞ்சொடுபிறத்தலும் உண்டார்க்கு உண்மைஞானம் விளங்காமையுமாகிய குற்றமற்ற அமுதமே. மறை - வேதம். மன்னிய - நிலைபெற்ற. மன் - அரசன். சிறை - கரை.

391 இரந்திரந் துருக என்மனத் துள்ளே
எழுகின்ற சோதியே யிமையோர்
சிரந்தனிற் பொலியுங் கமலச்சே வடியாய்
திருப்பெருந் துறையுறை சிவனே
நிரந்தவா காய நீர்நிலந் தீகால்
ஆயவை அல்லையா யாங்கே
கரந்ததோ ருருவே களித்தனன் உன்னைக்
கண்ணுறக் கண்டுகொண் டின்றே. 6

392 இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றுந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே. 7

---

6. நிரந்த - எங்கும்பரவிய. கரந்தது - மறைந்தது.

7. கடிந்து - நீக்கி. உள்ளத்து எழுகின்ற ஞாயிறு - ஆன்மாவின்கண் விளங்குகின்ற ஞானசூரியன். உள்ளம் - ஆன்மா. நினைப்புஅற நினைந்தேன் - நினைப்பும் மறப்பும் அற்ற அதீத நிலைமையில் இருந்தமையால் இங்ஙனங் கூறினர். மறப்பின் வழியது நினைப்பாகலின் மறதியின்றியே நினைத்தேன் என்றவாறு. சென்று சென்று அணுவாய் - எல்லாவற்றினும் கலந்து அணுத்தன்மையாய். தேய்ந்து தேய்ந்து ஒன்றும் - அணுவினும் அணுவாய் ஒருதன்மையாகும்.

393 பார்பத மண்ட மனைத்துமாய் முளைத்துப்
பரந்ததோர் படரொளிப் பரப்பே
நீருறு தீயே நினைவதேல் அரிய
நின்மலர் நின்னருள் வெள்ளச்
சீருறு சிந்தை யெழுந்ததோர் தேனே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாருற வெனக்கிங் காரயல் உள்ளார்
ஆனந்த மாக்குமென் சோதீ. 8

394 சோதியாய்த் தோன்றும் உருவமே யருவாம்
ஒருவனே சொல்லுதற் கரிய
ஆதியே நடுவே அந்தமே பந்தம்
அறுக்குமா னந்தமா கடலே
தீதிலா நன்மைத் திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்துநின் இணையடி தந்தே. 9

---

8. பார் - பூமி. பதம் - பிரமன் முதலியோர் பதவிகள். நீர் உறு தீயே-கடல்நீரிற்பொருந்திய வடவைத்தீ போன்றவனே. பரந்த கடல்நீரை மிஞ்சவிடாது அடக்கியிருக்கின்ற வடவைத் தீ போலப் பரந்த உலகில் உயிர்களை எல்லைகடவாதவாறு போற்றும் ஒளிவடிவானவனே. ஆனந்தமாக்கும் சோதீ - ஒளிக்குத் தெறல் இயற்கையாயிருக்க இவ்வொளி ஆனந்தத்தை விளைவிக்கின்றது என்பதாம்.

9. பந்தம் - மலக்கட்டு. தீது இலா நன்மை - என்றும் ஒருபடித்தாகத் தீதே இல்லாத நன்மை.

395 தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
யாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான்
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே யீசா உடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனோர்கைம் மாறே. 10

திருச்சிற்றம்பலம்.

---

10. 'தந்தது' என்றது அடியேனோடு தாமும் ஒத்த நிலையில் வந்து என்ற கருணைத்திறம் விளக்கியவாறு. உன்தன்னை - முற்றறிவும், முற்றுத்தொழிலும், இயல்பாகவே பாசநீக்கமும் பெற்ற தேவரீரை. கொண்டது என்றது - இறைவன் தான் ஒத்த நிலையில் இறங்கிவரினும், ஆன்மகுணம் போகாமையின். என் தன்னை - ஆன்மவியல்பு முழுதும்வாய்ந்த இழிந்த என்னை. உலகில் வாணிகஞ் செய்வார் உயர்ந்தபொருளைத் தந்து இழிந்ததைக் கொள்ளாராகவும், தாம் அங்ஙனம் செய்யாமையின் யார் சதுரர் என்றார். சங்கரா - சுகத்தைச செய்பவனே. சதுரர் - சமர்த்தர். அந்தம் - இறுதி.

உ

சிவமயம்

# 23. செத்திலாப்பத்து

## [சிவானந்தம் அளவறுக்கொணாமை]

*திருப்பெருந்துறையில் அருளியது*

**[சுவாமிகள், திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்குங்காலத்து இறைவன் பிரிந்ததை பெரிய வருத்தத்தை விளைவிக்க அதனால் செயலற்று இன்னும் செத்திலனே என்று இரங்கிக் கூறியருளுகின்றார்]**

**எண்சீர் ஆசிரிய விருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**396** பொய்யனேன் அகநெகப் புகுந்தமு தூறும்
புதுமலர்க்கழ லிணையடி பிரிந்தும்
கையனே னின்னுஞ் செத்திலேன் அந்தோ
விழித்திருந் துள்ளக் கருத்தினை யிழந்தேன்
ஐயனே அரசே அருட்பெருங் கடலே
யத்த னேயயன் மாற்கறி யொண்ணாச்
செய்யமே னியனே செய்வகை யறியேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 1

---

**1.** அகம் நெக - மனம் இளக. அமுது ஊறும் - நித்திய வாழ்வுக்கேற்ற சிவானந்த அமுதம் ஊறுகின்ற. கையன் - கீழோன்.

397 புற்று மாய்மர மாய்ப்புனல் காலே
உண்டியா யண்ட வாணரும் பிறரும்
வற்றி யாருநின் மலரடி காணா
மன்ன என்னையோர் வார்த்தையுட் படுத்துப்
பற்றி னாய் பதையேன் மனமிக வுருகேன்
பரிகி லேன்பரி யாவுடல் தன்னைச்
செற்றி லேனின்னுந் திரிதரு கின்றேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 2

398 புலைய னேனையும் பொருளென நினைந்துன்
அருள்பு ரிந்தனை புரிதலுங் களித்துத்
தலையி னாடந் தேன்விடைப் பாகா
சங்க ராவெண்ணில் வானவர்க் கெல்லாம்
நிலைய னேயலை நீர்விட முண்ட
நித்த னேயடை யார்புரம் எரித்த
சிலைய னேயெனைச் செத்திடப் பணியாய்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 3

---

2. புனல் காலே உண்டியாய் - தண்ணீரையும் காற்றையும் உணவாகக்கொண்டு. ஓர் வார்த்தை - பிரணவபஞ்சாக்கரம். பரிகிலேன் - வருந்தேன். செத்திலேன் எதுகைநோக்கிச் செற்றிலேன் என ஆயிற்று.

3. புலையனேனையும் - இழிந்த அடியேனையும். தலையினால் நடந்தேன் - செருக்கித் தலைகீழாக நடந்தேன். நிலையனே - நிலைத்தவனே. சிலையனே - வில்லையுடையவனே. செத்திடப்பணியாய் - சுதந்தர ஈனமான ஆன்மாக்களுக்குச் சாவதற்கும் உரிமையின்மையால் அதற்கு அருளவேண்டும் என்கின்றார்.

399 அன்ப ராகிமற் றருந்தவ முயல்வார்
அயனு மாலுமற் றழலுறு மெழுகாம்
என்ப ராய்நினை வாரெனைப் பலர்
நிற்க இங்கெனை யெற்றினுக் காண்டாய்
வன்ப ராய்முரு டொக்குமென் சிந்தை
மரக்கண் என்செவி யிரும்பினும் வலிது
தென்ப ராய்த்துறை யாய்சிவ லோகா
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 4

400 ஆட்டுத் தேவர்தம் விதியொழித் தன்பால்
ஐய னேயென்றுன் னருள்வழி யிருப்பேன்
நாட்டுத் தேவரு நாடரும் பொருளே
நாத னேயுனைப் பிரிவுறு அருளைக்
காட்டித் தேவநின் கழலிணை காட்டிக்
காய மாயத்தைக் கழித்தருள் செய்யாய்
சேட்டைத் தேவர்தந் தேவர்பி ரானே
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 5

---

4. அயனும் மாலும் அன்பாராகித் தவம் முயல்வார் எனைப் பலர் தழல் உறும் மெழுகாம் என்பராய் நினைவார் இவர்கள் நிற்க என்னை எற்றுக்கு ஆண்டாய் என இயைத்துப் பொருள்காண்க. பராய் - ஒருவகை மரம். முருடு - கட்டை. சிலமரங்களுக்குக் கண் இருந்தும் பிறருக்குத் தீமைவிளைத்தற்கே பயன்படுதலைப்போல என்கண்களும் அங்ஙனமாயின என்பார் மரக்கண் என்றூர். செவி இரும்பினும் வலிது என்பதும் பயன்படாமைநோக்கியே.

5. ஆட்டுத்தேவர் - தொழில்படுத்தும் காரணேசுவர்கள். நாட்டுத்தேவர் - பூதேவராகிய அந்தணர்கள். காயம் மாயம் - உட

401 அறுக்கி லேனுடல் துணிபடத் தீப்புக்
கார்கி லேன்றிரு வருள்வகை யறியேன்
பொறுக்கி லேனுடல் போக்கிடங் காணேன்
போற்றி போற்றியென் போர்விடைப் பாகா
இறக்கி லேனுனைப் பிரிந்தினி திருக்க
என்செய் கேனிது செய்கவென் றருளாய்
சிறைக்க ணேபுனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 6

402 மாய னேமறி கடல்விட முண்ட
வான வாமணி கண்டத்தெம் அமுதே
நாயி னேனுனை நினையவு மாட்டேன்
நமச்சி வாயவென் றுன்னடி பணியாப்
பேய னாகிலும் பெருநெறி காட்டாய்
பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ
சேய னாகிநின் றலறுவ தழகோ
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே, 7

---

லின் வஞ்சனை. சேட்டைத் தேவர் - சிறுகுறும்புகள் செய்கின்ற தேவர்கள்.

6. துணிபட - துண்டுபட.

7. மறிகடல் - அலைகள் மடங்கிவிழுகின்ற கடல். மணி கண்டம் - நீலகண்டம். பெருநெறி - வீட்டுலகம். பிஞ்ஞகன் - மயிற் பீலியை அணிந்தவன். சேயன் - தூரத்திலுள்ளவன்.

403 போது சேரயன் பொருகடற் கிடந்தோன்
புரந்த ராதிகள் நிற்கமற் றென்னைக்
கோது மாட்டிநின் குரைகழல் காட்டிக்
குறிக்கொள் கென்றுநின் தொண்டரிற் கூட்டாய்
யாது செய்வதென் றிருந்தனன் மருந்தே
அடிய னேனிடர்ப் படுவதும் இனிதோ
சீத வார்புனல் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 8

404 ஞால மிந்திரன் நான்முகன் வானவர்
நிற்க மற்றெனை நயந்தினி தாண்டாய்
கால னுருயிர் கொண்டபூங் கழலாய்
கங்கை யாயங்கி தங்கிய கையாய்
மாலு மோலமிட் டலறுமம் மலர்க்கே
மரக்க ணேனையும் வந்திடப் பணியாய்
சேலு நீலமும் நிலவிய வயல்சூழ்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே. 9

---

8. போது-தாமரைப்பூ. கடல்கிடந்தோன்-திருமால். கோது மாட்டி - குற்றங்களை நீக்கி.

9. நான்முகன் ஆதிய தேவர்களிருக்கவும் என்னை ஆண்டவனே. அங்கி - அக்கினி. மால் - திருமால்.

105 அளித்து வந்தெனக் காவவென் றருளி
அச்சந் தீர்த்தநின் அருட்பெருங் கடலில்
திளைத்தும் தேக்கியும் பருகியும் உருகேன்
திருப்பெ ருந்துறை மேவிய சிவனே
வளைக்கை யானொடு மலரவன் அறியா
வான வாமலை மாதொரு பாகா
களிப்பெ லாமிகக் கலங்கிடு கின்றேன்
கயிலை மாமலை மேவிய கடலே. 10

திருச்சிற்றம்பலம்.

---

10. அளித்து - கருணைசெய்து. திளைத்தும் - மூழ்கியும். தேக்கியும் - நிறைத்தும். களிப்பெலாம் மிக - மதத்தான் வந்த களிப்பு மிக. வளைக்கையான் - சங்கைத் திருக்கரத்திலுடைய பெருமாள். ஆவ - இரக்கக்குறிப்பிடைச்சொல்.

உ
சிவமயம்.

# 24. அடைக்கலப்பத்து

## [பக்குவ நிண்ணயம்]

*திருப்பெருந்துறையில் அருளியது*

**[இதுவும் முன்னதைப்போலத் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்குங்காலத்து ஏனைய அடிகளாரெல்லாரும் இறைவன் திருவடிக்கமலத்தை அடைந்து பேரின்பமிகத் தான்மட்டும் தனித்தமையைக்கண்டு வருந்தி அடைக்கலம் புகுவதாக அருளிச்செய்யப்பெற்றது.]**

கலவைப் பாட்டு

*திருச்சிற்றம்பலம்*

**406** செழுக்க மலத்திர ளனநின்
சேவடி சேர்ந்தமைந்த
பழுத்த மனத்தடி யருடன்
போயினர்யான் பாவியேன்
புழுக்க ணுடைப்புன் குரம்பைப்பொல்
லாக்கல்வி ஞானமிலா
அழுக்கு மனத்தடி யேன்உடை
யாயுன் அடைக்கலமே. 1

---

1. செழுக்கமலத்திரள் - வளப்பமான தாமரையின் கூட்டம். அமைந்த - அமைதிபெற்ற. பழுத்த - பரிபக்குவமான. புழுக்கள் உடை புன் குரம்பை - புழுநெளிகின்ற இழிந்த உடலாகிய கூடு. அழுக்கு - வாசனாமலம்.

407 வெறுப்பன வேசெய்யு மென்சிறு
மையைநின் பெருமையினல்
பொறுப்பவ னேயராப் பூண்பவ
னேபொங்கு கங்கைசடைச்
செறுப்பவ னேநின் றிருவரு
ளாலென் பிறவியைவேர்
அறுப்பவ னேயுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 2

408 பெரும்பெரு மானென் பிறவியை
வேரறுத்துப் பெரும்பிச்சுத்
தரும்பெரு மான்சது ரப்பெரு
மானென் மனத்தினுள்ளே
வரும்பெரு மான்மல ரோன் நெடு
மாலறி யாமனின்ற
அரும்பெரு மானுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 3

---

2. வெறுப்பன - வெறுக்கத்தக்கனவாகிய பாவங்கள். அரா - பாம்பு. செறுப்பவன் - அடக்கியவன்.

3. பெரும்பிச்சுத்தரும்பெருமான் - திருவடியன்றி வேறென்றும் தோன்றாதவாறு பித்தாக்கும் இறைவன். சதுரன் - சாதுரியமுடையவன்.

409 பொழிகின்ற துன்பப் புயல்வெள்
ளத்தினின் கழற்புணைகொண்
டிழிகின்ற அன்பர்க ளேறினர்
வான்யா னிடர்க்கடல்வாய்ச்
சுழிசென்று மாதர்த் திரைபொரக்
காமச் சுறவெறிய
அழிகின்ற னன்உடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 4

410 சுருள்புரி கூழையர் சூழலிற்
பட்டுன் திறமறந்திங்
கிருள்புரி யாக்கையி லேகிடந்
தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரி மானன்ன நோக்கிதன்
பங்கவிண் ணோர்பெருமான்
அருள்புரி யாயுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 5

---

4. துன்பப்புயல் வெள்ளம் - நல்வினையும் தீவினையுமாகிய புயலின்வெள்ளம். கழல்புணை - திருவடியாகிற தெப்பம். இழிகின்ற - இறங்கிய. வான் - வீட்டுலகம். இடர்க்கடல் - துன்பமாகிற கடல். மாதர்திரை - பெண்களாகிற அலை. காமச் சுறவு - காமமாகிற சுறுமீன், அழிகின்றனன் என்றது உலகநிலையைத் தன்மேலேற்றிக் கூறியவாறு.

5. கூழையர் - சிறியமயிரினையுடையார்; என்றது கூட்டி முடிக்கமுடியாத மங்கைப்பருவத்தை அணுகும் மகளிர் என்பதாம்.

411 மாழைமைப் பாவிய கண்ணியர்
வன்மத் திடவுடைந்து
தாழியைப் பாவு தயிர்போல்
தளர்ந்தேன் தடமலர்த்தாள்
வாழியெப் போதுவந் தெந்நாள்
வணங்குவன் வல்வினையேன்
ஆழியப் பாவுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 6

412 மின்கணி னார்நுடங்கு மிடையார்
வெகுளிவலையி லகப்பட்டுப்
புன்கண னய்ப்புரள் வேனைப்
புரளாமற் புகுந்தருளி
என்கணி லேயமு தூறித் தித்
தித்தென் பிழைக்கிரங்கும்
அங்கண னேயுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 7

---

இருள் - அறியாமை; அதாவது நிலையாதனவற்றை நிலையின என்று உணரும் புல்லறிவாண்மை. வெருள் - அச்சம்.

6. மாழை - மாவடு. மைப்பாவிய - மைபூசப்பெற்ற; விஷந் தீட்டிய எனினுமாம். வல் மத்து - உறுதியாகிய மத்து. தாழி - தயிர்ப்பானை. ஆழி - கடல்.

7. நுடங்கும் - அசைகின்ற. வெகுளிவலை - கோபமாகியவலை. புன்கணன் - துன்பத்தையுடையவன். என்கணில் - என்னிடத்தில். அங்கணன் - அழகிய கண்களையுடையவன்,

413 மாவடு வகிரன்ன கண்ணிபங்
காநின் மலரடிக்கே
கூவிடு வாய்கும்பிக் கேயிடு
வாய்நின் குறிப்பறியேன்
பாவிடை யாடு குழல்போற்
கரந்து பரந்ததுள்ளம்
ஆகெடு வேனுடை யாய் அடி
யேனுன் அடைக்கலமே. 8

414 பிறிவறி யாஅன்பர் நின்னருட்
பெய்கழற் றாளிணைக்கீழ்
மறிவறி யாச்செல்வம் வந்துபெற்
றாருன்னை வந்திப்பதோர்
நெறியறி யேனின்னை யேயறி
யேனின்னை யேயறியும்
அறிவறி யேனுடை யாய் அடி
யேனுன் அடைக்கலமே. 9

---

8. கும்பி - ஒருவகை நரகம். பா இடை யாடும் குழல்போல் - நூல்பாவின் குறுக்கு இழை போகும் குழலைப்போல. கரந்து - மறைந்து.

9. மறிவு அறியாச் செல்வம் - மீளாச் செல்வம். வந்திப்பது - வணங்குவது.

415 வழங்குகின் றாய்க்குன் னருளா
ரமுதத்தை வாரிக்கொண்டு
விழுங்குகின் றேன்விக்கி னேன்வினை
யேனென் விதியின்மையால்
தழங்கருந் தேனன்ன தண்ணீர்
பருகத்தந் துய்யக்கொள்ளாய்
அழுங்குகின் றேனுடை யாய்அடி
யேனுன் அடைக்கலமே. 10

திருச்சிற்றம்பலம்.

10. அருளாரமுதம் - அருளாகிய நிறைந்த அமுதம். விதியின்மையால் விக்கினேன் - உண்ணும் விதியின்மையால் தொண்டை சிறிதாக விக்கினேன். தழங்கு - ஒலிக்கின்ற. அழுங்குகின்றேன் - வருந்துகின்றேன். விக்கிக்கொண்டால் தண்ணீர்குடிக்க விக்கல் நீங்கும்; அமுதம் விக்கிக்கொண்டமையின் வெறுந் தண்ணீர் சுவையைக்கெடுக்கும்; அதுவும் கெடுதலாகாது என்பார் தேன் அன்ன தண்ணீர் குடிக்கக் கொடு என்கின்றார்.

உ

சிவமயம்

# 25 ஆசைப்பத்து

## [ ஆத்மவிலக்கணம் ]

திருப்பெருந்துறையில் அருளியது.

**[இதுவும் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்குங் காலத்தில் இறைவன் திருவடியை அடைய ஆசைப்படுவாராக அடிகளாரால் அருளிச் செய்யப்பெற்றது.]**

**அறுசீர் ஆசிரியவிருத்தம்.**

திருச்சிற்றம்பலம்

**416** கருடக் கொடியோன் காண மாட்டாக்
கழற்சே வடியென் னும்
பொருளைத் தந்திங் கென்னை யாண்ட
பொல்லா மணியேயோ
இருளைத் துரந்திட் டிங்கே வாவென்
றங்கே கூவும்
அருளைப் பெறுவான் ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 1

---

1. கருடக்கொடியோன் - திருமால். பொருள் - திருவருளாகிற பொருள். துரந்திட்டு - ஓட்டிவிட்டு. அங்கே - வீட்டுலகத்தில், பொல்லாமணி - சாணைபிடிக்கப்படாத முழுமணி.

417 மொய்ப்பா னரம்பு கயிறாக மூளை
யென்பு தோல்போர்த்த
குப்பா யம்புக் கிருக்க கில்லேன்
கூவிக்கொள்ளாய் கோவேயோ
எப்பா லவர்க்கு மப்பா லாமென்
னாரமு தேயோ
அப்பா காண வாசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 2

418 சீவார்ந் தீமொய்த் தழுக்கொடு திரியுஞ்
சிறுகுடில் இதுசிதையக்
கூவாய் கோவே கூத்தா காத்தாட்
கொள்ளுங் குருமணியே
தேவா தேவர்க் கரியானே சிவனே
சிறிதென் முகநோக்கி
ஆவா வென்ன ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 3

419 மிடைந்தெலும் பூத்தை மிக்கழுக் கூறல்
வீறிலி நடைக்கூடம்
தொடர்ந்தெனை நலியத் துயருறு கின்றேன்
சோத்தமெம் பெருமானே

---

2. மொய்ப்பு - நெருக்கம். குப்பாயம் - சட்டை. கண்டாய் முன்னிலையசை.

3. உடலின் இழிதகைமை பேசப்படுகிறது. அழுக்கு - மலம். காத்து - வினைபோம் என நினையாமலும் மலம் மறையாமலும் அடியேனைக்காத்து. வார்ந்து - ஒழுகி.

உடைந்துநைந் துருகி யுன்னொளி நோக்கி
உன்றிரு மலர்ப்பாதம்
அடைந்துநின் றிடுவான் ஆசைப்பட்டேன்
கண்டாய் அம்மானே. 4

420 அளிபுண் ணகத்துப் புறந்தோல் மூடி
அடியே னுடையாக்கை
புளியம் பழமொத் திருந்தேன் இருந்தும்
விடையாய் பொடியாட
எளிவந் தென்னை யாண்டு கொண்ட
என்னா ரமுதேயோ
அளியே னென்ன ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 5

421 எய்த்தேன் நாயேன் இனியிங் கிருக்க
கில்லேன் இவ்வாழ்க்கை
வைத்தாய் வாங்காய் வானோ ரறியா
மலர்ச்சே வடியானே

---

4. இதுவும் உடலின் இழிவைப் பேசுகிறது. மிடைந்து - நெருங்கி. அழுக்கு ஊறல் - அழுக்கு ஊறுதலையுடைய. வீறு இலி - சிறப்பற்ற. நடைக்கூடம் - நடக்கின்ற வீடு (உடல்). நலிய - வருத்த. சோத்தம் - வணக்கம்.

5. அளிபுண் - அளிந்தபுண். புளியம்பழம் மேல் ஓட்டோடு பொருந்தாது நிற்குமாறுபோல இருந்தேன். பொடி - விபூதி. அளியேன் இரங்கத்தக்கவன்.

முத்தா வுன்றன் முகவொளி நோக்கி
முறுவல் நகைகாண
அத்தா சால ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 6

422 பாரோர் விண்ணோர் பரவி யேத்தும்
பரனே பரஞ்சோதி
வாராய் வாரா வுலகந் தந்து
வந்தாட் கொள்வானே
பேரா யிரமும் பரவித் திரிந்தெம்
பெருமா னெனவேத்த
ஆரா வமுதே ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 7

423 கையாற் றொழுதுன் கழற்சே வடிகள்
கழுமத் தழுவிக்கொண்
டெய்யா தென்றன் தலைமேல் வைத்தெம்
பெருமான் பெருமானென்
றையா என்றன் வாயா லரற்றி
அழல்சேர் மெழுகொப்ப
ஐயாற் றரசே ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 8

---

6. எய்த்தேன் - இளைத்தேன். இவ்வாழ்க்கை வைத்தாய் - இந்தவாழ்வை வினைவயத்தால் எனக்குத்தந்தவனும் நீயே. வாங்காய் - அவற்றை ஒடுக்குவாய்.

7. பரவி - வணங்கி. வாரா உலகம் - வீட்டுலகம். ஆரா - தெவிட்டாத.

8. கழும - நிறைய. எய்யாது - இடைவிடாமல்.

424 செடியா ராக்கைத் திறமற வீசிச்
சிவபுர நகர்புக்குக்
கடியார் சோதி கண்டு கொண்டென்
கண்ணிணை களிகூரப்
படிதா னில்லாப் பரம்பர னேயுன்
பழவடியார் கூட்டம்
அடியேன் காண ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 9

425 வெஞ்சே லனைய கண்ணார் தம் வெகுளி
வலையி லகப்பட்டு
நைஞ்சேன் நாயேன் ஞானச் சுடரே
நானோர் துணைகாணேன்
பஞ்சே ரடியாள் பாகத் தொருவா
பவளத் திருவாயால்
அஞ்சே லென்ன ஆசைப் பட்டேன்
கண்டாய் அம்மானே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. செடி - முடைநாற்றம். கடி - விளக்கம். படி - ஒப்பு.

10. வெம்சேல் - விரும்பத்தக்க சேல்மீன். நைஞ்சேன் நைந்தேன்; எதுகைநோக்கிப் போலியாயிற்று. பஞ்சு ஏர் அடியாள் - செம்பஞ்சு ஊட்டிய அடியாளாகிய உமாதேவியார்.

உ

சிவமயம்

# 26. அதிசயப்பத்து

## [முத்தியிலக்கணம்]

திருப்பெருந்துறையில் அருளியது

[இதுவும் அடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளி யிருக்குங்காலத்தே இறைவன் தம்மை ஆட்கொண்டு அடியார்களோடும் கூட்டிய அதிசயத்தினாலே பாடப்பெற்றது]

அறுசீர் ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

426 வைப்புமா டென்று மாணிக்கத் தொளியென்று
மனத்திடை யுருகாதே
செப்பு நேர்முலை மடவர லியர்தங்கள்
திறத்திடை நைவேனை
ஒப்பி லாதன வுவமனி லிறந்தன
ஒண்மலர்த் திருப்பாதத்
தப்ப னண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 1

---

1. வைப்பு மாடு - சேர்த்துவைத்த செல்வம். இறைவனைச் சேமநிதியென்றும் மாணிக்கச் செவ்வொளியென்றும் மனத்தில் நினைந்து உருகாமல். செப்பு - சிமிழ். ஒப்பிலாதன உவமனில்

427 நீதி யாவன யாவையு நினைக்கிலேன்
நினைப்பவ ரொடுங்கூடேன்
ஏத மேபிறந் திறந்துழல் வேன்றனை
யென்னடி யானென்று
பாதி மாதொடுங் கூடிய பரம்பரன்
நிரந்தர மாய்நின்ற
ஆதி யாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 2

428 முன்னை யென்னுடை வல்வினை போயிட
முக்கண துடையெந்தை
தன்னை யாவரும் அறிவதற் கரியவன்
எளியவன் அடியார்க்குப்
பொன்னை வென்றதோர் புரிசடை முடிதனில்
இளமதி யதுவைத்த
அன்னை யாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 3

---

இறந்தன - தனக்குப் பிறிதொன்றும் ஒப்பில்லாதனவும் தான் பிறிதொன்றற்கு உவமிக்கப்படுந் தன்மையைக் கடந்தனவும் ஆகிய.

2. ஏதம் - துன்பம். மாது - உமாதேவியார். நிரந்தரம் - இடையீடின்றி நித்தியமாய்.

3. என்னுடைய முன்னை வல்வினை - அடியேனுடைய பழைய வினைகள்.

429 பித்த னென்றெனை யுலகவர் பகர்வதோர்
காரண மிதுகேளீர்
ஒத்துச் சென்றுதன் திருவருட் கூடிடும்
உபாயம தறியாமே
செத்துப் போயரு நரகிடை வீழ்வதற்
கொருப்படு கின்றேனை
அத்த னாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 4

430 பரவு வாரவர் பாடுசென் றணைகிலேன்
பன்மலர் பறித்தேத்தேன்
குரவு வார்குழ லார்திறத் தேநின்று
குடிகெடு கின்றேனை
இரவு நின்றெரி யாடிய எம்மிறை
யெரிசடை மிளிர்கின்ற
அரவ னாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 5

431 எண்ணி லேன்திரு நாமவஞ் செழுத்துமென்
ஏழைமை யதனாலே
நண்ணி லேன்கலை ஞானிக டம்மொடு
நல்வினை நயவாதே

---

4. ஒத்துச்சென்று - பழைய அடியார்களோடு கூடிச்சென்று. ஒருப்படுகின்றேனை - சம்மதிக்கின்ற என்னை.

5. பரவுவார் - துதிப்பவர்கள். பாடு - பக்கம். குரவு - குராமலர். இரவு நின்று எரியாடிய எம் இறை - சர்வசங்கார காலத்திலே தான் இருந்து ஆடிய எமதுதலைவன். அரவன் - பாம்பையுடையவன்.

மண்ணி லேபிறந் திறந்துமண் ணாவதற்
கொருப்படு கின்றேனை
அண்ண லாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 6

432 பொத்தை யூன்சுவர் புழுப்பொதிந் துளுத்தசும்
பொழுகிய பொய்க்கூரை
இத்தை மெய்யெனக் கருதிநின் றிடர்க்கடற்
சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணி மாணிக்க வயிரத்த
பவளத்தின் முழுச்சோதி
அத்த னாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 7

433 நீக்கி முன்னெனைத் தன்னொடு நிலாவகை
குரம்பையிற் புகப்பெய்து
நோக்கி நுண்ணிய நொடியன சொற்செய்து
நுகமின்றி விளாக்கைத்துத்
தூக்கி முன்செய்த பொய்யறத் துகளறுத்
தெழுதரு சுடர்ச்சோதி
ஆக்கி யாண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 8

---

6. ஏழைமை - மடமை. நண்ணிலேன் - அணுகேன்.

7. பொத்தை - பொத்தல். இத்தை - இதனை.

8. நிலாவகை - நில்லாதவகை. நுண்ணிய நொடியனசொல் - மிக நுண்ணியனவும் கைநொடியில் அமைந்தனவுமாகிய சொல்; என்றது சின்முத்திரையால் உணர்த்திய உபதேசத்தை. நுகம் இன்றி விளாக்கைத்து - நுகத்தடியில்லாமல் உழுது. உழுதலை விளாவடித்தல்

434 உற்ற வாக்கையின் உறுபொருள் நறுமலர்
எழுதரு நாற்றம்போல்
பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்
அப்பொருள் பாராதே
பெற்ற வாபெற்ற பயனது நுகர்ந்திடும்
பித்தர்சொற் றெளியாமே
அத்த னண்டுதன் அடியரிற் கூட்டிய
அதிசயங் கண்டாமே. 9

435 இருடி ணிந்தெழுந் திட்டதோர் வல்வினைச்
சிறுகுடில் இதுவித்தைப்
பொருளெ னக்களித் தருநர கத்திடை
விழப்புகு கின்றேனைத்
தெருளு மும்மதில் நொடிவரை யிடிதரச்
சினப்பதத் தொடுசெந்தீ
அருளு மெய்ந்நெறி பொய்ந்நெறி நீக்கிய
அதிசயங் கண்டாமே. 10

திருச்சிற்றம்பலம்.

---

என்றது உழவர் வழக்கு. பொய் - பயனில்செய்கைகள். துகள் - குற்றம்.

9. உற்ற ஆக்கையின் உறுபொருள் - பெற்ற உடலாற்பெறும் சிறந்தபொருள். நறுமலர் எழுதரு நாற்றம்போல் - பூவினில் கந்தம் பொருந்தியவாறுபோல். பற்றல் ஆவதோர் நிலையிலா - கருவிகரணங்களால் சென்று பற்றுந்தன்மையில்லாத.

10. இருள் - அறியாமைக்கு ஏதுவாகிய ஆணவம். உடல் வினைப்போகத்தை நுகர்தற்குக் கருவியாகலின் அதனை வல்வினைச் சிறுகுடில் என்றார். தெருளும் - விளங்கும். நொடிவரை - நொடிப்பொழுது. சினப்பதத்தொடு - கோபக்குறிப்போடு.

உ

சிவமயம்

# 27. புணர்ச்சிப்பத்து

## [அத்துவிதவிலக்கணம்]

திருப்பெருந்துறையில் அருளியது

**[திருவாதவூரடிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்குங்காலத்து இறைவனை என்றும் பிரியாமல் சேர்ந்து போற்றியும், தழுவியும், விரும்பியும், மாலைபுனைந்தும், மெய்புளகங்கொள்ள அணைந்தும் நிற்பது என்றைக்கு என்று இரண்டறக்கலக்கும் நிலையை எண்ணி இதனை ஆக்கியருளினர்.]**

### ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**436** சுடர்பொற் குன்றைத் தோளா
முத்தை வாளா தொழும்புகந்து
கடைபட் டேனை யாண்டுகொண்ட
கருணா லயனைக் கருமால்பிரமன்
தடைபட் டின்னுஞ் சாரமாட்டாத்
தன்னைத் தந்த வென்னாரமுதைப்
புடைபட் டிருப்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. **1**

---

1. தோளா முத்து - துளைக்கப்படாத முத்து. வாளா - சும்மா. தடைபட்டு - மலங்களால் தடுக்கப்பட்டு. புடைபட்டு - பக்கத்திற்பொருந்தி.

437 ஆற்ற கில்லேன் அடியேன் அரசே
அவனி தலத்தைம் புலனாய
சேற்றி லழுந்தாச் சிந்தை செய்து
சிவனெம் பெருமா னென்றேத்தி
ஊற்று மணற்போ னெக்குநெக் குள்ளே
உருகி யோல மிட்டுப்
போற்றி நிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 2

438 நீண்ட மாலும் அயனும் வெருவ
நீண்ட நெருப்பை விருப்பிலேனை
ஆண்டு கொண்ட என்னா ரமுதை
அள்ளூ றுள்ளத் தடியார்முன்
வேண்டுந் தனையும் வாய்விட் டலறி
விரையார் மலர்தூவிப்
பூண்டு கிடப்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 3

---

2. ஆற்றகில்லேன் - பொறுக்கமாட்டேன். ஐம்புலனும் தம்மில் அகப்பட்டாரை விடாது அழுத்துதலின் சேறு என்று உருவகிக்கப்பட்டது.

3. நீண்ட நெருப்பு - அண்ணாமலையாகக்கண்ட நெருப்பு. அள் ஊறும் - மேன்மேலும் ஊறுகின்ற. பூண்டு - அணியாக மேற்கொண்டு.

439 அல்லிக் கமலத் தயனு மாலும்
அல்லா தவரும் அமரர்கோனும்
சொல்லிப் பரவு நாமத் தானைச்
சொல்லும் பொருளும் இறந்தசுடரை
நெல்லிக் கனியைத் தேனைப் பாலை
நிறையின் அமுதை அமுதின் சுவையைப்
புல்லிப் புணர்வ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 4

440 திகழத் திகழும் அடியும் முடியும்
காண்பான் கீழ்மேல் அயனும்மாலும்
அகழப் பறந்துங் காண மாட்டா
அம்மான் இம்மா நிலமுழுதும்
நிகழப் பணிகொண் டென்னை யாட்கொண்
டாவா வென்ற நீர்மையெல்லாம்
புகழப் பெறுவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 5

441 பரிந்து வந்து பரமானந்தம்
பண்டே அடியேற் கருள்செய்யப்
பிரிந்து போந்து பெருமா நிலத்தில்
அருமா லுற்றே னென்றென்று

---

4. அல்லி - அக இதழ். உண்டார்க்கு நெடுநாள் சீவித்திருக்குந் தன்மையைத் தருதலின் நெல்லிக்கனியாக உருவகித்தார். புல்லி - தழுவி.

5. பணிகொண்டு - அடிமைகொண்டு. நிகழ - பரவ.

சொரிந்த கண்ணீர் சொரிய வுண்ணீர்
உரோமம் சிலிர்ப்ப வுகந்தன்பாய்ப்
புரிந்து நிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 6

442 நினையப் பிறருக் கரிய நெருப்பை
நீரைக் காலை நிலனைவிசும்பைத்
தனையொப் பாரை யில்லாத் தனியை
நோக்கித் தழைத்துத் தழுத்தகண்டம்
கனையக் கண்ணீ ரருவி பாயக்
கையுங் கூப்பிக் கடிமலராற்
புனையப் பெறுவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 7

443 நெக்குநெக்குள் ளுருகி யுருகி
நின்றுமிருந்துங் கிடந்து மெழுந்தும்
நக்குமழுதுந் தொழுதும் வாழ்த்தி
நானாவிதத்தாற் கூத்துநவிற்றிச்
செக்கர் போலுந் திருமேனி
திகழநோக்கிச் சிலிர்சி லிர்த்துப்
புக்குநிற்ப தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 8

---

6. பரிந்து - இரங்கி. அருமால் - வேறொன்றாலும் நீக்குதற் கரிய மயக்கம். புரிந்து - விரும்பி.

7. பிறருக்கு நினைய அரிய நெருப்பு எனக் கூட்டுக. தனி - ஒப்பற்றபொருள். தழைத்து - உடல்பூரித்து. தழுத்த கண்டம் கனைய - தழுதழுத்தகுரால் கனைக்க.

8. நக்கும் - சிரிக்கும். நானாவிதம் - பலவகை. நவிற்றி - செய்து. செக்கர் - செவ்வானம்.

444 தாதாய் மூவே ழுலகுக்குந்
தாயே நாயேன் றனையாண்ட
பேதாய் பிறவிப் பிணிக்கோர் மருந்தே
பெருந்தேன் பில்க எப்போதும்
ஏதா மணியே யென்றென் றேத்தி
இரவும் பகலு மெழிலார்பாதப்
போதாய்ந் தணைவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 9

445 காப்பாய் படைப்பாய் கரப்பாய் முழுதுங்
கண்ணார் விசும்பின் விண்ணோர்க்கெல்லாம்
மூப்பாய் மூவா முதலாய் நின்ற
முதல்வா முன்னே யெனையாண்ட
பார்ப்பா னேயெம் பரமா வென்று
பாடிப் பாடிப் பணிந்துபாதப்
பூப்போ தணைவ தென்றுகொல் லோவென்
பொல்லா மணியைப் புணர்ந்தே. 10

திருச்சிற்றம்பலம்

---

9. தாதாய் - தந்தையே. பேதாய் - அறிவிலியே. இறைவனைப் பேதாய் என்றது, தகுதி அற்ற தன்னை, ஆட்கொண்டதோடு மட்டுமன்றிப் பின் பிரிந்தமையாலும். பில்க - பெருக. ஏதாமணியே - குற்றப்படாத மாணிக்கமே. பாதப்போது ஆய்ந்து அணைவது என்று கொல் என்று பிரித்துப் பொருள்கொள்க.

10. கரப்பாய் - மறைப்பாய். கண் ஆர் விசும்பு - இடமகன்ற ஆகாயம். மூவா - முதிராத. பூப்போது - ஒருபொருட் பன்மொழி; பொலிவையுடைய மலர் எனினுமாம்.

உ
சிவமயம்

# 28. வாழாப்பத்து

## [முத்தியுபாயம்]

[திருப்பெருந்துறையில் அருளியது]

**[அடியேனை ஆட்கொண்ட தேவரீர், இங்ஙனம் என்னை விட்டுவிட்டால், நான் என்னசெய்வேன். எனக்கு ஒன்றிலும் பற்று இல்லை. என்குறைகளை யாரிடத்தில் எடுத்துக் கூறுவேன். இவ்வுலகில் யான் வாழமாட்டேன் என்ற கருத்துப்பட இந்தவாழாப்பத்தினைத் திருப்பெருந்துறையில் இருந்தபோது அடிகளார் அருளிச்செய்தார்.]**

ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

**446** பாரொடு விண்ணாய்ப் பரந்தவெம் பரனே
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
சீரொடு பொலிவாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாரொடு நோகேன் ஆர்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. **1**

---

1. பாரொடு விண் என்றமையால் ஏனைய பூதங்களிலும் அவற்றின் காரியமாகிய பௌதிகங்களிலும் இறைவன் பரவியிருக்கின்றான் என்பதும் பெற்றாம். வார் கடல் - நீண்ட கடல்.

447 வம்பனேன் றன்னை யாண்ட மாமணியே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
உம்பரு மறியா வொருவனே யிருவர்க்
குணர்விறந் துலகமூ டுருவும்
செம்பெரு மானே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எம்பெரு மானே யென்னையாள் வானே
யென்னைநீ கூவிக்கொண் டருளே. 2

448 பாடிமால் புகழும் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேடிநீ யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
ஊடுவ துன்னோ டுவப்பதும் உன்னை
உணர்த்துவ துனக்கெனக் குறுதி
வாடினே னிங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 3

449 வல்லைவா ளரக்கர் புரமெரித் தானே
மற்றுநான் பற்றிலேன் கண்டாய்
தில்லைவாழ் கூத்தா சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே

---

2. வம்பன் - வீணன். இருவர்க்கு - பிரமனுக்கும் திருமாலுக்கும். ஊடுருவும் - ஊடுருவி அப்பாற்சென்ற. உம்பர் - தேவர்கள்.

3. தேடிநீ ஆண்டாய் - அடியேன் உன்னைத் தேடிவந்தடைதற்குரிய சுதந்தர அறிவும் அற்றவனாதலின் நீயே தேடி ஆண்டாய். ஊடுதல் - காதலர்களுக்குள்ள ஊடல்போல அடியேனுக்கும் தேவரீருக்கும் உள்ள பிணக்கம்.

எல்லைமூ வுலகும் உருவியன் றிருவர்
காணாநா ளாதியீ றின்மை
வல்லையாய் வளர்ந்தாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 4

450 பண்ணினேர் மொழியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திண்ணமே யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
எண்ணமே யுடல்வாய் மூக்கொடு செவிகண்
என்றிவை நின்கணே வைத்து
மண்ணின்மே லடியேன் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 5

451 பஞ்சின்மெல் லடியாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செஞ்செவே யாண்டாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
அஞ்சினேன் நாயேன் ஆண்டுநீ யளித்த
அருளினை மருளினான் மறந்த
வஞ்சனே னிங்கு வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 6

---

4. வல்லை - விரைவு. வல்லையாய் - வலிமை உடையாயாய்.

5. திண்ணம் - உறுதியாக. யான் மண்ணில்வாழ்தல் போக நுகர்ச்சிக்கு ஆயின், அவற்றை நுகர்தற்குரியவாகிய பொறிகளையும் அப்பொறிகளை வாயிலாக உடைய மனத்தையும் நின்கண்வைத்த பிறகு, இம் மண்வாழ்வு எற்றுக்கு என்பார் வாழ்கிலேன் என்றார்.

6. செஞ்சவே - செம்மையாக. மருள் - மயக்கம்.

452 பருதிவா ழொளியாய் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
திருவுயர் கோலச் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
கருணையே நோக்கிக் கசிந்துள முருகிக்
கலந்துநான் வாழுமா றறியா
மருளனே னுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 7

453 பந்தணை விரலாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செந்தழல் போல்வாய் சிவபுரத் தரசே
திருபெருந் துறையுறை சிவனே
அந்தமி லமுதே அரும்பெரும் பொருளே
ஆரமு தேயடி யேனை
வந்துய வாண்டாய் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 8

---

7. பருதி - சூரியன். கோலம் - வடிவம். மருளன் - மயங்கியவன்.

8. அந்தம் இல் அமுது - அமுதம் உண்டாருக்கு இறுதியைப் போக்குவது அவர்களுடலில் தான் இறுதியை அடைந்து, இறைவனாகிய அமுது அங்ஙனம் அன்மையின் அந்தமில் அமுதே என்றார்.

454 பாவநா சாவுன் பாதமே யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
தேவர்தந் தேவே சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
மூவுல குருவ இருவர்கீழ் மேலாய்
முழங்கழ லாய்நிமிர்ந் தானே
மாவுரி யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 9

455 பழுதிறொல் புகழாள் பங்கநீ யல்லால்
பற்றுநான் மற்றிலேன் கண்டாய்
செழுமதி யணிந்தாய் சிவபுரத் தரசே
திருப்பெருந் துறையுறை சிவனே
தொழுவனோ பிறரைத் துதிப்பனோ எனக்கோர்
துணையென நினைவனோ சொல்லாய்
மழவிடை யானே வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. பாவநாசா - பாவத்தை அழிப்பவனே. உருவ - ஊடுருவ. **இருவர்** - பிரம விஷ்ணுக்கள். மா உரியான் - யானைத்தோலை ஆடையாக உடையவன்; புலித்தோலையுடையவன் என்றும் குறிக்கும்.

10. செழுமதி - இறைவனை அடைந்து அழியாமை பெற்றதால் செழுமையாகிய மதி. பிறரை - பிறதெய்வங்களை. மழவிடை - இளமையாகிய இடபம்.

உ
சிவமயம்

# 29. அருட்பத்து

## [மகா மாயாசுத்தி]

திருப்பெருந்துறையில் அருளியது

**[திருப்பெருந்துறையில், குருந்தமரத்தடியில் உருவாக எழுந்தருளி, அடிகளாரை ஆட்கொண்டுமறைந்த குருநாதனை அழைத்துக் 'கயிலைபுகும் நெறி இதுவென்று அருளிச்செய்க' என வேண்டிக்கொள்வதாக அருட்பத்தாகிய இதனை அருளிச் செய்கின்றார்.]**

**எழுசீர் ஆசிரியவிருத்தம்**

திருச்சிற்றம்பலம்

**456** சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழற் பணைமுலை மடந்தை
பாதியே பரனே பால்கொள்வெண் ணீற்றாய்
பங்கயத் தயனுமா லறியா
நீதியே செல்வத் திருப்பெருந் துறையில்
நிறைமலர்க் குருந்தமே வியசீர்
ஆதியே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 1

---

1. ஒளிசூழ் விளக்கு என மாற்றிக்கொள்க. சுரி குழல் - நெறித்த கூந்தல். நீதியே என்றது, தருக்கித்தேடிய அவர்களுக்கு நீதி வழங்கிய நேர்மை நோக்கி. அதெந்து - அதென்ன; மலையாள வழக்கு; அஞ்சாதே என்ற பொருளில் கன்னட வழக்கிலுள்ளது.

457 நிருத்தனே நிமலா நீற்றனே நெற்றிக்
கண்ணனே விண்ணுளோர் பிரானே
ஒருத்தனே யுன்னை யோலமிட் டலறி
உலகெலாந் தேடியுங் காணேன்
திருத்தமாம் பொய்கைத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருத்தனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 2

458 எங்கணா யகனே யென்னுயிர்த் தலைவா
ஏலவார் குழலிமா ரிருவர்
தங்கணா யகனே தக்கநற் காமன்
தனதுடல் தழலெழ விழித்த
செங்கணா யகனே திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அங்கணா அடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 3

---

2. திருத்தம் - தூய்மை. தேடியுங்காணேன் என்றது அவன் அருளாலே அவன்றாள் வணங்கலாமே அன்றித் தானே முயன்று தேடலாகாது என்பதனை விளக்கியவாறு. அருத்தன் - மெய்ப்பொருளானவன்.

3. ஏலம் - மயிர்ச்சாந்து. குழலிமார் இருவர் - கங்கையும் உமையுமாம்.

459 கமலநான் முகனும் கார்முகில் நிறத்துக்
கண்ணனும் நண்ணுதற் கரிய
விமலனே யெமக்கு வெளிப்படா யென்ன
வியன்றழல் வெளிப்பட்ட எந்தாய்
திமிலநான் மறைசேர் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அமலனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 4

460 துடிகொள்நே ரிடையாள் சுரிகுழன் மடந்தை
துணைமுலைக் கண்கடோய் சுவடு
பொடிகொள்வான் றழலிற் புள்ளிபோ லிரண்டும்
பொங்கொளி தங்குமார் பினனே
செடிகொள்வான் பொழிலிற் றிருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அடிகளே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 5

---

4. நண்ணுதற்கரிய விமலனே என்றது இருள் ஒளியைக் காணாதவாறுபோலச் சமலர் விமலனைக் கூடமுடியாமையை விளக்கியவாறு. வியன் - பெருமை. திமிலம் - பேரொலி.

5. இறைவன் திருமார்பிற் காணப்படும் முலைச்சுவடு, தழலில் புள்ளிபோலக் காணப்படுகின்றது என்று விளக்குகிறார். செடி - தூறு.

461 துப்பனே தூயாய் தூயவெண் ணீறு
துதைந்தெழு துளங்கொளி வயிரத்
தொப்பனே யுன்னை யுள்குவார் மனத்தின்
உறுசுவை யளிக்குமா ரமுதே
செப்பமா மறைசேர் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அப்பனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 6

462 மெய்யனே விகிர்தா மேருவே வில்லா
மேவலர் புரங்கண்மூன் றெரித்த
கையனே காலாற் காலனைக் காய்ந்த
கடுந்தழற் பிழம்பன்ன மேனிச்
செய்யனே செல்வத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
ஐயனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றருளாயே. 7

463 முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யுஞ்

---

6. துப்பன் - பவளம்போல்பவன். துதைந்து - நெருங்கி. உள்குவார் - தியானிப்பவர்கள். உறுசுவை - மிக்க சுவை.

7. விகிர்தன் - வேறுவேறான வடிவங்கொள்பவன். மேவலர் - பகைவர். பிழம்பு - திரட்சி.

சித்தனே செல்வத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 8

464 மருளனேன் மனத்தை மயக்கற நோக்கி
மறுமையோ டிம்மையுங் கெடுத்த
பொருளனே புனிதா பொங்குவா ளரவம்
கங்கைநீர் தங்குசெஞ் சடையாய்
தெருளுநான் மறைசேர் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அருளனே யடியேன் ஆதரித் தழைத்தால்
அதெந்துவே யென்றரு ளாயே. 9

465 திருந்துவார் பொழில்சூழ் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
இருந்தவா றெண்ணி யேசறு நினைந்திட்
டென்னுடை யெம்பிரா னென்றென்
றருந்தவா நினைந்தே ஆதரித் தழைத்தால்
அலைகட லதனுளே நின்று
பொருந்தவா கயிலை புகுநெறி யிதுகாண்
போதரா யென்றரு ளாயே. 10

திருச்சிற்றம்பலம்.

---

8. மொட்டு அறு மலர் - போது.

9. மருளனேன் - மயங்கிய யான். வாள் அரவம் - ஒளி பொருந்திய பாம்பு.

10. ஏசறு - ஏசற்று; வருந்தி. போதராய் - வா.

உ
சிவமயம்

# 30. திருக்கழுக்குன்றப்பதிகம்

## [சற்குரு தெரிசனம்]

திருக்கழுக்குன்றத்தில் அருளியது

[அடிகளார் திருவண்ணாமலை, காஞ்சிபுரம் முதலிய தலங்களை வணங்கிக்கொண்டு திருக்கழுக்குன்றத்துக்கு எழுந்தருளினார். அங்கே பெருமான் குருவடிவாக எழுந்தருளிக் காட்சிகொடுக்க, அதனைக்கண்டு மகிழ்ந்து இப்பதிகத்தை அருளிச்செய்தார்.]

எழுசீர் ஆசிரியவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

466 பிணக்கி லாதபெ ருந்து றைப்பெரு
மானு னாமங்கள் பேசுவார்க்
கிணக்கி லாததோ ரின்ப மேவருந்
துன்ப மேதுடைத் தெம்பிரான்
உணக்கி லாததோர் வித்து மேல்விளை
யாம லென்வினை யொத்தபின்
கணக்கி லாத்திருக் கோல நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 1

1. பிணக்கு - மாறுபாடு. இணக்கு இலாத - ஒப்பற்ற; இணங்கு என்பது எதுகைநோக்கி வலித்தல் விகாரமாயிற்று. உணக்கு

467 பிட்டு நேர்பட மண்சு மந்த
பெருந்து றைப்பெரும் பித்தனே
சட்ட நேர்பட வந்தி லாத
சழக்க னேனுனைச் சார்ந்திலேன்
சிட்ட னேசிவ லோக னேசிறு
நாயி னுங்கடை யாயவெங்
கட்ட னேனையும் ஆட்சிகொள் வான்வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 2

468 மலங்கி னேன்கண்ணி னீரை மாற்றி
மலங்கெ டுத்தபெ ருந்துறை
விலங்கி னேன்வினைக் கேட னேனினி
மேல்வி ளைவத றிந்திலேன்
இலங்கு கின்றநின் சேவ டிகளி
ரண்டும் வைப்பிட மின்றியே
கலங்கி னேன்கலங் காம லேவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 3

---

இலாததோர் வித்து - காயாத பிறவி விதை. என்வினை ஒத்தபின் - நல்லதன் நலனிலும், தீயதன் தீமையிலும் விருப்பு வெறுப்பில்லாத சமபுத்தி உண்டானபின்.

2. நேர்பட - சம்மதிக்க. சட்டம் - உடல்; கட்டளை என்றுமாம். சிட்டன் - ஆசாரசீலன். கட்டன் - துன்பவடிவானவன்.

3. மலங்கினேன் - கலங்கினேன். விலங்கினேன் - விலகினேன்.

469 பூணொ ணாததொ ரன்பு பூண்டு
பொருந்தி நாடொறும் போற்றவும்
நாணொ ணாததொர் நாண மெய்தி
நடுக்க டலுள ழுந்திநான்
பேணொ ணாதபெ ருந்து றைப்பெருந்
தோணி பற்றி யுகைத்தலும்
காணொ ணாத்திருக் கோலநீ வந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 4

470 கோல மேனிவ ராக மேகுண
மாம்பெ ருந்துறைக் கொண்டலே
சீல மேது மறிந்தி லாதவென்
சிந்தை வைத்தசி காமணி
ஞால மேகரி யாக நானுனை
நச்சி நச்சிட வந்திடுங்
கால மேயுனை யோத நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 5

471 பேத மில்லதொர் கற்ப ளித்த
பெருந்து றைப்பெரு வெள்ளமே
ஏத மேபல பேச நீஎனை
ஏதி லார்முனம் என்செய்தாய்

4. பூண் ஒணாதது ஓர் அன்பு - பிறரால் மேற்கொள்ள முடியாத பேரன்பு. உகைத்தல் - செலுத்துதல்.

5. வராகமே என்றது பன்றிக்குட்டிக்குப் பால்கொடுக்க மதுரையில் பன்றியான வரலாற்றைக் கொண்டது. கொண்டல் - மேகம். சீலம் - ஒழுக்கம். சிகாமணி - முடிமணி. கரி - சாக்ஷி.

சாதல் சாதல்பொல் லாமை யற்ற
தனிச்ச ரண்சர ணாமெனக்
காத லாலுனை யோத நீவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 6

472 இயக்கி மாரறு பத்து நால்வரை
எண்கு ணஞ்செய்த ஈசனே
மயக்க மாயதோர் மும்ம லப்பழ
வல்வி னைக்குள ழுந்தவும்
துயக்க றுத்தெனை யாண்டு கொண்டுநின்
தூய்ம லர்க்கழல் தந்தெனைக்
கயக்க வைத்தடி யார்மு னேவந்து
காட்டி னாய்கழுக் குன்றிலே. 7

திருச்சிற்றம்பலம்.

---

6. பேதம் - வேறுபாடு. கற்பு - பிறதெய்வம் பேணாத கற்பு. ஏதிலார் - அயலார். சாதல் சாதல் - சாதலாகிய தொழில் சாதல்; அதாவது அழியாமை. தனிச்சரண் - ஒப்பற்ற திருவடி. சரண் என்ற சொல்லுக்குப் புகல் என்று பொருள். சாதல் சாதல் சரண், பொல்லாமையற்ற சரண் தனிச்சரண் எனத் தனித்தனியே கூட்டுக.

7. இயக்கிமார் அறுபத்துநால்வரை எண்குணம் செய்த ஈசன் என்றது இயக்கியர்கள் வழிபாடுசெய்ய அவர்களை ஆட்கொண்டு எண்குணங்களின் வசமாக ஆக்கிக்கொண்டார் என்ற வரலாற்றை அறிவிப்பது. இதன் விரிவை உத்தரகோசமங்கைப் புராணத்திற் காணலாம். ஒரிசாமாகாணத்தில் மகாநதியின் கரையில் இருக்கிற ராணிபுரசுரால் என்னும் கிராமத்தில் உள்ள கோயிலில் அறுபத்து நான்கு யோகினிகளின் திருவுருவங்கள் நிறுவப்பட்டுள்ளனவாம். அந்தக்கோயிலும் ஓர் சிவன்கோயிலே. ஆதலால் இதற்கும் அதற்கும் ஓர் இயைபு உளதாகலாம். (தினசரி மடல் 1949 ஜூலை 3.) துயக்கு-தளர்ச்சி; தொடக்கு என்றுமாம். கயக்க-சிறக்க தடவும் கயவும் நனியும் பெருமை என்பது தொல்காப்பியம்.

உ
சிவமயம்

# 31. கண்டபத்து

## [நிருத்ததரிசனம்]

*திருத்தில்லையில் அருளியது*

[சிவஞானிகள் அகலாத தில்லையம்பதியிற்சென்றடைந்து சிவாகமம் உணர்ந்த பெரியோர்கள் வழிபாடுசெய்யும் பொன்னம்பலத்தைக் கண்டவர்களான திருவாதவூரடிகள், அதனுள் தில்லைக்கூத்தனை அந்தமில்லா ஆனந்தவடிவினனாகக்கண்டு கண்டபத்தாகிய இதனை அருளிச்செய்தார்.]

கொச்சகக் கலிப்பா

*திருச்சிற்றம்பலம்*

473 இந்திரிய வயமயங்கி
யிறப்பதற்கே காரணமாய்
அந்தரமே திரிந்துபோய்
அருநரகில் வீழ்வேற்குச்
சிந்தைதனைத் தெளிவித்துச்
சிவமாக்கி யெனையாண்ட
அந்தமிலா ஆனந்தம்
அணிகொடில்லை கண்டேனே. 1

---

1. இந்திரியம் - பொறிகள். அந்தரம் - வான். சிவமாக்கி - சிவத்தின்வசப்படுத்தி. அந்தம் இலா ஆனந்தம் - எல்லையற்ற ஆனந்தம்.

474 வினைப்பிறவி யென்கின்ற
வேதனையி லகப்பட்டுத்
தனைச்சிறிது நினையாதே
தளர்வெய்திக் கிடப்பேனை
எனைப்பெரிதும் ஆட்கொண்டென்
பிறப்பறுத்த இணையிலியை
அனைத்துலகுந் தொழுந்தில்லை
யம்பலத்தே கண்டேனே. 2

475 உருத்தெரியாக் காலத்தே
உள்புகுந்தென் னுளமன்னிக்
கருத்திருத்தி யூன்புக்குக்
கருணையினா லாண்டுகொண்ட
திருத்துருத்தி மேயானைத்
தித்திக்குஞ் சிவபதத்தை
அருத்தியினால் நாயடியேன்
அணிகொடில்லை கண்டேனே. 3

2. வேதனை - துன்பம். தனைச்சிறிதும் நினையாது - ஆன்மாக்கள் வினையில் அழுந்தியிருக்குங்காலத்துத் தன்னையும் உணரமாட்டா. பெரிதும் என்றது இறைவன் கருணையின் மிகுதியை விளக்கியவாறு.

3. உருத் தெரியாக்காலம் - இறைவன்வடிவத்தை யான் அறியாதகாலத்தில் கருவில், உருவம்தெரியாத தசைத்திரளாயிருக்குங் காலத்திலேயே எனினுமாம். திருத்துருத்தி இப்போது குற்றாலம் என வழங்குவது. அருத்தி - அன்பு.

476 கல்லாத புல்லறிவிற்
கடைப்பட்ட நாயேனை
வல்லாள னாய்வந்து
வனப்பெய்தி யிருக்கும்வண்ணம்
பல்லோருங் காணவென்றன்
பசுபாசம் அறுத்தானை
எல்லோரும் இறைஞ்சுதில்லை
யம்பலத்தே கண்டேனே. 4

477 சாதிகுலம் பிறப்பென்னுஞ்
சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலி நாயேனை
அல்லலறுத் தாட்கொண்டு
பேதைகுணம் பிறருருவம்
யானெனதென் னுரைமாய்த்துக்
கோதிலமு தானானைக்
குலாவுதில்லை கண்டேனே. 5

---

4. கல்லாத புல்லறிவில் - சிவஞானத்தைப் பெறாத சிற்றறிவினால். வல்லாளனாய் - மிகவலிமையுடையவனாக. வனப்பு - அழகு. பசு - பசுத்தன்மை. பாசம் - ஆணவம் முதலியன.

5. ஞானநெறி அடைந்தார்க்குச் சாதி குலம் பிறப்புக்கள் பெருந்தடை ஆதலின் அவற்றை நீர்ச்சுழி என்றார். ஆதம் இலி - ஆதரவு இல்லாதவன். பேதைகுணம் - அறியாமை. பிறர் உருவம் - பிறதெய்வங்களின் வடிவம். குலாவு தில்லை - விளங்குகின்ற தில்லை.

478 பிறவிதனை யறமாற்றிப்
பிணிமூப்பென் றிவையிரண்டும்
உறவினொடு மொழியச்சென்
றலகுடைய வொருமுதலைச்
செறிபொழில்சூழ் தில்லைநகர்
திருச்சிற்றம் பலமன்னி
மறையவரும் வானவரும்
வணங்கிடநான் கண்டேனே. 6

479 பத்திமையும் பரிசுமிலாப்
பசுபாசம் அறுத்தருளிப்
பித்தனிவ னெனவென்னை
யாக்குவித்துப் போராமே
சித்தமெனுந் திண்கயிற்றால்
திருப்பாதங் கட்டுவித்த
வித்தகனார் விளையாடல்
விளங்குதில்லை கண்டேனே.

480 அளவிலாப் பாவகத்தால்
அமுக்குண்டிங் கறிவின்றி
விளைவொன்றும் அறியாதே
வெறுவியனாய்க் கிடப்பேனைக்

---

6. அறமாற்றி - அடியோடு நீக்கி. **உறவினொடும் ஒழிய** - பிணிமூப்புக்களுக்கு உறவாகிய வினைகளோடும் கெடும்படி.

7. பரிசு - நல்லொழுக்கம். **பித்தன் இவன் என** - இவன் பித்தன் என்று எல்லாரும் சொல்ல. **வித்தகனார்** - பேரறிஞர்.

களவிலா ஆனந்த
மளித்தென்னை யாண்டானைக்
களவிலா வானவருந்
தொழுந்தில்லை கண்டேனே. 8

481 பாங்கினொடு பரிசொன்றும்
அறியாத நாயேனை
ஓங்கியுளத் தொளிவளர
வுலப்பிலா அன்பருளி
வாங்கிவினை மலமறுத்து
வான்கருணை தந்தானை
நான்குமறை பயில்தில்லை
யம்பலத்தே கண்டேனே. 9

482 பூதங்க ளைந்தாகிப்
புலனாகிப் பொருளாகிப்
பேதங்க ளனைத்துமாய்ப்
பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட
கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும்
விளங்குதில்லை கண்டேனே. 10

திருச்சிற்றம்பலம்.

---

8. பாவகம் - எண்ணம். வெறுவியன் - வீணன்.

9. பாங்கு - தன்மை. பரிசு - அதன் பயன். ஒளி - திருவடி ஞானம். வினைவாங்கி - வினையைக் கெடுத்து.

10. புலனாகி - தன்மாத்திரைகள் ஐந்துமாகி. கேதங்கள் - துன்பங்கள்.

உ

சிவமயம்.

# 32 பிரார்த்தனைப்பத்து

[சதாமுத்தி]

[ திருப்பெருந்துறையில் அருளியது ]

**[சுவாமிகள் திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் காலத்து இறைவன் தனியேவிட்டுச் சென்றமைக்கு ஆற்றாது 'அலந்துபோனேன். அன்புமிகும்படி அருள்செய்யவேண்டும்' என வேண்டிக்கொள்வதாகப் பிரார்த்தனைப் பத்தாகிய இதனை அருளிச்செய்தார்.]**

**ஆசிரிய விருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**483** கலந்து நின்னடி யாரோ
டன்று வாளா களித்திருந்தேன்
புலர்ந்து போன காலங்கள்
புகுந்து நின்ற திடர்பின்னாள்
உலர்ந்து போனேன் உடையானே
உலவா வின்பச் சுடர்காண்பான்
அலந்து போனேன் அருள்செய்யாய்
ஆர்வங் கூர அடியேற்கே. **1**

---

1. வாளா - சும்மா. அடியார்கள்பலரும் இறைவன் அருளாரமுதத்தை அநுபவிக்கும்போது இவர் சும்மா களித்திருந்தார் என்பதாம். புலர்ந்து - கழிந்து. உலவா - வற்றாத. அலந்து - வருந்தி. கூர - மிக.

484 அடியார் சிலருன் னருள்பெற்றார்
ஆர்வங் கூர யானவமே
முடையார் பிணத்தின் முடிவின்றி
முனிவால் அடியேன் மூக்கின்றேன்
கடியே னுடைய கடுவினையைக்
களைந்துன் கருணைக் கடல்பொங்க
உடையா யடியேன் உள்ளத்தே
ஓவா துருக அருளாயே 2

485 அருளா ரமுதப் பெருங்கடல்வாய்
அடியா ரெல்லாம் புக்கழுந்த
இருளா ராக்கை யிதுபொறுத்தே
எய்த்தேன் கண்டா யெம்மானே
மருளார் மனத்தோ ருன்மத்தன்
வருமா லென்றிங் கெனைக்கண்டார்
வெருளா வண்ணம் மெய்யன்பை
உடையாய் பெறநான் வேண்டுமே. 3

486 வேண்டும் வேண்டும் மெய்யடியார்
உள்ளே விரும்பி யெனையருளால்
ஆண்டா யடியேன் இடர்களைந்த
அமுதே யருமா மணிமுத்தே

---

2. அவமே - வீணாக. முடை - நாற்றம். மூக்கின்றேன் - முதிர்ச்சியுறுகின்றேன். கடியேன் - கனியாத நெஞ்சுடைய கடுந் தன்மை வாய்ந்தேன். ஓவாது - ஒழியாது.

3. இருள் ஆர் ஆக்கை - அஞ்ஞான இருளில் அகப்பட்ட உடல். மருள் - மயக்கம்; ஆல் அசை. வெருளாவண்ணம் - வெருண்டு ஓடாதபடி.

தூண்டா விளக்கின் சுடரனையாய்
தொண்ட னேற்கும் உண்டாங்கொல்
வேண்டா தொன்றும் வேண்டாது
மிக்க அன்பே மேவுதலே. 4

487 மேவு முன்றன் அடியாருள்
விரும்பி யானும் மெய்ம்மையே
காவி சேருங் கயற்கண்ணாள்
பங்கா வுன்றன் கருணையினால்
பாவி யேற்கும் உண்டாமோ
பரமா னந்தப் பழங்கடல்சேர்ந்
தாவி யாக்கை யானெனதென்
றியாது மின்றி யறுதலே. 5

---

4. வேண்டும் வேண்டும் - மிக மிக விரும்பும். இடர் - பிறவியாகிற துன்பம். தூண்டாவிளக்கின் சுடர் அனையாய் - மிகாத குறையாத அவியாத விளக்கைப்போல என்றும் ஒருபடித்தாகவிளங்குபவனே. வேண்டாத ஒன்றும் வேண்டாது - தேவரீரால் விரும்பப் படாத ஒன்றை அடியேனும் விரும்பாது. தொண்டனேற்கும் வேண்டாது அன்பே மேவுதல் உண்டாங்கொல் எனமாற்றிப் பொருள் காண்க.

5. மேவும் - விரும்பிய. காவிசேரும் - கருங்குவளையையொத்த. காவி சேருங் கயல் கண்ணாள் என்பது நிறத்திற்கும் வடிவிற்குமான உவமையடுக்கு. பாவியேற்கும் - பாவியாகிய எனக்கும்; திருவடியைத் தியானிக்காத எனக்கும் எனினுமாம். ஆவி யாக்கை யான் எனது என்று இன்றி - உயிரும் உடலும் அகங்கார மமகாரங்களும் இன்றி. அன்றி ஆவியைப்பற்றியதாகிய யான் என்பதும், யாக்கையைப்பற்றியதாகிய எனது என்பதும் இல்லாமல் என்றுமாம்.

488 அறவே பெற்றார் நின்னன்பர்
அந்த மின்றி யகநெகவும்
புறமே கிடந்து புலைநாயேன்
புலம்பு கின்றேன் உடையானே
பெறவே வேண்டும் மெய்யன்பு
பேரா வொழியாப் பிரிவில்லா
மறவா நினையா அளவிலா
மாளா வின்ப மாகடலே. 6

489 கடலே யனைய ஆனந்தம்
கண்டா ரெல்லாங் கவர்ந்துண்ண
இடரே பெருக்கி யேசற்றிங்
கிருத்த லழகோ அடிநாயேன்
உடையாய் நீயே யருளுதியென்
றுணர்த்தா தொழிந்தே கழிந்தொழிந்தேன்
சுடரா ரருளால் இருள்நீங்கச்
சோதீ யினித்தான் துணியாயே. 7

---

6. அறவே - முழு இன்பத்தையும். அந்தமின்றி - முடிவில்லாமல். சிவானந்தத்தின் வரைவிலக்கணம் ஈற்றடி இரண்டால் வகுக்கப்படுகிறது.

7. கண்டார் எல்லாம் - கண்ட அடியார்கள் எல்லாம். ஏசற்று - துயருற்று. சுடரார் அருளால் - சோதிவடிவான திருவருளால். இருள் - மலத்தின் பிணிப்பு.

490 துணியா வுருகா அருள்பெருகத்
தோன்றுந் தொண்ட ரிடைப்புகுந்து
திணியார் மூங்கிற் சிந்தையேன்
சிவனே நின்று தேய்கின்றேன்
அணியார் அடியா ருனக்குள்ள
அன்புந் தாராய் அருளளியத்
தணியா தொல்லை வந்தருளித்
தளிர்ப்பொற் பாதம் தாராயே. 8

491 தாரா அருளொன் றின்றியே
தந்தா யென்றுன் தமரெல்லாம்
ஆரா நின்றார் அடியேனும்
அயலார் போல அயர்வேனோ
சீரா ரருளாற் சிந்தனையைத்
திருத்தி யாண்ட சிவலோகா
பேரா னந்தம் பேராமை
வைக்க வேண்டும் பெருமானே. 9

8. திணியார் மூங்கில் - கல் மூங்கில். தேய்கின்றேன் - தளர்கின்றேன். அணி-அழகு. உனக்கு உள்ள அன்பு-உன்னிடத்து வைத்துள்ள அன்பு. தாராய் - தருக. அளிய - கனிய.

9. தாரா அருள் - பொன்னும் பொருளும் போலத் தரவொண்ணாத அருள். தமர் - அடியார். அயலார்போல - அருள்பெறுதற்குத் தகுதியில்லாதவர்போல. பேராமை - நீங்காதவண்ணம்.

492 மானோர் பங்கா வந்திப்பார்
மதுரக் கனியே மனநெகா
நானோர் தோளாச் சுரையொத்தால்
நம்பி யித்தால் வாழ்ந்தாயே
ஊனே புகுந்த வுனையுணர்ந்தே
உருகிப் பெருகும் உள்ளத்தைக்
கோனே யருளுங் காலந்தான்
கொடியேற் கென்றோ கூடுவதே. 10

493 கூடிக் கூடி யுன்னடியார்
குனிப்பார் சிரிப்பார் களிப்பாரா
வாடிவாடி வழியற்றேன்
வற்றன் மரம்போல் நிற்பேனோ
ஊடி யூடி யுடையாயொடு
கலந்துள் ளுருகிப் பெருகிநெக்
காடி யாடி யானந்தம்
அதுவே யாக அருள்கலந்தே. 11

திருச்சிற்றம்பலம்.

---

10. வந்திப்பார் மதுரக்கனியே - வணங்குகின்றவர்களுக்கு இனிய கனியை ஒத்தவனே. தோளாச்சுரை - துளைக்கப்படாத சுரைக்குடுக்கை இது ஒன்றுக்கும் பயன்படாது.

11. வற்றல் மரம் - உலர்ந்துபோன மரம். குனிப்பார் - கூத்தாடுவார். ஆடி ஆனந்தமதுவேயாகக் கலந்து அருள் எனக் கூட்டுக.

உ
சிவமயம்

# 33. குழைத்தபத்து

## [ஆத்துமநிவேதனம்]

திருப்பெருந்துறையில் அருளியது

**[வாதவூரடிகள் இறைவன் தன்னையாட்கொண்டு மீட்டும் விடுத்து, தன்னைக் குழைவித்த அருமைப்பாடுகளை விளக்கி இப்பத்தினை இயற்றியருளுகின்றார்.]**

### ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**494** குழைத்தாற் பண்டைக் கொடுவினைநோய்
காவா யுடையாய் கொடுவினையேன்
உழைத்தா லுறுதி யுண்டோதான்
உமையாள் கணவா எனையாள்வாய்
பிழைத்தாற் பொறுக்க வேண்டாவோ
பிறைசேர் சடையாய் முறையோவென்
றழைத்தால் அருளா தொழிவதே
அம்மா னேயுன் அடியேற்கே. 1

---

1. குழைத்தால் - பதனழியச்செய்தால். இப்பத்தும் முதற் பாட்டின் முதலும் பத்தாம்பாட்டின் இறுதியுமாக மண்டலித்துள்ளது. இதில் இறைவன் அருளாமையால் தன்னை வினை குழைத்துவிட்டதாக அருளுகின்றார். கொடுவினையேன் உழைத்தால் உறுதியுண்டோ என்பது 'மற்றொன்று சூழினும்தான் முந்துறும்' என்றவாறு உழைத்தாலும் உறுதிகிட்டாதவாறு வினை தடுக்கின்றது என்பதாம்.

495 அடியேன் அல்ல லெல்லாமுன்
அகல ஆண்டா யென்றிருந்தேன்
கொடியே ரிடையாள் கூறாஎம்
கோவே யாவா என்றருளிச்
செடிசே ருடலைச் சிதையாத
தெத்துக் கெங்கள் சிவலோகா
உடையாய் கூவிப் பணிகொள்ளா
தொறுத்தால் ஒன்றும் போதுமே. 2

496 ஒன்றும் போதா நாயேனை
உய்யக் கொண்ட நின்கருணை
இன்றே யின்றிப் போய்த்தோதான்
ஏழை பங்கா எங்கோவே
குன்றே யனைய குற்றங்கள்
குணமா மென்றே நீகொண்டால்
என்றான் கெட்ட திரங்கிடாய்
எண்டோண் முக்கண் எம்மானே. 3

---

2. கொடி ஏர் இடையாள் - கொடியை ஒத்த இடையை யுடைய உமையவள். செடி சேர் உடல் - தீவினைசேர்ந்த உடல். 'செடியாய உடல் தீர்ப்பான்' என்ற தேவாரமும் ஓர்க. ஒறுத்தால் - வருத்தினால்.

3. ஒன்றும் போதா நாயேனை - ஒன்றற்கும் பற்றாத நாய் போன்ற என்னை. இன்றே - இன்றைக்கே. இன்றிப் போய்த்தோ - இல்லாமல் போய்விட்டதோ.

497 மானேர் நோக்கி மணவாளா
மன்னே நின்சீர் மறப்பித்திவ்
வூனே புகவென் றனைநூக்கி
உழலப் பண்ணு வித்திட்டாய்
ஆனு லடியேன் அறியாமை
அறிந்து நீயே யருள்செய்து
கோனே கூவிக் கொள்ளுநாள்
என்றென் றுன்னைக் கூறுவதே. 4

498 கூறு நாவே முதலாகக்
கூறுங் கரண மெல்லாநீ
தேறும் வகைநீ திகைப்புநீ
தீமை நன்மை முழுதுநீ
வேறோர் பரிசிங் கொன்றில்லை
மெய்ம்மை யுன்னை விரித்துரைக்கில்
தேறும் வகையென் சிவலோகா
திகைத்தால் தேற்ற வேண்டாவோ. 5

499 வேண்டத் தக்க தறிவோய்நீ
வேண்ட முழுதுந் தருவோய்நீ
வேண்டும் அயன்மாற் கரியோய்நீ
வேண்டி யென்னைப் பணிகொண்டாய்

---

4. ஊன் - உடல். நூக்கி - செலுத்தி. அறியாமை அறிந்து - அறியாமையை அறிந்துகொண்டு.

5. நா முதலாகக் கூறுங் கரணம் - நாக்குமுதலாகப் பேசப்படும் புறக்கரணங்கள். திகைப்பு - மறதி; என்றது திகைத்தற்கான வழியை.

வேண்டி நீயா தருள்செய்தாய்
யானும் அதுவே வேண்டினல்லால்
வேண்டும் பரிசொன் றுண்டென்னில்
அதுவும் உன்றன் விருப்பன்றே. 6

500 அன்றே யென்றன் ஆவியும்
உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே யனையாய் என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ
இன்றோ ரிடையூ றெனக்குண்டோ
எண்டோள் முக்கண் எம்மானே
நன்றே செய்வாய் பிழைசெய்வாய்
நானோ இதற்கு நாயகமே. 7

501 நாயிற் கடையாம் நாயேனை
நயந்து நீயே யாட்கொண்டாய்
மாயப் பிறவி யுன்வசமே
வைத்திட் டிருக்கும் அதுவன்றி
ஆயக் கடவேன் நானோதான்
என்ன தோவிங் கதிகாரம்
காயத் திடுவா யுன்னுடைய
கழற்கீழ் வைப்பாய் கண்ணுதலே. 8

---

6. **வேண்டும்** - இடைவிடாது பிரார்த்திக்கும். **நீ வேண்டியாது** அருள்செய்தாய் யானும் அதுவே வேண்டுகின்றேன் என்றதனால் தனக்கு ஒரு சுதந்தரமின்மையையும் விளக்கியவாறாயிற்று. **பணி** - ஏவல்.

7. **அன்றே** - ஆட்கொண்ட முதற்காலத்திலேயே. **உடைமை** - செல்வம். இதனால் நன்றே வரினும் தீதே வரினும் நான் அறிவது ஒன்றேனும் இல்லை எல்லாம் உன் பரம் என்கின்றார்.

8. **நயந்து** - விரும்பி. **மாயப்பிறவி** - வஞ்சகமான பிறவி.

502 கண்ணார் நுதலோய் கழலிணைகள்
கண்டேன் கண்கள் களிகூர
எண்ணா திரவும் பகலுநான்
அவையே யெண்ணு மதுவல்லால்
மண்மேல் யாக்கை விடுமாறும்
வந்துன் கழற்கே புகுமாறும்
அண்ணா எண்ணக் கடவேனோ
அடிமை சால அழகுடைத்தே. 9

503 அழகே புரிந்திட் டடிநாயேன்
அரற்று கின்றேன் உடையானே
திகழா நின்ற திருமேனி
காட்டி யென்னைப் பணிகொண்டாய்
புகழே பெரிய பதமெனக்குப்
புராண நீதந் தருளாதே
குழகா கோல மறையோனே
கோனே யென்னைக் குழைத்தாயே. 10

திருச்சிற்றம்பலம்.

---

நான் ஆயக்கடவேனோ என்றதனால் தனக்கு எதிலும் உரிமையில்லை என்று காட்டியவாறு.

9. கண் ஆர் நுதலோய் - நெற்றிக்கண்ணையுடைய பெருமானே!. அவையே எண்ணும் அது அல்லால் - கழல் இணைகளையே எண்ணுகின்ற அது வல்லாமல் இரவும் பகலும் எண்ணாது - இராப் பகலாக என் உள்ளம் வேறொன்றையும் எண்ணாது.

10. பதம் - திருவடி. குழகா - இளையவனே.

உ
சிவமயம்

# 34. உயிருண்ணிப்பத்து

## [சிவானந்தமேலிடுதல்]

திருப்பெருந்துறையில் அருளியது

**[அடிகளார், திருப்பெருந்துறையில் இறைவன் ஊனூர் உயிர்கலந்து உள்ளத்தைவிட்டுப் பிரியாது பேரின்பத்து இருத்திய பெற்றியை விளக்குகின்ற இப்பத்துப்பாடல்களையும் அருளிச்செய்தார்.]**

**கலிவிருத்தம்**

திருச்சிற்றம்பலம்

**504** பைந்நாப்பட வரவேரல்கு
லுமைபாகம தாயென்
மெய்ந்நாடொறும் பிரியாவினைக்
கேடாவிடைப் பாகா
செந்நாவலர் பரசும்புகழ்த்
திருப்பெருந்துறை யுறைவாய்
எந்நாட்களித் தெந்நாளிறு
மாக்கேனினி யானே. 1

---

1. பை நா அரவுப்பட ஏர் அல்குல் என மாற்றுக. என்மெய் நாள்தொறும் பிரியா வினைக்கேடா - அடியேனது உடலை என்றும் விட்டுப்பிரியாத வினைக்கேடனே. செந்நாவலர் - செம்மையானபுலவர். பரசும் - தோத்திரிக்கின்ற.

505 நானாரடி யணைவானொரு
நாய்க்குத்தவி சிட்டிங்
கூனுருடல் புகுந்தானுயிர்
கலந்தானுளம் பிரியான்
தேனார்சடை முடியான்மன்னு
திருப்பெருந்துறை யுறைவான்
வானோர்களும் அறியாததோர்
வளமீந்தனன் எனக்கே. 2

506 எனைநானென்ப தறியேன்பக
லிரவாவதும் அறியேன்
மனவாசகங் கடந்தானெனை
மத்தோன்மத்த னாக்கிச்
சினமால்விடை யுடையான்மன்னு
திருப்பெருந்துறை யுறையும்
பனவன்னெனைச் செய்தபடி
றறியேன்பரஞ் சுடரே. 3

507 வினைக்கேடரும் உளரோபிறர்
சொல்லீர் வியனுலகில்
எனைத்தான்புகுந் தாண்டானென
தென்பின்புரை யுருக்கிப்

---

2. நான் ஆர்? - ஆட்கொண்ட இறைவனது பெருந்தகுதிக்கு நான் எவ்வளவு?

3. எனை நான் என்பது அறியேன் - என்னைப்பற்றி வாதவூரனாகிய அடியான் யான் என்பதனையும் அறியேன் ஆயினேன். மனவாசகங்கடந்தான் - உள்ளத்திற்கும் உரைக்கும் அப்பாற்பட்டவன். பனவன் - முனிவன்.

பிணைத்தான்புகுந் தெல்லேபெருந்
துறையிலுறை பெம்மான்
மனத்தான்கண்ணி னகத்தான்மறு
மாற்றத்திடை யானே. 4

508 பற்றாங்கவை யற்றீர்பற்றும்
பற்றாங்கது பற்றி
நற்றாங்கதி யடைவோமெனிற்
கெடுவீரோடி வம்மின்
தெற்றார்சடை முடியான்மன்னு
திருப்பெருந்துறை யிறைசீர்
கற்றாங்கவன் கழல்பேணின
ரொடுங்கூடுமின் கலந்தே. 5

509 கடலின்றிரை யதுபோல்வரு
கலக்கமல மறுத்தென்
உடலும்மென துயிரும்புகுந்
தொழியாவண்ண நிறைந்தான்
சுடருஞ்சுடர் மதிசூடிய
திருப்பெருந்துறை யுறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள்
பரன்றான்செய்த படிறே. 6

---

4. என்பின் புரை - எலும்பின் உள்துளை. எல்லே இரக்கக் குறிப்பிடைச் சொல். மறு மாற்றம் - குற்றம்பொருந்திய சொல்.

5. பற்றாங்கு அவை - பற்றாகிய அவை; ஆங்கு அசை. பற்றும் பற்று பற்றி - பற்றவேண்டிய பற்றைப் பிடித்து. நன்று எதுகை நோக்கி நற்று என ஆயிற்று. தெற்று - பின்னல்.

6. கலக்கம் - துன்பம். சுடரும் சுடர் - பிரகாசிக்கின்ற ஒளி. படிறு - வஞ்சம்.

510 வேண்டேன்புகழ் வேண்டேன்செல்வம்
வேண்டேன் மண்ணும்விண்ணும்
வேண்டேன்பிறப் பிறப்புச்சிவம்
வேண்டார்தமை நாளும்
தீண்டேன்சென்று சேர்ந்தேன்மன்னு
திருப்பெருந்துறை யிறைதாள்
பூண்டேன்புறம் போகேனினிப்
புறம்போகலொட் டேனே. 7

511 கோற்றேனெனக் கென்கோகுரை
கடல்வாயமு தென்கோ
ஆற்றேனெங்கள் அரனேயரு
மருந்தேயென தரசே
சேற்றார்வயல் புடைசூழ்தரு
திருப்பெருந்துறை யுறையும்
நீற்றார்தரு திருமேனிநின்
மலனேயுனை யானே. 8

---

7. சிவம் வேண்டார்தமை - சிவத்தை விரும்பாதவரை. ஒட்டேன் - சம்மதியேன்.

8. கோற்றேன் - கொம்புத்தேன். குரைகடல் - ஒலிக்கின்ற கடல். நீற்று ஆர்தரு திருமேனி - விபூதி நிறைந்த திருமேனி.

512 எச்சம்மறி வேனானெனக்
கிருக்கின்றதை யறியேன்
அச்சோவெங்கள் அரனேயரு
மருந்தே யெனதமுதே
செச்சைமலர் புரைமேனியன்
திருப்பெருந்துறை யுறைவான்
நிச்சம்மென நெஞ்சின்மன்னி
யானாகிநின் றானே. 9

513 வான்பாவிய வுலகத்தவர்
தவமேசெய அவமே
ஊன்பாவிய வுடலைச்சுமந்
தடவிமர மானேன்
தேன்பாய்மலர்க் கொன்றைமன்னா
திருப்பெருந்துறை யுறைவாய்
நான்பாவியன் ஆனாலுனை
நல்காயென லாமே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. எச்சம் - குற்றம். அச்சோ - ஆச்சரியம். செச்சை மலர் - வெட்சிப்பூ. நிச்சம் - நாடோறும். யானாகிநின்றான் - என்னிற்கலந்து ஒன்றானான்.

10. வான் பாவிய - விண்ணிற் பரந்த. அவமே-வீணாக. அடவி மரம் ஆனேன் - நிழலுக்கும் பயன்படாத காட்டிலுள்ள மரமானேன். ஆனால் ஆனாலும் என உம்மை விரித்துக்கொள்க.

உ

சிவமயம்

## 35. அச்சப்பத்து

### [ஆனந்தமுறுதல்]

*திருத்தில்லையில் அருளியது.*

**[வாதவூரடிகள் திருத்தில்லையில் எழுந்தருளியிருக்குங் காலத்து, புறச்சமயம் பேணும் சிலரைக் கண்டார்களாக 'நாம் எதற்கும் அஞ்சோம்; ஆனால், இவர்களைக் கண்டால் நமக்குப் பேரச்சம்' என்று அச்சப்பத்தாகிய இதனை அருளிச் செய்தார்.]**

**ஆசிரியவிருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**514** புற்றில்வா ளரவும் அஞ்சேன்
பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்
கற்றைவார் சடையெம் அண்ணல்
கண்ணுதல் பாதம் நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை
உண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. **1**

---

**1.** கற்றை - தொகுதி. கற்றிலாதவரை - புகழைப் பேசாதவரை.

515 வெருவரேன் வேட்கை வந்தால்
வினைக்கடல் கொளினும் அஞ்சேன்
இருவரான் மாறு காணா
எம்பிரான் தம்பி ரானும்
திருவுரு வன்றி மற்றோர்
தேவரெத் தேவ ரென்ன
அருவரா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 2

516 வன்புலால் வேலும் அஞ்சேன்
வளைக்கையார் கடைக்கண் அஞ்சேன்
என்பெலாம் உருகநோக்கி
யம்பலத் தாடு கின்ற
என்பொலா மணியை யேத்தி
யினிதருள் பருக மாட்டா
அன்பிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 3

517 கிளியனார் கிளவி யஞ்சேன்
அவர்கிறி முறுவல் அஞ்சேன்
வெளியநீ றாடு மேனி
வேதியன் பாத நண்ணித்

---

2. வெருவரேன் - அஞ்சேன். வேட்கை - ஆசை. மாறு இருவரால் காணா எம்பிரான் எனக் கூட்டுக. மாறு - பகை. அருவரா தவரை - வெறுப்புக்கொள்ளாதவரை. அம்ம உரிச்சொல்.

3. நோக்கி - கருணைநோக்கஞ்செய்து. பருகமாட்டா - நுகர மாட்டாத.

துளியுலாங் கண்ண ராகித்
தொழுதழு துள்ள நெக்கிங்
களியிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 4

518 பிணியெலாம் வரினும் அஞ்சேன்
பிறப்பினோ டிறப்பும் அஞ்சேன்
துணிநிலா அணியி னான்றன்
தொழும்பரோ டழுந்தி அம்மால்
திணிநிலம் பிளந்துங் காணாச்
சேவடி பரவி வெண்ணீ
றணிகிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 5

519 வாளுலாம் எரியும் அஞ்சேன்
வரைபுரண் டிடினும் அஞ்சேன்
தோளுலா நீற்றன் ஏற்றன்
சொற்பதங் கடந்த அப்பன்
தாளதா மரைகள் ஏத்தித்
தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 6

---

4. கிளியனார் - கிளியையொத்த பெண்கள். கிறி - வஞ்சனை. முறுவல் - சிரிப்பு. தெளிய நீறு - வெண்ணீறு. துளி உலாம் கண்ண ராகி - ஆனந்தக்கண்ணீரைச் சொரிகின்ற கண்களையுடையவராகி. அளி - அன்பு.

5. துணி நிலா - பிறைமதி. தொழும்பர் - அடியார்.

6. வரை - மலை. ஏற்றன் - இடபவாகனத்தையுடையவன்.

520 தகைவிலாப் பழியும் அஞ்சேன்
சாதலை முன்னம் அஞ்சேன்
புகைமுகந் தெரிகை வீசிப்
பொலிந்தஅம் பலத்து ளாடும்
முகைநகைக் கொன்றை மாலை
முன்னவன் பாத மேத்தி
அகநெகா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 7

521 தறிசெறி களிறும் அஞ்சேன்
தழல்விழி யுழுவை யஞ்சேன்
வெறிகமழ் சடைய னப்பன்
விண்ணவர் நண்ண மாட்டாச்
செறிதரு கழல்க ளேத்திச்
சிறந்தினி திருக்க மாட்டா
அறிவிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே.

---

தாள தாமரை - திருவடிகளாகிற தாமரை. ஆளலாதவர் - ஆட்படாதவர்.

7. தகைவிலா - தடுக்கமுடியாத. முகை - மொட்டு. அகம் - மனம்.

8. தறி - யானைகட்டுகிற கம்பம். களிறு - ஆண் யானை. உழுவை - புலி. வெறி - மணம்.

522 மஞ்சுலாம் உருமும் அஞ்சேன்
மன்னரோ டுறவும் அஞ்சேன்
நஞ்சமே யமுத மாக்கும்
நம்பிரான் எம்பி ரானாய்ச்
செஞ்செவே யாண்டு கொண்டான்
திருமுண்டந் தீட்ட மாட்டா
தஞ்சுவா ரவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 9

523 கோணிலா வாளி யஞ்சேன்
கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்
நீணிலா அணியி னானை
நினைந்துநைந் துருகி நெக்கு
வாணிலாங் கண்கள் சோர
வாழ்த்திநின் றேத்த மாட்டா
ஆணலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சு மாறே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. மஞ்சு - மேகம். உரும் - இடி. அஞ்சத்தக்கவற்றுள் மன்னரோடு உறவும் ஒன்றாக அடிகள் கூறுமாறு காண்க. செஞ்ச - செவ்வையாக. திரு - திருநீறு. முண்டம் - நெற்றி.

10. கோள் நிலா வாளி - உயிரைக் கொள்ளைகொள்ளும் அம்பு. கூற்றுவன் - இயமன். இறைவனைவாழ்த்தி வணங்காதவர்கள் ஆண்மையற்றவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

உ

சிவமயம்

# 36. திருப்பாண்டிப்பதிகம்

[சிவானந்த விளைவு]

*திருப்பெருந்துறையில் அருளியது*

**[தென்பாண்டி நாட்டானாகிய சிவபெருமான் குதிரைமேல் அழகராக எழுந்தருளிவந்து ஆட்கொண்ட அருமைப்பாட்டினை வியந்து திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருந்த காலத்துப் பாண்டிப்பதிகமாகிய இதனை அடிகளார் அருளிச் செய்தார்.]**

**கட்டளைக் கலித்துறை**

*திருச்சிற்றம்பலம்*

**524** பருவரை மங்கைதன் பங்கரைப்
பாண்டியற் காரமுதாம்
ஒருவரை யொன்றுமி லாதவ
ரைக்கழற் போதிறைஞ்சித்
தெரிவர நின்றுருக் கிப்பரி
மேற்கொண்ட சேவகனார்
ஒருவரை யன்றி யுருவறி
யாதென்றன் உள்ளமதே. 1

---

**1.** பருவரை - பெரியமலையாகிய இமயம். பாண்டியற்கு ஆரமுதாம் ஒருவர் - பாண்டியமன்னனுக்குக் குலதெய்வமாகிய ஒருவர். ஒன்றும் இலாதவர் - உருவம் குணம் முதலிய ஒன்றும் இல்லாதவர்.

525 சதுரை மறந்தறி மால்கொள்வர்
சார்ந்தவர் சாற்றிச்சொன்னோம்
கதிரை மறைத்தன்ன சோதி
கழுக்கடை கைப்பிடித்துக்
குதிரையின் மேல்வந்து கூடிடு
மேற்குடி கேடுகண்டீர்
மதுரையர் மன்னன் மறுபிறப்
போட மறித்திடுமே 2

526 நீரின்ப வெள்ளத்துள் நீந்திக்
குளிக்கின்ற நெஞ்சங்கொண்டீர்
பாரின்ப வெள்ளங் கொளப்பரி
மேற்கொண்ட பாண்டியனார்
ஓரின்ப வெள்ளத் துருக்கொண்டு
தொண்டரை யுள்ளங்கொண்டார்
பேரின்ப வெள்ளத்துட் பெய்கழ
லேசென்று பேணுமினே. 3

527 செறியும் பிறவிக்கு நல்லவர்
செல்லன்மின் தென்னனன்னாட்
டிறைவன் கிளர்கின்ற காலமிக்
காலமெக் காலத்துள்ளும்

---

2. சதுர் - சாமர்த்தியம். அறிமால் - ஞானப்பித்து. கதிரை மறைத்தன்ன சோதி - பேரொளியால் சூரியனுடைய கதிர்களும் ஒளி இல்லையாம்படிசெய்த சோதிவடிவன். கழுக்கடை - சூலம். குடிகேடு - குடியின்கட் பிறத்தலின் அழிவு.

3. பார் - பூமி. உள்ளம் கொண்டார் - திருவுள்ளத்தில் எண்ணினார்; உள்ளம் கவர்ந்தார் எனினும் ஆம்.

அறிவொண் கதிர்வா ளுறைகழித்
தானந்த மாக்கடவி
எறியும் பிறப்பை யெதிர்ந்தார்
புரள இருநிலத்தே. 4

528 காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே. 5

529 ஈண்டிய மாயா விருள்கெட
எப்பொரு ளும்விளங்கத்
தூண்டிய சோதியை மீனவ
னுஞ்சொல்ல வல்லனல்லன்

---

4. நல்லவர் - நல்லவர்களே. செறியும் - இடைவிடாது நெருங்கிய. கிளர்கின்றகாலம் - விளக்கத்தோடு வெளிவருகின்ற காலம். அறிவு ஒண் கதிர்வாள் - ஞானவாள். ஆனந்தம் மா கடவி - ஆனந்தமாகிய குதிரையைச் செலுத்தி. எறியும் பிறப்பை - மேன்மேலும் நெருங்கிவருகின்ற பிறப்பை.

5. காலம் உண்டாகவே - நல்லகாலம் கிடைத்தபோதே. ஞாலம் உண்டான் - பூமியை விழுங்கிய திருமால். நண்ணரிய - அணுகவும் முடியாத. மூலபண்டாரம் - சேமநிதி.

வேண்டிய போதே விலக்கிலை
வாய்தல் விரும்புமின்றாள்
பாண்டிய னாரருள் செய்கின்ற
முத்திப் பரிசிதுவே. 6

530 மாய வனப்பரி மேல்கொண்டு
மற்றவர் கைக்கொளலும்
போயறு மிப்பிறப் பென்னும்
பகைகள் புகுந்தவருக்
காய வரும்பெருஞ் சீருடைத்
தன்னரு ளேயருளும்
சேய நெடுங்கொடைத் தென்னவன்
சேவடி சேர்மின்களே. 7

531 அழிவின்றி நின்றதொ ரானந்த
வெள்ளத் திடையழுத்திக்
கழிவில் கருணையைக் காட்டிக்
கடிய வினையகற்றிப்
பழமலம் பற்றறுத் தாண்டவன்
பாண்டிப் பெரும்பதமே
முழுதுல குந்தரு வான்கொடை
யேசென்று முந்துமினே. 8

---

6. எப்பொருளும் - உயிரும் மனமும் இறையொளியும் ஆகிய எல்லாப்பொருளும். மீனவன் - பாண்டியன். ஐவாய்தல் - ஐந்து வாயில்களாகிய பொறிகள்.

7. மாயவனப்பரி - மாயமாகிய காட்டிலுள்ள குதிரைகள். இப்பிறப்பு போய் அறும் - இந்தப் பிறவி நீங்கும்.

8. கழிவில் கருணை - என்றைக்கும் நீங்காத கருணை. பழமலம் - அனாதியே பந்தித்துநின்ற ஆணவமலம்.

532 விரவிய தீவினை மேலைப்
பிறப்புமுந் நீர்கடக்கப்
பரவிய அன்பரை யென்புருக்
கும்பரம் பாண்டியனார்
புரவியின் மேல்வரப் புந்திகொ
ளப்பட்ட பூங்கொடியார்
மரவியன் மேல்கொண்டு தம்மையுந்
தாமறி யார்மறந்தே. 9

533 கூற்றைவென் றாங்கைவர் கோக்களை
யும்வென் றிருந்தழகால்
வீற்றிருந் தான்பெருந் தேவியுந்
தானுமோர் மீனவன்பால்
ஏற்றுவந் தாருயி ருண்ட
திறலொற்றைச் சேவகனே
தேற்றமி லாதவர் சேவடி
சிக்கெனச் சேர்மின்களே. 10

திருச்சிற்றம்பலம்

---

9. விரவிய - கலந்த. பிறப்பு முந்நீர் - பிறவியாகிற கடல். புரவி - குதிரை. புந்தி கொளப்பட்ட பூங்கொடியார் - அறிவு கவரப் பட்ட பெண்கள். மர இயல் மேல் கொண்டு - மரத்தின் தன்மை அடைந்து.

10. கூற்று - இயமன். ஐவர் கோ - ஐந்து இந்திரியங்களாகிற அரசர்கள். மீனவன் - பாண்டியன். ஆர் உயிர் உண்ட திறல் - ஆன்ம போதத்தை அடக்கிக்கொண்ட வன்மை. தேற்றம் இலாதவர் - தெளிவற்றவர்கள். சிக்கென - உறுதியாக.

உ

சிவமயம்

# 37. பிடித்தபத்து

## [முத்திக்கலப்புரைத்தல்]

*திருத்தோணிபுரத்தில் அருளியது*

[மதுரையிலிருந்து குருமூர்த்தியின் ஆணைப்படி பல தலங்களையும் வணங்கிவருகின்ற வாதவூரடிகள், சீகாழித் தலத்தைவந்தடைந்தார்கள். அங்கே மலையைப்போல விளங்குகின்ற கோபுரவாயில்களையெல்லாம் கடந்து உட்புகுந்து கயிலையைப்போலக் காட்சிவழங்குகின்ற திருத்தோணிபுரத்தை வணங்குகின்றபோது, தில்லையம்பலத்துத் திருக்கூத்தாடுகின்ற குஞ்சிதபாதத்தின் நினைவுவர, அதனை இறுகப்பிடித்த எண்ணத்தராய்த் திருத்தோணிபுரத்தீசன் முன்னின்று பிடித்த பத்தாகிய இதனை அருளிச்செய்தார்.]

**ஆசிரிய விருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**534** உம்பர்கட் கரசே யொழிவற நிறைந்த
யோகமே ஊற்றையேன் றனக்கு
வம்பெனப் பழுத்தென் குடிமுழு தாண்டு
வாழ்வற வாழ்வித்த மருந்தே

செம்பொருட் டுணிவே சீருடைக் கழலே
செல்வமே சிவபெரு மானே
எம்பொருட் டுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 1

535 விடைவிடா துகந்த விண்ணவர் கோவே
வினையனே னுடையமெய்ப் பொருளே
முடைவிடா தடியேன் மூத்தற மண்ணாய்
முழுப்புழுக் குரம்பையிற் கிடந்து
கடைபடா வண்ணங் காத்தெனை யாண்ட
கடவுளே கருணைமா கடலே
இடைவிடா துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 2

536 அம்மையே யப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்தவா ரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்
புழுத்தலைப் புலையனேன் றனக்குச்

---

1. உம்பர் - தேவர்கள். ஒழிவு அற நிறைந்த - நீக்கமற எங்கும் வியாபித்த. ஊற்றையேன் - அழுக்குடைய யான். வம்பு - புதுமை. வாழ்வு அற - இவ்வுலகவாழ்வு நீங்க; எல்லாவகையான வாழ்விலும் நீங்க என்றுமாம். செம்பொருள் - ஞானநூல்களால் துணியப்பட்ட பொருள்.

2. விடை - இடபம். முடை விடாது - புலால் மணம் விடாமல். அற - மிகவும். முழுப் புழுக்குரம்பை - முழுவதும் புழுவினால் ஆகிய உடல். கடைபடாவண்ணம் - கீழாகாதவண்ணம்.

செம்மையே யாய சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 3

537 அருளுடைச் சுடரே அளிந்ததோர் கனியே
பெருந்திறல் அருந்தவர்க் கரசே
பொருளுடைக் கலையே புகழ்ச்சியைக் கடந்த
போகமே யோகத்தின் பொலிவே
தெருளிடத் தடியார் சிந்தையுட் புகுந்த
செல்வமே சிவபெரு மானே
இருளிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 4

---

3. அன்பினில் விளைந்த ஆர் அமுது - அன்பாகிய பாற்கடலில் விளைந்த பெறுதற்கரிய அமுதம். பொய்ம்மை-பயனற்ற காரியங்கள். புழுத்து அலை புலையனேன் - புழுத்து அலைகின்ற இழிதகைமையையுடையேன்; புழுத்த தலையையுடையேன் என்றுமாம். செம்மை - நேர்மை.

4. பெருந்திறல் அருந்தவர் - மிக்க வலிமையையுடைய முனிவர்கள். பொருள் உடைக் கலை - மெய்ப்பொருளை உடைய சிவஞானக் கலை. தெருள் - தெளிவு. இருளிடத்து - அறியாமை நிறைந்த இவ்விடத்து. தவர் அருந்தவர் திறலருந்தவர் பெருந்திறல் அருந்தவர் எனப் பிரித்துக் கூட்டி முறையே சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நால்வகை நிலையில் உள்ளாரை உணர்த்திற்று என்பாரும் உளர்.

538 ஒப்புனக் கில்லா வொருவனே அடியேன்
உள்ளத்து ளொளிர்கின்ற வொளியே
மெய்ப்பத மறியா வீறிலி யேற்கு
விழுமிய தளித்ததோர் அன்பே
செப்புதற் கரிய செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
எய்ப்பிடத் துன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 5

539 அறவையேன் மனமே கோயிலாக் கொண்டாண்
டளவிலா ஆனந்தம் அருளிப்
பிறவிவே ரறுத்தென் குடிமுழு தாண்ட
பிஞ்ஞகா பெரியவெம் பொருளே
திறவிலே கண்ட காட்சியே அடியேன்
செல்வமே சிவபெரு மானே
இறவிலே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 6

---

5. வீறு இலியேற்கு - பெருமையில்லாத எனக்கு. விழுமியது - சிறந்த பதம்; முத்திப்பேறு. எய்ப்பு - இளைப்பு.

6. அறவையேன் - ஆதரவற்றவன்; யாதொரு கதியுமில்லாத வன் எனவுமாம். பிஞ்ஞகா - சடாமுடியுடையவனே. திறவிலே - பகிரங்கத்திலே. இறவு - இறுதி.

540 பாசவே ரறுக்கும் பழம்பொருள் தன்னைப்
பற்றுமா றடியனேற் கருளிப்
பூசனை யுகந்தென் சிந்தையுட் புகுந்து
பூங்கழல் காட்டிய பொருளே
தேசுடை விளக்கே செழுஞ்சுடர் மூர்த்தீ
செல்வமே சிவபெரு மானே
ஈசனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 7

541 அத்தனே அண்ட ரண்டமாய் நின்ற
ஆதியே யாதுமீ றில்லாச்
சித்தனே பத்தர் சிக்கெனப் பிடித்த
செல்வமே சிவபெரு மானே
பித்தனே யெல்லா வுயிருமாய்த் தழைத்துப்
பிழைத்தவை யல்லையாய் நிற்கும்
எத்தனே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 8

---

7. தேசு - ஒளி. சிக்கென - உறுதியாக.

8. அண்டர் - உலகத்திலுள்ள உயிர்கள். சித்தன் - ஞான வடிவினன். எத்தன் - உபாயமுடையவன்.

542 பாணிீனத் தூட்டுந் தாயினுஞ் சாலப்
பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை யுருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 9

543 புன்புலால் யாக்கை புரைபுரை கனியப்
பொன்னெடுங் கோயிலாப் புகுந்தென்
என்பெலாம் உருக்கி எளியையா யாண்ட
ஈசனே மாசிலா மணியே
துன்பமே பிறப்பே யிறப்போடு மயக்காந்
தொடக்கெலாம் அறுத்தநற் சோதீ
இன்பமே யுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவ தினியே. 10

திருச்சிற்றம்பலம்

---

9. உலப்பு இலா - அழிவில்லாத. புறம்புறம்திரிந்த - காக்கும் பொருட்டுத் தாயைப்போல நான்கு பக்கங்களிலும் பிரியாமல் பின்னால் ஓடி அங்கும் இங்குமாகச் சுற்றித்திரிந்த.

10. யாக்கை - உடம்பு. புரை புரை கனிய - உட்டுளைகள் தோறும் உருக. தொடக்கு - கட்டு.

உ

சிவமயம்

# 38. திருவேசறவு

## [சுட்டறிவொழித்தல்]

*திருப்பெருந்துறையில் அருளியது*

**[வாதவூரடிகள், திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும்போது இறைவன் தமக்காக நரிகளையெல்லாம் குதிரையாக்கி ஆட்கொண்டவிதத்தை எண்ணி எண்ணி ஏசறுகின்றார்.]**

**கொச்சகக் கலிப்பா**

*திருச்சிற்றம்பலம்.*

**544** இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த்தென் என்புருக்கிக்
கரும்புதரு சுவையெனக்குக் காட்டினையுன் கழலிணைகள்
ஒருங்குதிரை யுலவுசடை யுடையானே நரிகளெல்லாம்
பெருங்குதிரை யாக்கியவா றன்றேயுன் பேரருளே. **1**

---

**1.** இரும்புதருமனத்தேனை - எளிதில் உருகாமையும் வன்மையும் ஒளியின்மையும் நோக்கி இரும்பையொத்த மனத்தையுடைய என்னை என்றார். உன் கழலிணைகள் கரும்புதரும் சுவையாகக் காட்டினை எனப் பொருள்காண்க. ஒருங்கு திரை உலவு சடை - ஒருசேர அலைகளையுடைய கங்கை உலாவுகின்ற சடை.

545 பண்ணார்ந்த மொழிமங்கை பங்காநின் ஆளானார்க்
குண்ணார்ந்த ஆரமுதே யுடையானே யடியேனை
மண்ணார்ந்த பிறப்பறுத்திட் டாள்வாய் நீவாவென்னக்
கண்ணார வுய்ந்தவா றன்றேயுன் கழல்கண்டே. 2

546 ஆதமிலி யான்பிறப் பிறப்பென்னும் அருநரகில்
ஆர்தமரும் இன்றியே அழுந்துவேற் காவாவென்
றோதமலி நஞ்சுண்ட வுடையானே அடியேற்குன்
பாதமலர் காட்டியவா றன்றேயெம் பரம்பரனே. 3

547 பச்சைத்தா லரவாட்ட படர்சடையாய் பாதமலர்
உச்சத்தார் பெருமானே அடியேனை யுய்யக்கொண்
டெச்சத்தார் சிறுதெய்வம் ஏத்தாதே அச்சோவென்
சித்தத்தா றுய்ந்தவா றன்றேயுன் திறநினைந்தே. 4

---

2. உண் ஆர்ந்த ஆர் அமுதே - உண்ணுதலார்ந்த அமுதே. மண் ஆர்ந்த - மண்ணிற் பொருந்திய.

3. ஆதம் இலி - ஆதரவு அற்றவன். ஆர் தமரும் இன்றியே - தம்மைச்சேர்ந்த உறவினர் யாருமில்லாமல். ஆ ஆ என்பது இரக்கக் குறிப்பிடைச்சொல். ஓதம் - கடல்.

4. பச்சை தால் அரவு - பசுமையான நாக்கினையுடைய பாம்பு. உச்சத்தார் - உயர்வுள்ள தேவர்கள். எச்சத்தார் - குற்றம்பொருந்திய வினைச்சேடமுடையர். சித்தத்தாறு - மனத்தின்படி.

548 கற்றறியேன் கலைஞானம் கசிந்துருகேன் ஆயிடினும்
மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்
துற்றிருமாந் திருந்தேனெம்பெருமானே அடியேற்குப்
பொற்றவிசுநாய்க்கிடுமா றன்றேநின்பொன்னருளே. 5

549 பஞ்சாய அடிமடவார் கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நஞ்சாய துயர்கூர நடுங்குவேன் நின்னருளால்
உய்ஞ்சேனெம் பெருமானே யுடையானே அடியேனை
அஞ்சேலென் றாண்டவா றன்றேயம் பலத்தமுதே. 6

550 என்பாலைப் பிறப்பறுத்திங் கிமையவர்க்கும் [அறியவொண்ணாத்
தென்பாலைத்திருப்பெருந்துறையுறையுஞ்சிவபெருமான்
அன்பால்நீ அகநெகவே புகுந்தருளி யாட்கொண்ட
தென்பாலே நோக்கியவா றன்றேயெம்பெருமானே. 7

---

5. வாக்கு இயலால் - வாக்கின் தன்மையால். பொற்றவிசு - பொன்னாலாகிய சிம்மாசனம்.

6. பஞ்சு ஆய - செம்பஞ்சால் நிறமுடையதான; பஞ்சு போன்ற என்றுமாம். உய்ஞ்சேன் - பிழைத்தேன்.

7. என்பால் ஐபிறப்பு-என்னிடத்ததாகிய பிறப்பு; ஐ சாரியை. அகம் நெக - மனம் கனிய. என்பாலே நோக்கியவாறு - என்னிடம் அருள்நோக்கம் செய்தபடி.

551 மூத்தானே மூவாத முதலானே முடிவில்லா
ஓத்தானே பொருளானே உண்மையுமாய்
[இன்மையுமாய்ப்
பூத்தானே புகுந்திங்குப் புரள்வேனைக் கருணையினால்
பேர்த்தேநீ யாண்டவா றன்றேயெம் பெருமானே. 8

552 மருவினிய மலர்ப்பாத மனத்தில்வளர்ந் துள்ளுருகத்
தெருவுதொறு மிகவலறிச் சிவபெருமான்என்றேத்திப்
பருகியநின் பரங்கருணைத் தடங்கடலிற் படிவாமா
றருளெனக்கிங் கிடைமருதே யிடங்கொண்ட
[அம்மானே. 9

553 நானேயோ தவஞ்செய்தேன்சிவாயநமஎனப்பெற்றேன்
தேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந்தெனதுள்ளம்புகுந்தடியேற்கருள்செய்தான்
ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே
[வெறுத்திடவே. 10

திருச்சிற்றம்பலம்.

---

8. மூவாத முதலானே - மூத்தவனாயிருந்தும் அருளுடலால் மூப்படையாது எல்லாவற்றிற்கும் முதலானவனே. ஓத்தானே - வேதவடிவினனே. பூத்தானே - தோற்றுவித்தவனே. பேர்த்து - இடம்விட்டு நகரச்செய்து.

9. மருவ இனிய - அடைதற்கு இனிமையான. படிவாமாறு - தோயும்வண்ணம்.

10. சிவாயநம - சூக்கும பஞ்சாட்சரம். ஊன் ஆரும் உயிர் வாழ்க்கை - உடலோடுகூடியுயிர்வாழும் வாழ்க்கை. ஒறுத்து வெறுத்திட அன்று - விரதாதிகளால் ஒறுத்து வெறுப்பதற்காகவல்ல.

உ

சிவமயம்

# 39. திருப்புலம்பல்

## [சிவானந்தமுதிர்வு]

*திருவாரூரில் அருளியது*

[தில்லைக்கு வழிக்கொண்டுவருகின்ற திருவாதவூரர் இடையிலே திருவாரூரையடைந்து இறைவன் திருவடி காட்டும் கருணைத்திறம் காலங்கடத்தலைக் கருதித் திருப் புலம்பலாகிய இதனை அருளிச்செய்கின்றார்.]

**கொச்சகக் கலிப்பா**

*திருச்சிற்றம்பலம்*

**554** பூங்கமலத் தயனொடுமால் அறியாத நெறியானே
கோங்கலர்சேர் குவிமுலையாள் கூறாவெண் ணீறாடீ
ஓங்கெயில்சூழ் திருவாரூ ருடையானே அடியேனின்
பூங்கழல்க ளவையல்லா தெவையாதும் புகலேனே. **1**

---

1. அயனொடுமால் அறியாத நெறியானே எனத் தந்தையறிவு போல மகனறிவு இருந்தது என்றதை விளக்கியவாறு. கோங்கலர் - கோங்கம் பூ. எயில் - மதில். யாதும் - ஒருசிறிதும்.

555 சடையானே தழலாடீ தயங்குமூ விலைச்சூலப்
படையானே பரஞ்சோதீ பசுபதீ மழவெள்ளை
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாய்
[அடியேனுன்
உடையானே உனையல்லா துறுதுணைமற் றறியேனே. 2

556 உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன்
[பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையும்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே. 3

திருச்சிற்றம்பலம்.

---

2. தயங்கு - விளங்குகின்ற. மழ - இளமையான.

3. வேண்டேன் - விரும்பேன். கற்பனவும் இனி அமையும் என்றார் கல்வி மேலும் மேலும் அமைதியின்மையாகிய அல்லலைக் கொடுத்தலின். கற்றா - கன்றோடு கூடிய பசு.

உ

சிவமயம்.

# 40. குலாப்பத்து

## [அநுபவமிடையீடுபடாமை]

*திருத்தில்லையில் அருளியது*

**[அடிகள் தில்லைக்கு எழுந்தருளியபோது அதன் விளக்கத்தைக் கண்டு அநுபவம் இடையீடுபடாமையால் இப்பத்தினை அருளிச்செய்கின்றார்.]**

**கொச்சகக் கலிப்பா**

*திருச்சிற்றம்பலம்.*

**557** ஓடுங் கவந்தியுமே உறவென்றிட் டுள்கசிந்து
தேடும் பொருளுஞ் சிவன்கழலே யெனத்தெளிந்து
கூடும் உயிருங் குமண்டையிடக் குனித்தடியேன்
ஆடுங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 1

---

**1.** ஓடு - திருவோடு. கவந்தி - கோவணம். உள் - மனம். தேடும் பொருள் - தேடப்படுகின்ற திரவியம். குமண்டை - ஒருவகைக்கூத்து. குலாத்தில்லை - விளங்குகின்ற தில்லை.

558 துடியே ரிடுகிடைத் தூய்மொழியார் தோள்நசையால்
செடியேறு தீமைகள் எத்தனையுஞ் செய்திடினும்
முடியேன் பிறவேன் எனைத்தனதாள் முயங்குவித்த
அடியேன்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. 2

559 என்புள் ளுருக்கி இருவினையை யீடழித்துத்
துன்பங் களைந்து துவந்துவங்கள் தூய்மைசெய்து
முன்புள்ள வற்றை முழுதழிய வுள்புகுந்த
அன்பின்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. 3

560 குறியும் நெறியும் குணமுமிலார் குழாங்கடமைப்
பிறியும் மனத்தார் பிறிவரிய பெற்றியனைச்-
செறியுங் கருத்தில் உருத்தமுதாஞ் சிவபதத்தை
அறியுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே. 4

---

2. துடி ஏர் இடுகு இடை - உடுக்கையையொத்த சிறிய இடை. நசை - விருப்பம். செடி ஏறு தீமைகள் - பாவம் மிகுதற்குக் காரணமாகிய தீயகாரியங்கள். முடியேன் - அழியேன்.

3. ஈடு - பெருமை. துவந்துவங்கள் - பாசக்கட்டுக்கள். முன்பு உள்ளவற்றை - சென்ற பல பிறவிகளில் ஈட்டிச் சேர்க்கப் பட்ட வினைகளை.

4. குறி - அடையாளம். குணம் - மூன்று குணங்கள். உருத்து - வடிவந்தாங்கி.

561 பேரும் குணமும் பிணிப்புறுமிப் பிறவிதனைத்
தூரும் பரிசு துரிசறுத்துத் தொண்டரெல்லாம்
சேரும் வகையாற் சிவன்கருணைத் தேன்பருகி
ஆருங் குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே. 5

562 கொம்பி லரும்பாய்க் குவிமலராய்க் காயாகி
வம்பு பழுத்துடலம் மாண்டிங்ஙன் போகாமே
நம்புமென் சிந்தை நணுகும்வண்ண நானணுகும்
அம்பொன்குலாத்தில்லை யாண்டானைக் கொண்டன்றே

563 மதிக்குந் திறலுடைய வல்லரக்கன் தோள்நெரிய
மிதிக்குந் திருவடி யென்றலைமேல் வீற்றிருப்பக்
கதிக்கும் பசுபாசம் ஒன்றுமிலோம் எனக்களித்திங்
கதிர்க்குங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே()

564 இடக்குங் கருமுருட் டேனப்பின் கானகத்தே
நடக்குந் திருவடி யென்றலைமேல் நட்டமையால்

---

5. பிணிப்புறும் - கட்டப்படுகின்ற. தூரும் பரிசு - தூர்ந்து போம் வகையில். துரிசு - குற்றம்.

6. வம்பு - புதுமை.

7. மிதிக்கும் - எல்லாவற்றையும்நசுக்கக்கூடிய. வல்லரக்கன் - இராவணன். கதிக்கும் - நடக்கின்ற.

கடக்குந் திறலவர் கண்டகர் தம் வல்லாட்டை
அடக்குங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.8

565 பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேற்குக்
கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டுத்
தாட்செய்ய தாமரைச் சைவனுக்கென் புன்றலையால்
ஆட்செய் குலாத்தில்லை யாண்டானைக்
[கொண்டன்றே. 9

566 கொம்மை வரிமுலைக் கொம்பனையாள் கூறனுக்குச்
செம்மை மனத்தால் திருப்பணிகள் செய்வேனுக்
கிம்மை தரும்பயன் இத்தனையும் ஈங்கொழிக்கும்
அம்மை குலாத்தில்லை யாண்டானைக்
[கொண்டன்றே. 10

திருச்சிற்றம்பலம்.

---

8. இடக்கும் - தோண்டுகின்ற. முருட்டு ஏனம் - அருச்சுனனால் வெருட்டப்பட்ட வலிய பன்றி. கண்டகர் - கொடியவர்கள். வல்லாட்டை - வலிய விளையாட்டுக்களை.

9. பாழ் செய் விளாவி - பாழ்நிலத்தை உழுது. கிழியீடு - பொன் முடிப்பு. சைவன் - சிவன்.

10. கொம்பனையாள் - உமாதேவி. ஈங்கு ஒழிக்கும்-இங்கேயே தங்கச்செய்யும்.

உ
சிவமயம்

# 41. அற்புதப்பத்து

## [அநுபவமாற்றாமை]

*திருப்பெருந்துறையில் அருளியது*

**[திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும்நாட்களில் ஒருநாள் உலகவர் வாழ்க்கைக்கடலில் அகப்பட்டு, கலங்குவதைக்கண்டு தான் அதனின்றும் தப்பும்படியாகத் திருவருள் தந்த சிவபெருமான் கருணைக்கு வியந்து அற்புதப்பத்தாகிய இதனை அருளிச்செய்கின்றார்.]**

**ஆசிரிய விருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**567** *மைய லாயிந்த மண்ணிடை வாழ்வெனும்*
*ஆழியுள் அகப்பட்டுத்*
*தைய லாரெனுஞ் சுழித்தலைப் பட்டுநான்*
*தலைதடு மாறாமே*
*பொய்யெ லாம்விடத் திருவருள் தந்துதன்*
*பொன்னடி யிணைகாட்டி*
*மெய்ய னாய்வெளி காட்டிமுன் னின்றதோர்*
*அற்புதம் விளம்பேனே.* 1

---

**1.** *மையல் - மயக்கம். தையலார் - பெண்கள். பொய்யெலாம் விட - பொய்யான உலகப்பற்றனைத்தும் விலக.*

568 ஏய்ந்த மாமல ரிட்டுமுட் டாததோர்
இயல்பொடும் வணங்காதே
சாந்த மார்முலைத் தையனல் லாரொடும்
தலைதடு மாறாகிப்
போந்தி யான்றுயர் புகாவணம் அருள்செய்து
பொற்கழ லிணைகாட்டி
வேந்த னாய்வெளி யேயென்முன் நின்றதோர்
அற்புதம் விளம்பேனே. 2

569 நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து
நானென தெனுமாயக்
கடித்த வாயிலே நின்றுமுன் வினைமிகக்
கழறியே திரிவேனைப்
பிடித்து முன்னின்றப் பெருமறை தேடிய
அரும்பொருள் அடியேனை
அடித்த டித்துவக் காரமுன் தீற்றிய
அற்புதம் அறியேனே. 3

2. ஏய்ந்த - பொருந்திய. சாந்தம் - சந்தனம். தலைதடுமாறாகி - கலந்து மயங்கி.

3. நான் எனது என்னும் மாயம் கடித்த வாயிலே - அகப்பற்று புறப்பற்று என்னும் மாயமாகிய பாம்புகள் கடித்த இடத்தில். அரும்பொருள் என்றது சிவபெருமானை. அக்காரம் - சர்க்கரை. தீற்றிய - உண்பித்த.

570 பொருந்து மிப்பிறப் பிறப்பிவை நினையாது
பொய்களே புகன்றுபோய்க்
கருங்கு ழலினர் கண்களா லேறுண்டு
கலங்கியே கிடப்பேனைத்
திருந்து சேவடிச் சிலம்பவை சிலம்பிடத்
திருவொடும் அகலாதே
அருந்து ணைவனா யாண்டுகொண்
டருளிய அற்புதம் அறியேனே. 4

571 மாடுஞ் சுற்றமும் மற்றுள போகமும்
மங்கையர் தம்மோடும்
கூடி யங்குள குணங்களா லேறுண்டு
குலாவியே திரிவேனை
வீடு தந்தென்றன் வெந்தொழில் வீட்டிட
மென்மலர்க் கழல்காட்டி
ஆடு வித்தென தகம்புகுந் தாண்டதோர்
அற்புதம் அறியேனே. 5

572 வணங்கு மிப்பிறப் பிறப்பிவை நினையாது
மங்கையர் தம்மோடும்
பிணைந்து வாயிதழ்ப் பெருவெள்ளத் தழுந்திநான்
பித்தனாய்த் திரிவேனைக்

---

4. பொருந்தும் - வினைவயத்தால் மாறி மாறி வந்து பொருந்துகின்ற. கண்களால் ஏறுண்டு - கண்களால் தாக்கப்பெற்று. சிலம்பு அவை - பரநாதச் சிலம்பாகிய அவைகள். திரு - திருவருள்.

5. மாடு - செல்வம். ஏறுண்டு - தாக்கப்பெற்று. குலாவி - விளங்கி.

குணங்க ளுங்குறி களுமிலாக் குணக்கடல்
கோமளத் தொடுங்கூடி
அணைந்து வந்தெனை யாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 6

573 இப்பி றப்பினில் இணைமலர் கொய்துநான்
இயல்பொடஞ் செழுத்தோதித்
தப்பி லாதுபொற் கழல்களுக் கிடாதுநான்
தடமுலை யார்தங்கள்
மைப்பு லாங்கண்ணால் ஏறுண்டு கிடப்பேனை
மலரடி யிணைகாட்டி
அப்பன் என்னைவந் தாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 7

574 ஊச லாட்டுமிவ் வுடலுயி ராயின
இருவினை யறுத்தென்னை
ஓசையா லுணர் வார்க்குணர் வரியவன்
உணர்வுதந் தொளியாக்கிப்
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன்
பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக் கூட்டிய
அற்புதம் அறியேனே. 8

---

6. பிணைந்து - கூடி. வணங்கும் - வளைந்துவரும். கோமளம் - அழகு; ஈண்டு அழகிய சொக்கரைக் காட்டிற்று.

7. இணைமலர் - பொருத்தமான பூக்கள். மைப்பு உலாம் கண் - கருமை தவழ்ந்த கண்.

8. ஊசலாட்டும் - ஊஞ்சல்போல் ஆட்டுகின்ற. ஓசையால் - நூலறிவாகிய பாசஞானத்தால்.

575 பொச்சை யானவிப் பிறவியிற் கிடந்துநான்
புழுத்தலை நாய்போல
இச்சை யாயின ஏழையர்க் கேசெய்தங்
கிணங்கியே திரிவேனை
இச்ச கத்தரி யயனுமெட் டாததன்
விரைமலர்க் கழல்காட்டி
அச்சன் என்னையும் ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 9

576 செறியும் இப்பிறப் பிறப்பிவை நினையாது
செறிகுழ லார்செய்யும்
கிறியும் கீழ்மையும் கெண்டையங் கண்களும்
உன்னியே கிடப்பேனை
இறைவன் எம்பிரான் எல்லையில் லாததன்
இணைமலர்க் கழல்காட்டி
அறிவு தந்தெனை யாண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. பொச்சை - காடு. ஏழையர் - பெண்கள். சகம் - உலகம். அச்சன் - தந்தை; இது மலையாள வழக்கு.

10. கிறி - வஞ்சனை. உன்னி - எண்ணி. எல்லையில்லாத கழல் - திருவடிப்போகமாகிய முத்திக்கு எல்லையில்லாமையின் இங்ஙனம் கூறினர்.

உ

சிவமயம்.

# 42. சென்னிப்பத்து

## [சிவவிளைவு]

*திருப்பெருந்துறையில் அருளியது*

**[குருவாகவந்து திருவடிசூட்டியதைப் பாராட்டி, அது தன்தலையில் விளங்குவதைச் சென்னிப்பத்தாகிய இதனால் விளக்குகின்றார்.]**

**ஆசிரிய விருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**577** தேவ தேவன்மெய்ச் சேவகன்
தென்பெ ருந்துறை நாயகன்
மூவ ராலும் அறியொணா
முதலாய ஆனந்த மூர்த்தியான்
யாவ ராயினும் அன்பரன்றி
அறியொ ணாமலர்ச் சோதியான்
தூய மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னிச் சுடருமே. 1

---

**1.** மெய்ச்சேவகன் - உண்மை வீரன். ஆனந்தமூர்த்தி - இன்பமே வடிவானவன். மலர்ச்சோதியான் - பூவின் ஒளிபோன்றவன். மன்னி - நிலைபெற்று. சுடரும் - விளங்கும்.

578 அட்ட மூர்த்தி யழகனின்னமு
தாய ஆனந்த வெள்ளத்தான்
சிட்டன் மெய்ச்சிவ லோகநாயகன்
தென்பெ ருந்துறைச் சேவகன்
மட்டு வார்குழல் மங்கையாளையோர்
பாகம் வைத்த அழகன்றன்
வட்ட மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. 2

579 நங்கை மீரெனை நோக்குமின்நங்கள்
நாத னம்பணி கொண்டவன்
தெங்கு சோலைகள் சூழ்பெருந்துறை
மேய சேவகன் நாயகன்
மங்கை மார்கையில் வளையுங்கொண்டெம்
உயிருங் கொண்டெம் பணிகொள்வான்
பொங்கு மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னிப் பொலியுமே. 3

---

2. அட்டமூர்த்தி - மண் புனல் அனல் கால் வான் சூரியன் சந்திரன் இயமான் இந்த எட்டின் வடிவானவன். சிட்டன் - பெரியவன். மட்டு - தேன்.

3. அம்பு அணி கொண்டவன் - அம்பினை அழகுக்காகத் தாங்கியவன்; என்றது ஆயுதங்களைத் தாங்கியும் அவற்றால் வெற்றி காணாமையின். தெங்கு - தென்னை. கையில் வளைகொண்டது எனது என்னும் புறப்பற்றைக் கழற்ற. உயிர்கொண்டது அகப்பற்றைக் கழற்ற.

580 பத்தர் சூழப் பராபரன்
பாரில் வந்துபார்ப் பானெனச்
சித்தர் சூழச் சிவபிரான்
தில்லை மூதூர் நடஞ்செய்வான்
எத்த னாகிவந் தில்புகுந்தெமை
ஆளுங் கொண்டெம் பணிகொள்வான்
வைத்த மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. 4

581 மாய வாழ்க்கையை மெய்யென்றெண்ணி
மதித்தி டாவகை நல்கினான்
வேய தோளுமை பங்கனெங்கள்
திருப்பெ ருந்துறை மேவினான்
காயத் துள்ளமு தூறவூறநீ
கண்டு கொள்ளென்று காட்டிய
சேய மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. 5

582 சித்த மேபுகுந் தெம்மையாட்கொண்டு
தீவி னைகெடுத் துய்யலாம்
பத்தி தந்துதன் பொற்கழற்கணே
பன்மலர் கொய்து சேர்த்தலும்

---

4. பராபரன் - மேலானவற்றிற்கும் மேலானவன். எத்தன் - தந்திரக்காரன்.

5. வேயதோள் - மூங்கிலைபொத்த தோள். காயத்துள் - உடலில்.

முத்தி தந்திந்த மூவுலகுக்கும்
அப்பு றத்தெமை வைத்திடும்
அத்தன் மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. 6

583 பிறவி யென்னுமிக் கடலைநீந்தத்தன்
பேர ருள்தந் தருளினன்
அறவை யென்றடி யார்கடங்கள்
அருட்கு ழாம்புக விட்டுநல்
உறவு செய்தெனை யுய்யக்கொண்ட
பிரான்றன் உண்மைப் பெருக்கமாம்
திறமை காட்டிய சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. 7

584 புழுவி னுற்பொதிந் திடுகுரம்பையிற்
பொய்த னையொழி வித்திடும்
எழில்கொள் சோதியெம் ஈசனெம்பிரான்
என்னு டையப்ப னென்றென்று
தொழுத கையின ராகித்தூய்மலர்க்
கண்க ணீர்மல்குந் தொண்டர்க்கு
வழுவி லாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னி மலருமே. 8

---

6. உய்யலாம் பத்தி தந்து - கடைத்தேறும்வகை அன்பைக் கொடுத்து. முத்திதந்து இந்த எனப்பிரிக்க.

7. பிறவி கடலானமையின் பேருள் புணையாயிற்று. அறவை- துணையற்றவன். திறமை - வல்லமை.

8. குரம்பை - கூடாகிய உடல். பொய் - பொய்யாகிய வாழ்க்கை. வழுவிலா - தவறாத.

585 வம்ப னாய்த்திரி வேனைவாவென்று
வல்வி னைப்பகை மாய்த்திடும்
உம்ப ரானுல கூடறுத்தப்
புறத்த னாய்நின்ற வெம்பிரான்
அன்ப ரானவர்க் கருளிமெய்யடி
யார்கட் கின்பந் தழைத்திடும்
செம்பொன் மாமலர்ச் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. 9

586 முத்த னைமுதற் சோதியைமுக்க
ணப்ப னைமுதல் வித்தினைச்
சித்த னைச்சிவ லோகனைத்திரு
நாமம் பாடித் திரிதரும்
பத்தர் காளிங்கே வம்மினீருங்கள்
பாசந் தீரப் பணிமினோ
சித்த மார்தருஞ் சேவடிக்கணஞ்
சென்னி மன்னித் திகழுமே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. வம்பன் - வீணன். உம்பரான் - தேவன். உலகு ஊடறுத்து- உலகங்களெல்லாவற்றையும் கடந்து.

10. முதல் வித்தினை - எல்லாவற்றிற்கும் முன்னே இருத்தலின் வித்துப் போல்பவனை. பாசம் - அநாதியே பற்றி நிற்கும் ஆணவமலக்கட்டு.

உ
சிவமயம்

# 43. திருவார்த்தை

## [அறிவித்தன்புறுதல்]

திருப்பெருந்துறையில் அருளியது

**[அடிகள் திருப்பெருந்துறையில் தமக்கு இறைவன் அளித்த அருளுபதேச மொழிகளை இப்பத்தால் வியந்து பாராட்டுகின்றார்.]**

**ஆசிரிய விருத்தம்**

திருச்சிற்றம்பலம்

**587** மாதிவர் பாகன் மறைபயின்ற
வாசகன் மாமலர் மேயசோதி
கோதில் பரங்கருணையடியார்
குலாவுநீதி குணமாக நல்கும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்திழிந்
தாதிப் பிரமம் வெளிப்படுத்த
அருளறி வாரெம் பிரானாவாரே. 1

---

1. மாது இவர் பாகன் - உமாதேவிவிரும்பிய இடப்பாகத்தை உடையவன். ஆதிப்பிரமம் - முதன்மையாகிய சிவசொரூபம்.

588 மாலயன் வானவர் கோனும்வந்து
வணங்க அவர்க்கருள் செய்தாசன்
ஞால மதனிடை வந்திழிந்து
நன்னெறி காட்டி நலந்திகழும்
கோல மணியணி மாடநீடு
குலாவும் இடைவை மடநல்லாட்குச்
சீல மிகக்கரு ணையளிக்குந்
திறமறி வாரெம் பிரானாவாரே. 2

589 அணிமுடி யாதி யமரர்கோமான்
ஆனந்தக் கூத்தன் அறுசமயம்
பணிவகை செய்து படவதேறிப்
பாரொடு விண்ணும் பரவியேத்தப்
பிணிகெட நல்கும் பெருந்துறையெம்
பேரரு ளாளன் பெண்பா லுகந்து
மணிவலை கொண்டுவான் மீன்விசிறும்
வகையறி வாரெம் பிரானாவாரே. 3

---

2. கோலம் - அழகு. இடைவை - திருவிடைமருதூர்; மரூஉ மொழி. மட நல்லாள் - அரசி. திருவிடைமருதூரில் வரகுண பாண்டியன் தனது மனைவியை மகாலிங்கமூர்த்திக்கு அர்ப்பணிக்க, அரசன் தீண்டிய கையை விடுத்து ஏனையவற்றை ஏற்று அருள்புரிந் தார் என்பது தலபுராண வரலாறு.

3. அணி முடி ஆதி - அழகிய சடைமுடியையுடைய முதல் வன். படவு - தோணி. பெண்பால் உகந்து - வலைச்சியான உமா தேவியை விரும்பி.

590 வேடுரு வாகி மகேந்திரத்து
மிகுகுறை வானவர் வந்துதன்னைத்
தேட இருந்த சிவபெருமான்
சிந்தனை செய்தடி யோங்களுய்ய
ஆட லமர்ந்த பரிமாவேறி
ஐயன் பெருந்துறை யாதியந்நாள்
ஏடர் களையெங்கும் ஆண்டுகொண்ட
இயல்பறி வாரெம் பிரானாவாரே. 4

591 வந்திமை யோர்கள் வணங்கியேத்த
மாக்கரு ணைக்கட லாயடியார்
பந்தனை விண்டற நல்குமெங்கள்
பரமன் பெருந்துறை யாதியந்நாள்
உந்து திரைக்கட லைக்கடந்தன்
றோங்கு மதிலிலங் கையதனில்
பந்தணை மெல்விர லாட்கருளும்
பரிசறி வாரெம் பிரானாவாரே. 5

592 வேவத் திரிபுரஞ் செற்றவில்லி
வேடுவ னாய்க்கடி நாய்கள்சூழ
ஏவற் செயல்செய்யுந் தேவர்முன்னே
எம்பெரு மான்றான் இயங்குகாட்டில்

---

4. வேடு உருவாகி - வேட்டுவவடிவந்தாங்கி. அடியோங்கள் உய்யச் சிந்தனைசெய்து - எனக்கூட்டுக. ஏடர்கள் - தோழர்கள்.

5. இமையோர் - தேவர்கள். பந்தனை - கட்டு. விண்டு - நீங்கி. உந்து திரை - கரையைநோக்கிச் செல்கின்ற அலை.

ஏவுண்ட பன்றிக்கி ரங்கியீசன்
எந்தை பெருந்துறை யாதியன்று
கேவலங் கேழலாய்ப் பால்கொடுத்த
கிடப்பறி வாரெம் பிரானாவாரே. 6

593 நாத முடையதோர் நற்கமலப்
போதினில் நண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவியேத்த
வொளிவளர் சோதியெம் ஈசன்மன்னும்
போதலர் சோலைப் பெருந்துறையெம்
புண்ணியன் மண்ணிடை வந்துதோன்றிப்
பேதங் கெடுத்தருள் செய்பெருமை
அறியவல் லாரெம் பிரானாவாரே. 7

594 பூவலர் கொன்றைய மாலைமார்பன்
போருகிர் வன்புலி கொன்றவீரன்
மாதுநல் லாளுமை மங்கைபங்கன்
வண்பொழில் சூழ்தென் பெருந்துறைக்கோன்
ஏதில் பெரும்புகழ் எங்களீசன்
இருங்கடல் வாணற்குத் தீயிற்றோன்றும்
ஓவிய மங்கையர் தோள்புணரும்
உருவறி வாரெம் பிரானாவாரே. 8

---

6. வேவ - வெந்தழிய. செற்ற - கோபித்த. கடிநாய் - வேட்டைநாய். ஏ உண்ட பன்றிக்கு - அம்பு தைத்த பன்றிக்கு. கேழல் - பன்றி.

7. நாதம் - ரீம் என்னும் ஒலி. பேதம் கெடுத்து - வேற்றுமை ஞானத்தை விலக்கி; சிவ சீவ பேதத்தை விலக்கி.

8. கொன்றைய மாலை - கொன்றைப்பூவையுடைய மாலை. உகிர் - நகம். புலி தாருகாவனத்து மகரிஷிகளால் எழுப்பப்பெற்ற

595 தூவெள்ளை நீறணி யெம்பெருமான்
சோதி மகேந்திர நாதன்வந்து
தேவர் தொழும்பதம் வைத்தஈசன்
தென்னன் பெருந்துறை யாளியன்று
காதல் பெருகக் கருணைகாட்டித்
தன்கழல் காட்டிக் கசிந்துருகக்
கேதங் கெடுத்தென்னை யாண்டருளும்
கிடப்பறி வாரெம் பிரானாவாரே. 9

596 அங்கணன் எங்கள் அமரர்பெம்மான்
அடியார்க் கமுதன் அவனிவந்த
எங்கள் பிரானிரும் பாசந்தீர
இகபரம் ஆயதோர் இன்பமெய்தச்
சங்கங் கவர்ந்துவண் சாத்தினோடும்
சதுரன் பெருந்துறை யாளியன்று
மங்கையர் மல்கு மதுரைசேர்ந்த
வகையறி வாரெம் பிரானாவாரே. 10

திருச்சிற்றம்பலம்.

---

புலி. கடல்வாணன் - கடலரசனாகிய செம்படவன். ஓவிய மங்கையர்- சித்திரம்போன்ற பெண்ணாகிய உமாதேவியார்.

9. பதம் - பதவி. காதல் பெருக - அன்பு பெருக. கேதம் - துன்பம்.

10. அங்கணன் - அழகிய கண்ணையுடையவன். அவனி - பூமி. இகபரம் - இம்மை மறுமை. சங்கம் - வளை. சாத்து - வணிகர் கூட்டம்; மதுரை சேர்ந்தவகை. வளையல் விற்க மதுரைக்குவந்த வரலாறு.

உ

சிவமயம்

# 44. எண்ணப்பதிகம்

## [ஒழியாவின்பத்துவகை]

திருத்தில்லையில் அருளியது

**[இறைவன் ஆணைப்படி திருத்தில்லையை யடைந்த வாதவூரடிகள், தம்முடைய எண்ணம் திருவருள்காட்டி ஆட்கொள்ளவேண்டியதே என்பதை விளக்க இப்பதிகத்தை ஆக்கியருளுகின்றார்.]**

**ஆசிரிய விருத்தம்**

திருச்சிற்றம்பலம்

**597** பாருரு வாய பிறப்பற வேண்டும்
பத்திமை யும்பெற வேண்டும்
சீருரு வாய சிவபெரு மானே
செங்கமல மலர்போல்
ஆருரு வாயவென் னாரமு தேயுன்
அடியவர் தொகைநடுவே
ஓருரு வாயநின் திருவருள் காட்டி
என்னையும் உய்யக்கொண் டருளே. 1

---

1. பார் - பூமி. சீர் - புகழ். போல் என்பது போலும் என்பதன் திரிபு. ஓர் உருவாய - அனைத்தையும் சிவமாகவே காணக் கூடிய.

598 உரியே னல்லே னுனக்கடிமை
யுன்னைப் பிரிந்திங் கொருபொழுதும்
தரியே னாயே னின்னதென்
றறியேன் சங்கரா கருணையினால்
பெரியோ னொருவன் கண்டுகொ ளென்றுன்
மெய்கழ லடிகாட்டிப்
பிரியே னென்றென் றருளிய வருளும்
பொய்யோ வெங்கள் பெருமானே. 2

599 என்பே யுருக நின்னரு ளளித்துன்
இணைமல ரடிகாட்டி
முன்பே யென்னை யாண்டுகொண்ட
முனிவா முனிவர் முழுமுதலே
இன்பே யருளி யெனையுருக்கி
உயிருண் கின்ற எம்மானே
நண்பே யருளா யென்னுயிர்
நாதா நின்னருள் நாணாமே. 3

600 பத்தில னேனும் பணிந்தில லேனுமுன்
உயர்ந்தபைங் கழல்காணப்
பித்தில னேனும் பிதற்றில னேனும்
பிறப்பறுப் பாயெம் பெருமானே

2. பெரியோன் ஒருவன் - குருவாகவந்த பெரியவன். கண்டு கொள் என்று - சின்முத்திரையைக் கண்டுகொள் என்று. அன்று - ஆட்கொண்ட அன்றைக்கு.

3. உயிர் உண்கின்ற - சீவபோதத்தை அழிக்கின்ற.

முத்தனை யானே மணியனை யானே
முதல்வனே முறையோவென்
றெத்தனை யானும் யான்றொடர்ந் துன்னை
இனிப்பிரிந் தாற்றேனே. 4

601 காணும தொழிந்தேன் நின்றிருப் பாதம்
கண்டுகண் களிகூரப்
பேணும தொழிந்தேன் பிதற்றும தொழிந்தேன்
பின்னையெம் பெருமானே
தாணுவே யழிந்தேன் நின்னினைந் துருகுந்
தன்மையென் புன்மைகளாற்
காணும தொழிந்தேன் நீயினிவரினுங்
காணவு நாணுவனே. ௫

602 பாற்றிரு நீற்றெம் பரமனைப்
பரங்கரு ணையோடு மெதிர்ந்து
தோற்றிமெய் யடியார்க் கருட்டுறை யளிக்குஞ்
சோதியை நீதியிலேன்
போற்றியென் னமுதே யெனநினைந் தேத்திப்
புகழ்ந்தழைத் தலறியென்னுள்ளே
ஆற்றுவ னாக வுடையவ னேயெனை
ஆவவென் றருளாயே. 6

திருச்சிற்றம்பலம்

---

4. பத்து - பற்று; மரூஉ. எத்தனையானும் - எவ்வளவும்.

5. புன்மை - இழிதகைமை. பேணுதல் - வணங்குதல்.

6. பால் திருநீறு - பால்போலும் திருநீறு. ஆற்றுவன் ஆக - ஆறியிருப்பேனாக.

உ
சிவமயம்

# 45. யாத்திரைப்பத்து

## [அநுபவாதீதமுரைத்தல்]

திருத்தில்லையில் அருளியது

**[தில்லையில் எழுந்தருளியிருக்கின்ற பொழுது, தம்மைப் போல உள்ள முருகும் அடியார் பலரையும் அழைத்து, 'இந்த பொய் மாயப் பிறவியை விட்டுத் திருவடிக்குப் போகுங்காலம் வந்துவிட்டது. வாருங்கள்' என்று கூப்பிடுமுறையில் யாத்திரைப்பத்தை அருளிச்செய்கின்றார்.]**

**ஆசிரியவிருத்தம்**

திருச்சிற்றம்பலம்

**603** பூவார் சென்னி மன்னனெம்
புயங்கப் பெருமான் சிறியோமை
ஓவா துள்ளங் கலந்துணர்வாய்
உருக்கும் வெள்ளக் கருணையினால்
ஆவா வென்னப் பட்டன்பாய்
ஆட்பட் டீர்வந் தொருப்படுமின்
போவோங் காலம் வந்ததுகாண்
பொய்விட் டுடையான் கழல்புகவே. 1

---

1. புயங்கம் - பாம்பு. ஓவாது - இடைவிடாது. ஒருப்படுமின் - ஒன்றுசேருங்கள்; காண் முன்னிலையசை.

604 புகவே வேண்டா புலன்களினீர்
புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்கவெல்லாம்
வேண்டா போக விடுமின்கள்
நகவே ஞாலத் துள்புகுந்து
நாயே யனைய நமையாண்ட
தகவே யுடையான் தனைச்சாரத்
தளரா திருப்பார் தாந்தாமே. 2

605 தாமே தமக்குச் சுற்றமும்
தாமே தமக்கு விதிவகையும்
யாமா ரெமதார் பாசமார்
என்ன மாயம் இவைபோகக்
கோமான் பண்டைத் தொண்டரொடும்
அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு
போமா றமைமின் பொய்நீக்கிப்
புயங்க னாள்வான் பொன்னடிக்கே. 3

606 அடியா ரானீர் எல்லீரும்
அகல விடுமின் விளையாட்டைக்
கடிசே ரடியே வந்தடைந்து
கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பைச்

---

2. புலன்கள் இல் நீர் - அறிவற்ற நீங்கள். மிக்க எல்லாம் - குற்றமான எல்லாவற்றையும். நக - விளங்க. தகவு - தகுதி.

3. விதிவகை - விதிக்கும் வகையினர். கோமான் - தலைவன். அவன்தன் குறிப்பு - அவன் இருந்து காட்டியநிலை.

செடிசே ருடலைச் செலநீக்கிச்
சிவலோ கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன்
பூவார் கழற்கே புகவிடுமே. 4

607 விடுமின் வெகுளி வேட்கைநோய்
மிகவோர் காலம் இனியில்லை
உடையா னடிக்கீழ்ப் பெருஞ்சாத்தோ
டுடன்போ வதற்கே யொருப்படுமின்
அடைவோம் நாம்போய்ச் சிவபுரத்துள்
அணியார் கதவ தடையாமே
புடைபட் டுருகிப் போற்றுவோம்
புயங்க ஞள்வான் புகழ்களையே. 5

608 புகழ்மின் தொழுமின் பூப்புனைமின்
புயங்கன் தாளே புந்திவைத்திட்
டிகழ்மின் எல்லா அல்லலையும்
இனியோ ரிடையூ றடையாமே
திகழுஞ் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்றாள் வணங்கிநாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே. 6

---

4. கடிசேர் அடி - மணம் பொருந்திய திருவடிமலர். கடைக்கொண்டிருமின் - கடைப்பிடியுங்கள். செடிசேர் உடல் - பாவத்தால் வந்த உடல்.

5. வெகுளி - கோபம். வேட்கை - ஆசை. சாத்து - கூட்டம் புடைபட்டு - பக்கத்திற்போய்.

6. புந்தி - புத்தி. அல்லல் - துன்பம். நிகழும் அடியார் - பழய அடியார்.

609 நிற்பார் நிற்கநில் லாவுலகில்
நில்லோம் இனிநாம் செல்வோமே
பொற்பால் ஒப்பாந் திருமேனிப்
புயங்க னாள்வான் பொன்னடிக்கே
நிற்பீர் எல்லாந் தாழாதே
நிற்கும் பரிசே யொருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தால்
பெறுதற் கரியன் பெருமானே. 7

610 பெருமான் பேரா னந்தத்துப்
பிரியா திருக்கப் பெற்றீர்காள்
அருமா லுற்றுப் பின்னைநீர்
அம்மா அழுங்கி அரற்றாதே
திருமா மணிசேர் திருக்கதவம்
திறந்த போதே சிவபுரத்துத்
திருமா லறியாத் திருப்புயங்கன்
திருத்தாள் சென்று சேர்வோமே. 8

---

7. நிற்பார் - வினைப்போகங்கழியாமையால் இவ்வுலகில் நிற்பவர்கள். பொற்பு - அழகு. பேழ்கணித்தல் - தன்னை மிகமதித்தல்.

8. மாலுற்று - மயங்கி. அழுங்கி - வருந்தி. திருமால் அறியாத் திருப்புயங்கன் திருத்தாள் - திருமால் தேவியாகியும் அடைய முடியாத திருத்தோளையும் பன்றியாய்த்தேடியும் அடையமுடியாத திருவடிகளையும்.

611 சேரக் கருதிச் சிந்தனையைத்
திருந்த வைத்துச் சிந்திமின்
போரிற் பொலியும் வேற்கண்ணாள்
பங்கன் புயங்கன் அருளமுதம்
ஆரப் பருகி ஆராத
ஆர்வங் கூர அழுந்துவீர்
போரப் புரிமின் சிவன்கழற்கே
பொய்யிற் கிடந்து புரளாதே. 9

612 புரள்வார் தொழுவார் புகழ்வாராய்
இன்றே வந்தா ளாகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார்
மதியுட் கலங்கி மயங்குவீர்
தெருள்வீ ராகில் இதுசெய்ம்மின்
சிவலோ கக்கோன் திருப்புயங்கன்
அருளார் பெறுவார் அகலிடத்தே
அந்தோ அந்தோ அந்தோவே. 10

திருச்சிற்றம்பலம்.

---

9. திருந்தவைத்து - மலவாதனை தாக்காதபடி தடுத்து. ஆர - நிறைய. போர - செல்ல.

10. மருள்வீர் - மயங்குவீர். அந்தோ இரக்கக்குறிப்பிடைச் சொல்.

உ

சிவமயம்

# 46. திருப்படையெழுச்சி

## [பிரபஞ்சப்போர்]

*திருத்தில்லையில் அருளியது*

**[தில்லையில் சிவனடியார்களாகிய சேனையை அழைத்து சேனாபதியாகிய திருவாதவூரர் படை எடுக்க உத்தரவிடும் திருப்படை எழுச்சியை அருளிச்செய்கிறார்.]**

**கலிவிருத்தம்.**

*திருச்சிற்றம்பலம்*

**613** ஞானவாள் ஏந்துமையர் நாதப் பறையறைமின்
மானமா ஏறுமையர் மதிவெண் குடைகவிமின்
ஆனநீற் றுக்கவசம் அடையப் புகுமின்கள்
வானவூர் கொள்வோம்நாம் மாயப்படை வாராமே. 1

**614** தொண்டர்காள்தூசிசெல்லீர் பத்தர்காள்சூழப்போகீர்
ஒண்டிறல் யோகிகளே பேரணி யுந்தீர்கள்
திண்டிறற் சித்தர்களே கடைக்கூழை செல்மின்கள்
அண்டர்நா டாள்வோம்நாம் அல்லற்படை வாராமே. 2

*திருச்சிற்றம்பலம்.*

---

1. ஞானவாள் ஏந்தும் - ஞானமாகிய வாளை ஏந்துங்கள். மானம் மா - பெரிய இடபம். வான ஊர் - வீட்டுலகம்.

2. தூசி - முன்படை. உந்தீர்கள் - செலுத்துங்கள்.

உ

சிவமயம்.

# 47. திருவெண்பா

## [அணைந்தோர்தன்மை]

*திருப்பெருந்துறையில் அருளியது*

**[அடிகள், ஆனந்தமயக்கமளித்த அத்தனுடைய பிரிவால் அத்தன் தமக்கு ஆற்றிய அருளிப்பாடுகள் யாவும் அநுபவ நிலையைப் பெருக்கத் திருப்பெருந்துறையில் திருவெண்பா வாகிய இதனை அருளிச்செய்தார்.]**

**நேரிசைவெண்பா.**

*திருச்சிற்றம்பலம்.*

**615** *வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்*
*பொய்யும் பொடியாகா தென்செய்கேன்—செய்ய*
*திருவார் பெருந்துறையான் தேனுந்து செந்தீ*
*மருவா திருந்தேன் மனத்து.* 1

---

1. பொய்-பொய்யான வாழ்வு. பொடி ஆகாதென்செய்கேன்-தூளாகாமல் இருக்கிறதே என்னசெய்வேன். வினைப்போகத்திற்காகக் கிடைத்த உடம்பும் வாழ்க்கையும் வீழ்ந்தாலன்றிப் பேரின்ப மெய்த முடியாமையின் இங்ஙனம் கூறினர்.

623 மூவரும் முப்பத்து மூவரும் மற்றொழிந்த
தேவரும் காணாச் சிவபெருமான்—மாவேறி
வையகத்தே வந்திழிந்த வார்கழல்கள் வந்திக்க
மெய்யகத்தே யின்பம் மிகும். 9

624 இருந்தென்னை யாண்டான் இணையடியே சிந்தித்
திருந்திரந்து கொள்நெஞ்சே யெல்லாம்—தருங்காண்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
மருந்துருவாய் என்மனத்தே வந்து. 10

625 இன்பம் பெருக்கி இருளகற்றி யெஞ்ஞான்றும்
துன்பந்தொடர்வறுத்துச்சோதியாய்-அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து. 11

திருச்சிற்றம்பலம்.

---

**9.** மூவர் - மால் அயன் உருத்திரன் என்பார். முப்பத்து மூவர் - பதினொருருத்திரர், பன்னிரண்டு சூரியர், இரண்டு அச்சுவினி தேவர், எட்டு வசுக்கள் ஆகிய முப்பத்துமூவர். மா - குதிரை.

10. இருந்து - வலியப்புகுந்திருந்து. மேய - விரும்பி எழுந்தருளிய.

11. இருள் - அஞ்ஞானம். தொடர்பு - தொடர்ச்சி.

616 ஆர்க்கோ அரற்றுகோ ஆடுகோ பாடுகோ
பார்க்கோ பரம்பரனே யென்செய்கேன்—தீர்ப்பரிய
ஆனந்த மாலேற்றும் அத்தன் பெருந்துறையான்
தானென்பார் ஆரொருவர் தாழ்ந்து. 2

617 செய்த பிழையறியேன் சேவடியே கைதொழுதே
உய்யும் வகையின் உயிர்ப்பறியேன்—வையத்
திருந்துறையுள் வேல்மடுத்தென் சிந்தனைக்கே
[கோத்தான்
பெருந்துறையில் மேய பிரான். 3

618 முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்னின்றான்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—தென்னன்
பெருந்துறையில் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரம் தீர்க்கும் மருந்து. 4

619 அறையோ அறிவார்க் கனைத்துலகும் ஈன்ற
மறையோனும் மாலுமால் கொள்ளும்—இறையோன்

---

2. ஆனந்தம் மால் - சிவானந்தமாகிற பித்து. ஆர்க்கோ - ஆரவாரிப்பேனோ.

3. உயிர்ப்பு - தோற்றம். வையத்து இருந்து உறையுள் வேல் என் சிந்தனைக்கே மடுத்து கோத்தான் எனக் கூட்டுக. உறையுள் வேல் என்றது இதுவரை மறைப்பிலிருந்த ஞானத்தை.

4. முன் நின்றான் - குருவாக முன்னே நின்றான். வருந் துயரம் - ஆகாமிய வினையாகிய துன்பம்.

பெருந்துறையுள் மேய பெருமான் பிரியா
திருந்துறையும் என்னெஞ்சத் தின்று. 5

620 பித்தென்னை யேற்றும் பிறப்பறுக்கும் பேச்சரிதாம்
மத்தமே யாக்கும்வந் தென்மனத்தை—அத்தன்
பெருந்துறையான்ஆட்கொண்டுபேரருளால்நோக்கும்
மருந்திறவாப் பேரின்பம் வந்து. 6

621 வாரா வழியருளி வந்தெனக்கு மாறின்றி
ஆரா வமுதாய் அமைந்தன்றே—சீரார்
திருத்தென் பெருந்துறையான் என்சிந்தை மேய
ஒருத்தன் பெருக்கும் ஒளி. 7

622 யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்
யாவர்க்குங் கீழாம் அடியேனை—யாவரும்
பெற்றறியா இன்பத்துள் வைத்தாய்க்கென்
[எம்பெருமான்
மற்றறியேன் செய்யும் வகை. 8

---

5. அறையோ - சொல்லவோ. மறையோன் - பிரமன். சொல்லவோ என்றது இறைவன் தன்மனத்து எழுந்தருளுவதைக் குறித்து எழுந்த பந்தயமொழி,

6. மருந்து - தேவாமுதம். இறவாப் பேரின்பம் - அழியாத இன்பம்.

7. வாராவழி - மீண்டுவாராதமுத்தி. மாறு இன்றி - பகை இன்றி. ஆரா அமுதாய் - உண்டு தெவிட்டாத அமுதமாய்.

8. தனது இழிதகைமையையும் தலைவனது மேன்மையையும் விளக்கியவாறு. மற்றறியேன்-பிரதியுபகாரம் ஒன்றனையும் அறியேன்.

உ

சிவமயம்

# 48. பண்டாயநான்மறை

## [அநுபவத்துக்கையமின்மை யுரைத்தல்]

*திருப்பெருந்துறையில் அருளியது*

[திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் அடிகள், குருநாதன் தமக்களித்த பேரின்பம் ஒருகாலைக்கொருகால் வளர்ந்து அநுபவமாதலைப் பாராட்டிப் பண்டாய நான் மறையை அருளிச்செய்தார். இது முதற்குறிப்பால் பெயர் பெற்றது.]

நேரிசை வெண்பா

*திருச்சிற்றம்பலம்*

**626** பண்டாய நான்மறையும் பாலணுகா மாலயனும்
கண்டாரும் இல்லைக் கடையேனைத்—தொண்டாகக்
கொண்டருளுங் கோகழியெங் கோமாற்கு நெஞ்சமே
உண்டாமோ கைம்மா றுரை. **1**

---

1. பண்டாய - பழமையாகிய. கோகழி - திருப்பெருந்துறை.

627 உள்ள மலமூன்றும் மாய உகுபெருந்தேன்
வெள்ளந் தரும்பரியின் மேல்வந்த—வள்ளல்
மருவும் பெருந்துறையை வாழ்த்துமின்கள் வாழ்த்தக்
கருவுங் கெடும்பிறவிக் காடு. 2

628 காட்டகத்து வேடன் கடலில் வலைவாணன்
நாட்டிற் பரிப்பாகன் நம்வினையை—வீட்டி
அருளும் பெருந்துறையான் அங்கமல பாதம்
மருளும் கெடநெஞ்சே வாழ்த்து. 3

629 வாழ்ந்தார்க ளாவாரும் வல்வினையை மாய்ப்பாரும்
தாழ்ந்துலகம் ஏத்தத் தகுவாரும்—சூழ்ந்தமரர்
சென்றிறைஞ்சி யேத்துந் திருவார் பெருந்துறையை
நன்றிறைஞ்சி யேத்தும் நமர். 4

---

2. மலம் மூன்று - ஆணவம், கன்மம், மாயை என்பன. வெள்ளந்தரும் வள்ளல் எனக் கூட்டுக. பிறவிக்காடு கருவுங்கெடும் - பிறவியாகிற காட்டினது வேரும் அற்றுப்போகும்.

3. இறைவன் அடியார்களை ஆட்கொள அவரவர்களுக்குத்தக பலவடிவங்கொள்ளும் பரிவைக் காட்டுகிறார். வீட்டி - அழித்து.

4. திருவடியைப்பெற்ற பெரியோர்களின் அநுபவநிலை இவை என்று அறிவிக்கப்படுகிறது. தகுவார் - தகுதியுடையவர்கள்.

630 நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி யெழுகோ கழிக்கரசைப்—பண்ணின்
மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண். 5

631 காணுங் கரணங்கள் எல்லாம்பே ரின்பமெனப்
பேணும் அடியார் பிறப்பகலக்—காணும்
பெரியானை நெஞ்சே பெருந்துறையில் என்றும்
பிரியானை வாயாரப் பேசு. 6

632 பேசும் பொருளுக் கிலக்கிதமாம் பேச்சிறந்த
மாசில் மணியின் மணிவார்த்தை—பேசிப்
பெருந்துறையே யென்று பிறப்பறுத்தேன் நல்ல
மருந்தினடி யென்மனத்தே வைத்து. 7

திருச்சிற்றம்பலம்

---

5. பண்ணின் மொழியாள் - உமாதேவி. கழியாதிருந்தவன் - நீங்காதிருந்தவன்.

6. காணும் கரணங்கள் - அறியும் கருவிகள். வாயார - வாய் நிறைய.

7. இலக்கிதம் - குறியாய் அமைந்தது; இலக்ஷிதம் என்பதன் திரிபு.

உ

சிவமயம்

# 49. திருப்படையாட்சி

## [சீவோபாதியொழிதல்]

திருத்தில்லையில் அருளியது.

[ஆனந்த நடராஜப்பெருமானுடைய தெரிசனத்தில் ஆழ்ந்திருந்த வாதவூரடிகள் 'இறைவன் வெளிப்பட்டுவந்து எனக்கு அருள்செய்வாரானால் என்னுடைய புறச்செயல்கள் அற்று, சிவானந்தமயமாகவே இருப்பேன்' என்று தெரிவிக்கின்றார்.]

ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

633 கண்க ளிரண்டும் அவன்கழல் கண்டு
களிப்பன ஆகாதே
காரிகை யார்கடம் வாழ்விலென் வாழ்வு
கடைப்படு மாகாதே
மண்களில் வந்து பிறந்திடு மாறு
மறந்திடு மாகாதே
மாலறி யாமலர்ப் பாதம் இரண்டும்
வணங்குது மாகாதே

பண்களி கூர்தரு பாடலொ டாடல்
பயின்றிடு மாகாதே
பாண்டிநன் னாடுடை யான்படை யாட்சிகள்
பாடுது மாகாதே
விண்களி கூர்வதோர் வேதகம் வந்து
வெளிப்படு மாகாதே
மீன்வலை வீசிய கானவன் வந்து
வெளிப்படு மாயிடிலே. 1

634 ஒன்றினொ டொன்றுமோர் ஐந்தினொ டைந்தும்
உயிர்ப்பறு மாகாதே
உன்னடி யாரடி யாரடி யோமென
உய்ந்தன வாகாதே
கன்றை நினைந்தெழு தாயென வந்த
கணக்கது வாகாதே
காரண மாகும நாதி குணங்கள்
கருத்துறு மாகாதே
நன்றிது தீதென வந்த நடுக்கம்
நடந்தன வாகாதே
நாமுமே லாமடி யாருட னேசெல
நண்ணுறு மாகாதே

---

1. காரிகையார் - பெண்கள். வாழ்வில் - வாழ்வினால். மறந்திடுதல் - கடவுள் திருவடியை மறத்தல். படையாட்சி - படையினது வீரச்செயல்கள். வேதகம் - வேறுபடுத்திக்காட்டும் தன்மை. கானவன் - வலைஞன்.

என்றுமெ னன்பு நிறைந்த பராவமு
தெய்துவ தாகாதே
ஏறுடை யானெனை யாளுடை நாயகன்
என்னுள் புகுந்திடிலே. 2

635 பந்த விகார குணங்கள் பறிந்து
மறிந்திடு மாகாதே
பாவனை யாய கருத்தினில் வந்த
பராவமு தாகாதே
அந்தமி லாத அகண்டமும் நம்முள்
அகப்படு மாகாதே
ஆதி முதற்பர மாய பரஞ்சுடர்
அண்ணுவ தாகாதே
செந்துவர் வாய்மட வாரிட ரானவை
சிந்திடு மாகாதே
சேலன கண்க ளவன்றிரு மேனி
திளைப்பன வாகாதே

---

2. ஒன்றினொடு ஒன்று - உயிரோடுகூடிய உடல். ஐந்தினொடு ஐந்து - ஐம்பொறிகளோடு அவற்றிற்கு உரிய புலன்கள். உயிர்ப்பு அறும் - கலந்து இயங்குவது அற்றுப்போகும். அன்றி இப்பகுதிக்கு முறையே சித்து அசித்து என்றும், தசேந்திரியங்கள் என்றும், பிழைத்தல் அறும் என்றும் பொருள் காண்பாரும் உளர். அனாதியேபற்றியிருக்கும் முக்குணங்கள் மனம் முதலியவற்றிற்குக் காரணமாதலின் காரணமாகும் அனாதி குணம் என்றார். நடுக்கம் - கலக்கம், பராவு அமுது - தோத்திரிக்கப்படுகின்ற அமுதையொத்தவன்.

இந்திர ஞால இடர்ப்பிற வித்துயர்
ஏகுவ தாகாதே
என்னுடை நாயக னாகிய ஈசன்
எதிர்ப்படு மாயிடிலே. 3

636 என்னணி யார்முலை ஆகம் அளைந்துடன்
இன்புறு மாகாதே
எல்லையின் மாக்கரு ணைக்கட லின்றினி
தாடுது மாகாதே
நன்மணி நாதம் முழங்கியென் உள்ளுற
நண்ணுவ தாகாதே
நாதன் அணித்திரு நீற்றினை நித்தலும்
நண்ணுவ தாகாதே
மன்னிய அன்பரில் என்பணி முந்துற
வைகுவ தாகாதே
மாமறை யும்மறி யாமலர்ப் பாதம்
வணங்குது மாகாதே

---

3. பந்தவிகாரகுணங்கள் - பாசத்தால் விளைந்த வேற்றுமைப் பட்ட குணங்கள். பறிந்து மறிந்திடும் - வேரற்றுத் தலைகீழாகமாறும். பாவனை - கடவுளை நெஞ்சத்துள்வைத்துப் பாவிப்பது. இப்பகுதியால், இடைவிடாதபாவனையால் நெஞ்சத்து எழும் கற்பனைக்காட்சியும் அதனால் உண்டாகும் அநுபவமும் உண்டாகா என்கின்றார். அண்ணுவது - அணுகுவது. துவர் - பவழம். சேல் அன - சேல்மீனையொத்த. இந்திரஞாலம் - இந்திரஜாலம்.

இன்னியல் செங்கழு நீர்மலர் என்றலை
எய்துவ தாகாதே
என்னையு டைப்பெரு மானருள் ஈசன்
எழுந்தருளப் பெறிலே. 4

637 மண்ணினின் மாயை மதித்து வகுத்த
மயக்கறு மாகாதே
வானவ ரும்மறி யாமலர்ப் பாதம்
வணங்குது மாகாதே
கண்ணிலி காலம் அனைத்தினும் வந்த
கலக்கறு மாகாதே
காதல்செ யும்மடி யார்மனம் இன்று
களித்திடு மாகாதே
பெண்ணலி யாணென நாமென வந்த
பிணக்கறு மாகாதே
பேரறி யாத அனேக பவங்கள்
பிழைத்தன வாகாதே
எண்ணிலி யாகிய சித்திகள் வந்தெனை
எய்துவ தாகாதே
என்னையு டைப்பெரு மானருள் ஈசன்
எழுந்தரு ளப்பெறிலே. 5

4. அணி - ஆபரணம். ஆகம் - மார்பு. அளைந்து - கலந்து. **நன்மணிநாதம் என் உள்ளுற முழங்கி - நல்ல மணி ஓசை என்னுள்ளே முழங்கி.**

5. மதித்து - கருதி. கண் இலி - கணக்கற்ற. **கண்ணுதல் - எண்ணுதல். பவம் - பிறப்பு.**

638 பொன்னிய லுந்திரு மேனிவெண் ணீறு
பொலிந்திடு மாகாதே
பூமழை மாதவர் கைகள் குவிந்து
பொழிந்திடு மாகாதே
மின்னியல் நுண்ணிடை யார்கள் கருத்து
வெளிப்படு மாகாதே
வீணை முரன்றெழும் ஓசையில் இன்பம்
மிகுத்திடு மாகாதே
தன்னடி யாரடி யென்றலை மீது
தழைப்பன வாகாதே
தானடி யோமுட னேயுய வந்து
தலைப்படு மாகாதே
இன்னியம் எங்கும் நிறைந்தினி தாக
இயம்பிடு மாகாதே
என்னையு மாளுடை யீசனென் அத்தன்
எழுந்தரு ளப்பெறிலே. 6

639 சொல்லிய லாதெழு தூமணி யோசை
சுவைதரு மாகாதே
துண்ணென என்னுளம் மன்னிய சோதி
தொடர்ந்தெழு மாகாதே

6. கைகள் குவிந்து - அஞ்சலியாகி. தனக்குள் எழும் பராநத இன்பம் வீணையிலிருந்து எழுகின்ற ஓசையைக்காட்டிலும் மிகுதியானது என்பதை விளக்கியவாறு. தழைப்பன - மேன்மேலும் விளங்குவன. இன் இயம் - இனிய வாத்தியம்.

பல்லியல் பாய பரப்பற வந்த
பராபர மாகாதே
பண்டறி யாத பரானுப வங்கள்
பரந்தெழு மாகாதே
வில்லியல் நன்னுத லார்மயல் இன்று
விளைந்திடு மாகாதே
விண்ணவ ரும்மறி யாத விழுப்பொருள்
இப்பொரு ளாகாதே
எல்லையி லாதன எண்குண மானவை
எய்திடு மாகாதே
இந்துசி காமணி யெங்களை யாள
எழுந்தரு ளப்பெறிலே. 7

சங்கு திரண்டு முரன்றெழும் ஓசை
தழைப்பன வாகாதே
சாதிவி டாத குணங்கள்நம் மோடு
சலித்திடு மாகாதே
அங்கிது நன்றிது நன்றெனும் மாயை
அடங்கிடு மாகாதே
ஆசையெ லாம்அடி யாரடி யோமெனும்
அத்தனை யாகாதே

---

7. சொல் இயலாது - சொல் ஓசை கலவாது. பரப்பு - விரிவு. பரானுபவங்கள் - மேலான அனுபவங்கள். விழுப்பொருள் - பெருமையையுடைய பொருள். இந்து சிகாமணி - சந்திரனைத் தலையிற் சூடியவர்.

செங்கய லொண்கண்ம டந்தையர் சிந்தை
திளைப்பன வாகாதே
சீரடி யார்கள் சிவானுப வங்கள்
தெரிந்திடு மாகாதே
எங்கு நிறைந்தமு தூறுப ரஞ்சுடர்
எய்துவ தாகாதே
ஈறறி யாமறை யோனெனை யாள
எழுந்தரு ளப்பெறிலே. 8

திருச்சிற்றம்பலம்.

8. திரண்டு - ஒன்றுகூடி. சாதிவிடாத குணங்கள் - சாதியைப் பற்றி விடாத குணங்கள். அமுது ஊறு பரஞ்சுடர் - அமுதத்தை ஒத்து இனிக்கின்ற பேரொளி.

உ

சிவமயம்

# 50. ஆனந்தமாலை

## [சிவாநுபவவிருப்பம்]

*திருத்தில்லையில் அருளியது*

**[அடிகள் தில்லையில் எழுந்தருளியிருக்குங் காலத்திலே சிவாநுபவ விருப்பம் மீதூர ஆனந்தமாலையாக இதனை அருளிச்செய்கிறார்.]**

**ஆசிரியவிருத்தம்**

*திருச்சிற்றம்பலம்*

**641** மின்னே ரனைய பூங்கழல்கள்
அடைந்தார் கடந்தார் வியனுலகம்
பொன்னே ரனைய மலர்கொண்டு
போற்றா நின்றார் அமரரெல்லாம்
கன்னே ரனைய மனக்கடையாய்க்
கழிப்புண் டவலக் கடல்வீழ்ந்த
என்னே ரனையேன் இனியுன்னைக்
கூடும் வண்ணம் இயம்பாயே. 1

1. மின் ஏர் அனைய - மின்னின் அழகையொத்த. கடையாய் - கடைப்பட்டவனாய். அவலக்கடல் - துன்பக்கடல். என் நேர் அனையேன் - எனக்கு நானே நிகர்த்தவனாகிய நான்.

**642** என்னு லறியாப் பதந்தந்தாய்
யான தறியா தேகெட்டேன்
உன்னு லொன்றுங் குறைவில்லை
உடையா யடிமைக் காரென்பேன்
பன்னு ளுன்னைப் பணிந்தேத்தும்
பழைய அடிய ரொடுங்கூடா
தென்னுயகமே பிற்பட்டிங்
கிருந்தேன் நோய்க்கு விருந்தாயே. 2

**643** சீல மின்றி நோன்பின்றிச்
செறிவே யின்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச்
சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி
வாரா வுலக நெறியேறக்
கோலங் காட்டி யாண்டானைக்
கொடியேன் என்றே கூடுவதே. 3

---

2. என்னால் அறியாப்பதம் - சிற்றறிவையுடைய என்னால் அறியப்படாத பதவியை. நாயகம் - தலைவன்.

3. சீலம் - ஒழுக்கம். நோன்பு - விரதம். செறிவு - தோய்வு. தோலின்பாவை - தோற்பொம்மை. கோலம் காட்டி - குருவடிவான அழகையும் காட்டி.

644 கெடுவேன் கெடுமா கெடுகின்றேன்
கேடி லாதாய் பழிகொண்டாய்
படுவேன் படுவ தெல்லாநான்
பட்டாற் பின்னைப் பயனென்னே
கொடுமா நரகத் தழுந்தாமே
காத்தாட் கொள்ளுங் குருமணியே
நடுவாய் நில்லா தொழிந்தக்கால்
நன்றோ எங்கள் நாயகமே. 4

645 தாயாய் முலையைத் தருவானே
தாரா தொழிந்தாற் சவலையாய்
நாயேன் கழிந்து போவேனோ
நம்பி யினித்தான் நல்குதியே
தாயே யென்றுன் தாளடைந்தேன்
தயாநீ யென்பால் இல்லையே
நாயேன் அடிமை யுடனாக
ஆண்டாய் நான்றான் வேண்டாவோ. 5

---

4. கெடுமா கெடுகின்றேன் என்பது கேட்டிலும் நினது நியதிப்படியே ஒழுகுகின்றேன் என்பதாம். படுவது - அடைவது.

5. சவலை - பாலில்லாக் குழந்தை. வேண்டாவோ - ஆட்கொண்ட பிறகு இவ்வடிமை வேண்டுவதில்லையோ.

646 கோவே யருள வேண்டாவோ
    கொடியேன் கெடவே யமையுமே
ஆவா என்னா விடிலென்னை
    அஞ்சேல் என்பார் ஆரோதான்
சாவா ரெல்லாம் என்னளவோ
    தக்க வாறன் றென்னாரோ
தேவே தில்லை நடமாட
    திகைத்தேன் இனித்தான் தேற்றாயே. 6

647 நரியைக் குதிரைப் பரியாக்கி
    ஞால மெல்லாம் நிகழ்வித்துப்
பெரிய தென்னன் மதுரையெல்லாம்
    பிச்ச தேற்றும் பெருந்துறையாய்
அரிய பொருளே அவிநாசி
    யப்பா பாண்டி வெள்ளமே
தெரிய வரிய பரஞ்சோதீ
    செய்வ தொன்றும் அறியேனே. 7

திருச்சிற்றம்பலம்.

---

6. கெடவே அமையுமே - கெட்டுப்போதலைப் பொருந்துமோ. ஆவா - ஆ ஆ என இருவகையாகப் பிரித்துப் பொருள்கொள்ளலாம். சாவார் எல்லாம் - பயனின்றி இறப்பவர் எல்லாரும்.

7. குதிரைப்பரி - குதிரையாகிய விரைந்த செலவினையுடைய ஊர்தி. மதுரை எல்லாம் பிச்சது ஏற்றும் - மதுரை முழுவதையும் திகைக்கச்செய்யும்.

உ

சிவமயம்

# 51. அச்சோப்பதிகம்

## [அநுபவ வழியறியாமை]

திருத்தில்லையில் அருளியது

[இதுவும் அடிகள் தில்லையில் எழுந்தருளியிருந்த காலத்து இறைவன் தன்னைச் சிவமாக்கியாட்கொண்டபேரருட்டிறத்தை வியந்து இத்தகையபேற்றினைப் பெறவல்லார் யார் என அச்சோப்பதிகத்தை அருளிச்செய்தார்.]

கலிவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

648 முத்திநெறி யறியாத
மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்துப்
பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச்
சிவமாக்கி யெனையாண்ட
அத்தனெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 1

---

1. மூர்க்கர் - அகங்காரிகள். பாறும் வண்ணம் - சிதறும்படி. சித்தமலம் அறுவித்து - பாசக்ஷயம்பண்ணி.

649 நெறியல்லா நெறிதன்னை
நெறியாக நினைவேனைச்
சிறுநெறிகள் சேராமே
திருவருளே சேரும்வண்ணம்
குறியொன்றும் இல்லாத
கூத்தன்றன் கூத்தையெனக்
கறியும்வண்ணம் அருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 2

650 பொய்யெல்லாம் மெய்யென்று
புணர்முலையார் போகத்தே
மையலுறக் கடவேனை
மாளாமே காத்தருளித்
தையலிடங் கொண்டபிரான்
தன்கழலே சேரும்வண்ணம்
ஐயனெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 3

2. நெறியல்லா நெறி - புறச்சமயச் சிறுநெறி. குறி - திருவுருவம்.

3. பொய் - மாயையின் விளைவாகிய தனு கரண புவன போகங்கள்.

651 மண்ணதனிற் பிறந்தெய்த்து
மாண்டுவிழக் கடவேனை
எண்ணமிலா அன்பருளி
யென்னையாண்டிட் டென்னையுந்தன்
சுண்ணவெண்ணீ றணிவித்துத்
தூய்நெறியே சேரும்வண்ணம்
அண்ணலெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 4

652 பஞ்சாய அடிமடவார்
கடைக்கண்ணால் இடர்ப்பட்டு
நெஞ்சாய துயர்கூர
நிற்பேனுன் அருள்பெற்றேன்
உய்ஞ்சேனுன் உடையானே
யடியேனை வருகவென்
றஞ்சேலென் றருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 5

---

4. எய்த்து - இளைத்து. அன்பு அருளி - அன்பைக்கொடுத்து, தூய் நெறி - சிவ நெறி.

5. பஞ்சாய அடி - பஞ்சுபோலும் அடி. அஞ்சேல் என்று அருளியது - அபயம் அளித்தது.

653 வெந்துவிழும் உடற்பிறவி
மெய்யென்று வினைபெருக்கிக்
கொந்துகுழற் கோல்வளையார்
குவிமுலைமேல் வீழ்வேனைப்
பந்தமறுத் தெனையாண்டு
பரிசறவென் றுரிசுமறுத்
தந்தமெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 6

654 தையலார் மையலிலே
தாழ்ந்துவிழக் கடவேனைப்
பையவே கொடுபோந்து
பாசமெனுந் தாழுருவி
உய்யுநெறி காட்டுவித்திட்
டோங்காரத் துட்பொருளை
ஐயனெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 7

---

6. வெந்து விழும் உடல் - முதிர்ந்து கீழேவிழுகின்ற உடல். **வினைபெருக்கி** - ஆகாமிய வினைகளைப் பெருகச்செய்து. **கொந்து** - **கொத்து. கோல்வளை** - திரண்ட வளையல்கள். பரிசு அற - ஆன்ம போதங் கெட. அந்தம் - முடிவான வீடுபேறு.

7. பைய - மெதுவாக. தாழ் - தாழ்ப்பாள். உருவி - நீக்கி. **ஓங்காரத்து உட்பொருளை** - பிரணவபஞ்சாக்கரத்தின் வாச்சியமாகிய **கருத்தை.**

655 சாதல்பிறப் பென்னுந்
தடஞ்சுழியில் தடுமாறிக்
காதலின்மிக் கணியிழையார்
கலவியிலே விழுவேனை
மாதொருகூ றுடையபிரான்
தன்கழலே சேரும்வண்ணம்
ஆதியெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 8

656 செம்மைநலம் அறியாத
சிதடரொடுந் திரிவேனை
மும்மைமலம் அறுவித்து
முதலாய முதல்வன்றான்
நம்மையுமோர் பொருளாக்கி
நாய்சிவிகை யேற்றுவித்த
அம்மையெனக் கருளியவா
றார்பெறுவார் அச்சோவே. 9

திருச்சிற்றம்பலம்.

---

8. தடம் சுழி - பெரிய சுழி. இறைவன், மாதராசையில்விழ இருந்த என்னை மாதொருபாகனாக வந்து ஆட்கொண்டது, மானைக் காட்டி மானைப்பிடிப்பதுபோலாயிற்று என்பதாம்.

9. செம்மை நலம் - வீட்டின்பம். 'செம்மையேயாய சிவபதம்' என்பது நினைவூட்டத்தக்கது. சிதடர் - மூடர். முதலாய முதல்வன் - சித்தசித்துக்களுக்குக் கருவியாயிருக்கின்ற சிவம்.

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

[எண் – பாட்டு எண்]

# அரும்பதமுதலியவற்றின் அகராதி

[எண் - பாட்டு எண்]

உ

குருபாதம்

# தருமபுர ஆதீனப் பணிகள்.



1. தேவாரபாடசாலை நிறுவித் தெய்வத் தமிழ் வளர்ப்பது.

2. சிவாகம பாடசாலை வைத்துத் திருக்கோயில் பூசை முறைகளைப் பயிற்றுவிப்பது.

3. சிவஞான நூல்களைத் தெளிவுற அச்சிட்டு வழங்குவது.

4. சமய நுணுக்கங்களை நூல்களாக வெளியிடுவது.

5. தலங்கள்தோறும் திருப்பதிகங்கள் உரையுடன் வெளியிடுவது.

6. அறிஞரைக் கொண்டு ஆலயம் தோறும் அறவுரைவழங்குவது.

7. பிரசார வாகனத்தின் மூலம் தமிழ்நாடெங்கும் சமயம் வளர்ப்பது.

8. ஆங்கிலக்கலாசாலைகளில் தமிழ்ப்பரிசு அமைப்பது.

9. ஆதீனக்கோயில்தோறும் பண்ணிசைத் தமிழ் வளர்ப்பது.

10. தமிழ்க்கல்லூரி நிறுவி வித்துவான் தேர்விற் கனுப்புவது.

11. வடமொழிக் கல்லூரி நிறுவிச் சிரோமணித் தேர்விற்கனுப்புவது.

12. ஏழிசையும் இனிதோங்க இசைப்பிரிவுகள் அமைப்பது.

13. நூல் ஆராய்ச்சிகள் எழுதுவித்து வழங்குவது.

14. விஞ்ஞான மெய்ஞ்ஞான நூல்களை வெளியிட்டு வழங்குவது.

15. சமய நூல்களைத் தக்கமுறையில் வெளியிடுவது.

16. "ஞானசம்பந்தம்" என்னும் மாதப்பத்திரிகை வாயிலாக சமயஉண்மைகளை அறிவுறுத்துவது.

17. சமயக் கூட்டங்களுக்குத் தக்கன செய்வது.

18. தமிழ்ப்பணி சமயப்பணி செய்பவர்க்குதவுவது.

19. தமிழ்நாட்டுத் தல வரலாறுகளை எழுதுவித்து வழங்குவது.

20. புத்தகசாலையமைத்துப் பழந்தமிழ் நூல்களைப் பாதுகாப்பது.

21. நாடோறும் ஹரிஜன மாணவர்களுக்கு அன்ன மளிப்பது.

22. பொருளும் புத்தகமும் அளித்து ஏழை மாணவர் களுக்கு உதவுவது.

23. மாயூரத்தில் பிரசவ ஆஸ்பத்திரி கட்டிவருவது.

24. குடிமக்கட்கு அடிக்கடி எண்ணெய் முழுக்கும் அன்னமும் அளித்து வருவது.

25. காந்தி நிதி, ஹரிஜன பண்டு, அகதிகள் நிவாரணநிதி, காசநோய் ஆஸ்பத்திரி உதவி நிதி முதலிய பற்பல பொதுஸ்தாபனங்கட்குப் பெருந்தொகையளிப்பது முதலியன.



